ஸ்ரீ
# ரமண ஞான போதம்

## ஏழாம் பாகம்

# உபதேச விளக்கம்
## (முதற் பிரிவு)

ஸ்ரீ முருகனர்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# ரமண ஞான போதம்

## ஏழாம் பாகம்

## உபதேச விளக்கம்

(முதற் பிரிவு)

இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்

பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1994

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை,
திருவண்ணாமலை-606 603, தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Arunachalaramana Nilayam,
11, Sri Ramana Nagar,
Tiruvannamalai-606 603, Tamil Nadu.

Ramana Kendra,
No. 11, C. P. Ramaswami Iyer Road,
Madras-600 018.

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the Government of India, Ministry of Education & Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied by the Government of India at concessional rates.

அச்சிட்டோர்:
விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பதிப்புரை

**ஸ்ரீ ரமணஞான போதம்** என்ற ஒன்பது பாகம் கொண்ட மாபெரும் நூலின் ஏழாவது பாகமாக வெளிவரும் இந்த **உபதேச விளக்கம்** முதற் பிரிவு, ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் நீண்ட கால நண்பர் தவத்திரு சாது ஓம் சுவாமிகளாலேயே பொருள் கருதித் தொகுக்கப்பட்டு, உரிய அத்தியாயத் தலைப்புகளும் தரப்பெற்ற நிலையில் இருந்தது. அப் பெரியார் மறைவின் பிறகு ஸ்ரீ N. T. கணேச பாஸ்கரன் அவர்களும், பேராசிரியர் K. சுப்ரமணியன் அவர்களும், ஸ்ரீ M. கோவிந்தராஜன் அவர்களும், ஸ்ரீ N. சங்கரன் அவர்களும் செய்யுள்களை உருவம் கருதி ஒவ்வொரு தலைப்பின் கீழ் வரிசைப்படுத்தி பதிப்பு வேலையைச் செய்து முடித்துள்ளனர். அவர்களுக்கும் இத்திருப்பணியில் உடன் உழைத்த மற்ற அன்பர்களுக்கும் தில்லி ரமணகேந்திரத்தின் நன்றி.

3467 செய்யுள்களைக் கொண்ட **உபதேசவிளக்கம்** என்ற இரண்டு பிரிவுகளும், **ஞான போதத்தின்** ஏழாவது எட்டாவது பாகங்களாக வெளிவர இருக்கின்றன. இம் முதற் பிரிவில் 'அறிவுரை' என்ற பொருளும், அடுத்துவரும் இரண்டாம் பிரிவில் 'உபாய முரைத்தல்', 'உறுதி யுரைத்தல்', 'இலக்கணம் கூறல்', 'கதம்பக் கருத்து', 'முடிவுரை' என்ற பொருளும் அமைந்துள்ளன.

**ஸ்ரீ ரமண ஞான போதம்** என்னும் இந்நூல் நமது மதிப்பிற்குரிய அமரர் பேராசிரியர் K. சுவாமிநாதன் அவர்களின் தளர்விலாத பெரும் முயற்சியின் காரணமாகவே இப் புத்தக வடிவம் பெற்று வெளிவந்துள்ளது என்று சொன்னால் அது மிகையாகாது. துரதிருஷ்ட வசமாக இந்த ஏழாவது பாகம் அச்சிட்டு வெளிவருவதற்குச் சற்று முன்னர், அதாவது 19-5-1994 வியாழனன்று, நமது மதிப்பிற்குரிய பேராசிரியர் அவர்கள் தமது முதிர்ந்த பிராயமான 97வது வயதில் மிக அமைதியாக ஸ்ரீ அருணாசலரமணன் திருவடி சேர்ந்தார்.

பல ஆண்டு காலமாக அவர் ஸ்ரீ முருகனார் சுவாமிகளுக்கும் ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளுக்கும் உற்ற துணையாக இருந்து வந்தார். அவருக்கு முன்னதாக ஸ்ரீ ரமணபாதானந்தர் செய்ததைப் போன்றே, பேராசிரியர் அவர்களும் ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் அநேக நூல்களைப் பதிப்பித்து வெளியிடுவதில் முக்கிய பங்கு ஆற்றியுள்ளார். 1960, 1961 ஆம் ஆண்டுகளில் **ஸ்ரீ ரமணானுபூதி** பாகம் I, II ஐப் பதிப்பித்து வெளியிட்டார் பிறகு 1971, 1974 ஆம் ஆண்டுகளில் அவர் ஸ்ரீ ரமணாச்ரம நிர்வாகத்தினரே **குருவாசகக் கோவை, ஸ்ரீ ரமண சந்நிதி** முறை ஆகிய நூல்களை மீண்டும் அச்சிட்டு வெளியிட வேண்டியதின் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் அவர்களுக்கு உணர்த்தி, ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் விருப்பப்படியே இவ்விரு பெரும் நூல்களையும் பதிப்பிக்கும் பணியை ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளிடமே விடவேண்டும் என்றும் வற்புறுத்தினார். **குருவாசகக் கோவை**க்கு ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் வழங்கியுள்ளதும், ஸ்ரீ முருகனார் சுவாமிகளால் மிகச் சிறந்ததாகவும் பயன்மிக்கதாயும் கருதப் பட்டதுமான அரிய உரையை தில்லி ரமண கேந்திரம் வெளியிடுமாறு செய்ய பேராசிரியர் பெரும் முயற்சி மேற்கொண்டார். மேலும் இறுதியாக ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் இதுவரை வெளியிடப்படாத அனைத்துச் செய்யுள்களையும் ஒன்று திரட்டி **ஸ்ரீ ரமண ஞான போதம்** என்னும் ஒன்பது பாகங்கள் அடங்கிய இந்நூல் வரிசையை வெளியிட வேண்டி அவர் அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார்.

இம்மாபெரும் நூல்வரிசையை வெளியிடத் தொடங்குவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே ஸ்ரீ முருகனார் சுவாமிகளுடைய இன்னும் பதிப்பிக்கப்படாத பல்லாயிரம் செய்யுள்களையும் திரட்டிச் சேகரித்து பாதுகாத்து அவற்றைப் புத்தக வடிவிற்கேற்ப ஒழுங்குபடுத்தும் வேலையில் அன்னாருக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்ய வல்லவர் ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் ஒருவரே என்பதைச் சரியாகப் புரிந்து கொண்ட மிகச் சிலரில் பேராசிரியர் K. சுவாமிநாதன் அவர்கள் முதன்மையானவர். ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளைப் பலர் தவறாகப் புரிந்துகொண்டு அவரிடம் விரோதம் பாராட்டி வந்த அவ்வாண்டுகளில் பேராசிரியர் அவர்கள் ஸ்ரீ சுவாமிகளின் பக்கம் உறுதுணையாக நின்று ஸ்ரீ முருகனார் சுவாமிகளின்

விருப்பத்திற்கிணங்க கடுமையான எதிர்ப்புக்கிடையேயும் அவரது கையெழுத்துப் பிரதிகள் அனைத்தையும் ஸ்ரீ சுவாமிகளின் பொறுப்பில் ஒப்படைப்பதற்கு வகை செய்தார். இவ்வாறு பேராசிரியர் அவர்கள் நெடுகிலும் ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளுக்கு அளித்து வந்த உதவியாலும் பக்க பலத்தாலுமே இவ்வரிய நூல் புத்தக வடிவம் பெறவும் அதற்கு தில்லி ரமணகேந்திரம் ஒரு கருவியாய் இருக்கவும் சாத்தியமாயிற்று. இம்மாபெறும் நூலைப் பதிப்பித்து அதன் மூலம் ஸ்ரீ முருகனார் சுவாமிகளின் பல்லாயிரக்கணக்கான அரிய செய்யுள்களைப் பாதுகாத்து வருங்கால ரமண பக்தர்கள் சமுதாயம் பயன்பெறுமாறு வழங்கிய பேராசிரியரின் இவ்வரிய சேவையானது அவர் ஆற்றிய ஞான யக்ஞமாகும் என்பது முற்றிலும் உண்மையாகும். இதற்காக அவர் ஸ்ரீ பகவானின் பக்தர்களால் என்றென்றும் அன்புடனும் நன்றியுடனும் நினைவு கூறப்படுவார்.

இந்நூல் வரிசையின் எல்லாப் பாகங்களும் முழுதும் அச்சிட்டு வெளிவருவதைப் பார்க்க பேராசிரியர் சுவாமிநாதன் அவர்கள் உயிரோடு இருக்கவில்லையாலும், ஸ்ரீ சாது ஓம் சுவாமிகளின் மறைவுக்குப் பின்னரும் தமது வாழ்நாள் முடிந்த பிறகும் கூட இவ்வேலை தடையின்றி நடந்து முடிவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் உறுதி செய்திருந்தார். இவ்வேலையைச் செய்து முடிக்கும் பொறுப்பு ஸ்ரீ பகவானருளால் தில்லி ரமணகேந்திர நிர்வாகிகளான எமக்குக் கிட்டியதில் பெறுமை கொள்கிறோம்.

ஸ்ரீ ரமண கேந்திரம்,
புது தில்லி,
2-6-1994.

Dr. V. கௌரி சங்கர்
Vice-President.

# உள்ளுறை

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## ஏழாம் பாகம்

# உபதேச விளக்கம்

## முதற் பிரிவு

## அறிவுரை

—o—

### பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

(வெண்பா)

1. அசேடமெய்ஞ் ஞான வருட்பொலிவா லென்னுள்
விசேடமாப் பொங்க விழாச்சீர்—விசேடக்
கொடியேற்றி யென் னிதயக் கோயிலில்வாழ் கொற்றக்
குடையாற்கு வாழ்கசெங் கோல்.

(கொச்சகக் கலிப்பா)

2. செத்தே யொழிந்தேன் செருக்கான மோகத்தாற்
பொய்த்தேவு பேசிப் புலம்பலுற்றே னுள்ளத்து
மெய்த்தேவு தானா விளங்கலுற்ற சுத்தவருட்
சித்தாம் பரதெய்வத் தேற்றமே போற்றதுமே.

குறிப்பு :— மோகத்தாற் செத்தே யொழிந்தேன் எனக் கூட்டுக.

3. விரகறியா மத்த வெறியனேன் சுத்தப்
பரவெளியே யுள்ளமாய்ப் பற்றுவித்த வுன்னைக்
கரவுறுவெம் பாசக் கலக்கமற நாளும்
பரவுகின்றே னுன்சொரூபப் பாரம் மியமே.

குறிப்பு:—பாரம்மியம் - பரத்துவம்.

## 2. அவையடக்கம்

(வெண்பா)

4. சொன்னதையே சொல்லுங் கிளிப்பிள்ளை போலநான்
பன்னியதே பண்ணிப் பயிற்றலெவன்—மன்னியசுத்
தான்ம சொரூபஞா னைபவக் கேவலத்தில்
யான்மொழிய வேறுகல் லேன்.

(கொச்சகக் கலிப்பா)

5. யானெனதற் றேரிதயக் கின்பமெழப் பொங்குசிவ
மோனவருள் பெய்துமயங் கானந்த மூர்த்தியைநான்
ஊனைவகங் காரப்பா முந்தைசேர் வார்த்தையால்
வானளவப் போற்றி மகிழ்தலென்ன வெட்கமே.

## 3. நூற்பயன்

(வெண்பா)

6. திருத்தமா முண்மைத் தெளிவான விந்நூ
லருத்த முயிர்க்குறுதி யாகப்—பொருத்தமாச்
சிந்தித் துளத்தே தினைத்தலாற் சேர்ந்தொளிரும்
பந்தமற்ற வுண்மைப் பரம்.

## 4. மங்கலம்

(கொச்சகக் கலிப்பா)

7. கள்ளத்தோ ஞன கடுங்கள்ள யமன்வலியை
எள்ளித் தெழித்த விறைவனருட் காப்பான
உள்ளத்தே தம்மைமுற்ற வொப்படைத்தார் வாழ்
[வுறுதிக்
குள்ளத்தோ ஞன வுடையான்முற் றப்பொறுப்பே.

# நூல்

## 1. அகந்தை

(குறள்)

8. என்னைநீ கொல்லுமுன் முன்னின்றே யுனைக்கொல்வேன்
என்ன *வியம்புமகப் பேய்.

* இயம்பும் - இயம்புகின்றது.

(கொச்சகக் கலிப்பா)

9. மித்தையறி வான வெறிசே ரகந்தைநான்
சுத்தவறி வான சொரூபத்திற் கற்பனைகாண்;
நித்தியமா வுள்ள மெய்ந் நேயம் விளங்கலுறிற்
பொய்த்தொழியும் போதமறப் பொல்லாப் புலவுடலே.

## 2. அகம்

(குறள்)

10. *பொருள்வளக்கை வல்யம் புணர்வதுமெய்ஞ் ஞான
வருள்விளக்கஞ் சேர்ந்த வகம்.

* பொருள் - உண்மை.

## 3. நான்

(வெண்பா)

11. எல்லார் தமக்கு மியல்பாம் பொதுவான
நல்ல திருப்பெயர் நானென்று—நல்லோங்கு
யாரு மறிவ ரெனினுமதன் செம்பொருளைத்
தேருமவ ரேனோ சிலர்.

12. சிந்தையறப் புந்தியாற் றேறுங்கா லுள்ளத்தே
சொந்தமாம் போத சொருபமா—இந்த
வெனக்குள்ளே நானென் றிலகுவோ னந்தத்
தனக்குளுறை தானன்றோ தான்.

13. ஏனுநியா னென்ன வெழுங்கலக்கஞ் சீவர்க்
கனுதியா நீடு மவிச்சை—தனுதியல்யா
தென்றறியின் முக்காலு மில்லையா யவ்வவிச்சை
நன்றெளிருங் கேவலமே நாம்.

14. காணியாம் பல்லுலகக் காட்சிக்குங் கேவலக்கண்
காணியா மென்னருளே காப்பாக—ஆணியாய்
அத்துவித வுண்மையறி வாநானே தோன்றவிலப்
பொய்த்துவிதங் கட்கும் புகல்.

15. போதவருட் செம்பொருளாப் பொஙகு சொருபமே
வேத விழுப்பொருளா மேவுவது—பேதமனப்
புன்கலக்கம் போக்கிவருட் பூரணமா மோனவெளி
நன்கிலக்க மாவதே நாம்.

16. மனவுணர்வே மெய்யா மயங்கார் துரீய
மனுபவமாத் தேர்ந்த வறிஞர்—கனவுநன
வானவிட் சேடபத்தோ டாவரண நித்திரைதீர்
ஞானவருட் கேவலமே நாம்.

## 4. செருக்கு

(குறள்)

17. அனுதி மயலினின்றுண் டானதே ஜீவர்க்
கெனுதியா னென்னுஞ் செருக்கு.

18. ஆட்கொல்லி யானசெல் வத்தே அறவோர்க்கு
வேட்கையாற் சேரும் விபத்து.

## 5. அகங்கார தோஷம்

19. மோகக் கலக்கமா முப்புடிக்கு *நானென்னுந்
தேகச் செருக்கே முதல்.

* நானென்னுந் தேகச் செருக்கு - தேகமே நானெ
னுஞ் செருக்கு.

20. கல்லாத மோகவகங் கார முனைப்பேகாண்
பொல்லாத பாசப் புணர்ப்பு.

21. உன்மாத மானபா ழூத்தை யகந்தையே
புன்மாய மோகப் புணர்ப்பு.

22. மூளலுற்ற மோக வகந்தையே யாருயிர்க்குக்
காளகூ டப்பாழ்ங் கடு.

(வெண்பா)

23. கன்மசமு சாரக் கடற்கொந் தளிப்பிலுயிர்
துன்பமுற் றேங்கிச் சுழல்வதெவன்—தொன்மைசேர்
தேகமகம் புத்திச் செருக்கே சகலதுக்க
மோகங் களுக்கும் முளை.

குறிப்பு:—அகந்தை முனைப்பினின்றே அகில சோக மோகங்களும் முளைக்கின்றன என்பதாம்.

24. நானென்னும் மோக நனவசே ரகங்கார
ஊனமே நல்ல வுயிர்த்தொகையை—ஈனப்
பிறப்பிறப்பாத் துன்றும் பிரயச் சுழலூ
டுறப்புணர்ப்ப தாமோர் கரு.

25. எல்லாமே தானு வியல்சொருபப் பூரணமெய்
பொல்லாத மாயைப் புணர்ப்பாலே—அல்லாடிச்
சோரம் படவுடலிற் சூதாக நான்முனைத்தல்
ஓரம் படலா வுணர்.

(கொச்சகக் கலிப்பா)

26. மட்டுப் படாத மகத்தாம் பரமசிவம்
சுட்டப் படாத சொரூபமே யென்றோரார்
எட்டிப் பிடிக்கத்தா மெண்ணியெண்ணிக் கற்பனையாற்
கட்டப் படுதல் அகந்தைக் கலக்கமே.

27. புராதனமா வுள்ளவருட் பூரணமே யான
சொருப வுணர்வுத் துலக்கம்பா ழாகத்
திரோதமா வுற்ற செருக்கே சொருபத்
துரோகமா வுற்றகொ டுந் துட்டவகப் பேயே.

28. நயக்கலுறத் தக்கமெய்ஞ் ஞானசொரூ பக்கை
அயர்க்கலுற்று யோக வகப்பேய் வசத்தாற்
கயக்கமுறு காயக் கசத்தி லழுந்தும்
மயக்கமே யாணவப்பாழ்; மாற்றவல்லார் யாரே.

29. வாழ்வுக்கும் வாழ்வாக மன்னு மியல்வமைவு
தாழ்வுக்குந் தாழ்வான தனிமயத்தாற் கற்பனையின்
மாழ்குதற் றழுங்கி வருந்துவது பாழுடலூ
டாழ்வுற் றழுந்து மகங்கார மோகமே.

30. தன்னை யறியாத் தவறே மயக்கமனத்
தன்மையாம் பாசத் தடுமாற்றம்; பந்தமாப்
பின்னியபல் பேதவலைப் பேயுலக மாயத்துக்
கன்னதே மூல மலாற்பிறிதொன் றில்லையே.

31. ஞான வகந்தையுணர் வோய்ந்தாரே சேர்சொரூப
மோனஞா னானுபவ முத்திப்பே ரின்பநிலை
ஈனவகப் பேயரென் னென்னதவஞ் செய்தாலும்
தானறிய மாட்டார் தடுமாறும் பெற்றித்தே.

குறிப்பு:—மாட்டார் - வினைமுற்று வினையெச்சம்.

32. மைத்தவகங் கார மனக்கலக்கச் சுட்டறிவு
பைத்தியமோ கக்கற் பனஜாலம் போல்வதென
வித்தகமெய்ஞ் ஞான விளக்கத்தாற் காணளவும்
பொய்த்துவித மோகப் புளப்பமறப் போகாதே.

33. தெருமரலிற் சேர்ந்த செருக்கறலாற் சீவன்
பரமசிவ மேயாகும் பண்பறிந்தோர் நோக்காற்
கருமசம் பந்தமலக் காயவடி வாகத்
தெருமரலுற் றேங்கல் சிவநிந்தை யாமே.

34. எள்ளத் தனையு மிரண்டல்லாத் தன்மையா
வுள்ளசிவப் பெற்றி யுணராமற் பாவமுற
வெள்ளிப் பிழைபடவென் றேசுவார் சிச்சடப்பொய்க்
கள்ளவுணர் வானமலக் காயவகங் காரமே.

35. கற்றாலுங் கேட்டாலுங் *கட்டுடல்யா னென்னுமகப்
பற்றற்றா லன்றிப் பரசொருபம் பற்றாது;
முற்றமுழுப் பாச முரண்சொருப வாருயிருக்
கற்றமியல் வஞ்ச வகப்பேய்ப் பிடிப்பளவே.

* கட்டுடல் - பஞ்சகோச பந்தமான வுடல், உடல் பஞ்சகோச வுரு (உள்ளது நாற்பது).

36. உள்ளதனை யுள்ளத்தே யுள்ளபடி யோர்த்துணர்ந்தால்
உள்ளதன்றி யொன்றுமில்லை; எல்லாமவ் வுள்ளதே;
துள்ளுமகப் பேய்முனைப்பி னாதே, சொரூபவுயிர்
கள்ளமனக் கற்பனையிற் கட்டுண் டழுங்குவதே.

37. அகப்பிழை யான வகப்பற் றகன்றால்
இகப்பமற் றெப்பற்று மில்லை; எனிவவ்
வகப்பற்று மற்ற வனைத்துமோர் தன்னு
ளகப்படுவித் தாகவழங் காண்மைசொலற் பாற்றே.

குறிப்பு:—மற்றனைத்தும் ஓர் தன்னுள் அகப்படு வித் தாக, அகப்பற்று வழங்குகின்ற (அதன்) ஆண்மையென வியையும்.

38. தன்னாலே தான்விளங்கு சச்சிதா னந்தசிவப்
பொன்னா லியன்றபல பூண்களே காண்புலங்கள்;
பொன்னும் புலவுலகை மண்ணாகை மாற்றியது
தன்னை யுடல்வடிவாத் தான்மருண்ட நோக்கமே.

39. ஊன மயக்க வுடற்பா ழகப்பேயால்
வானவருங் கற்பனா மாயா விலாசத்தில்
யானெனதென் றேங்கி யிடர்பட் டழுங்குவமேல்
மானவர்தம் பாச மயக்கமெனப் பீழையென்னே.

40. வெறிசே ரகங்கார வேகமறத் தன்னுட்
செறிவாலே யன்றிச் சிவத்தவமார் சேர்ந்தார்?
அறிவான தன்னை யயர்த்தலே யன்றிப்
பிறிதோர் மிருத்தியுநான் காணப் பெறேனே

41. அகந்தைமுனைப் பானபா ழாணவங்கெட் டாலே
அகந்துலங்கும் மோன வருட்பரமா முத்தி;
அகந்தையின் மற்றோ ரனர்த்தமில்லை, முத்தி
முகந்திடவிச் சிக்கும் முமுட்சுக் களுக்கே.

42. அகப்பே யறிவை யறவகற்றி லன்றி
முகப்பரிது மோனமா முற்றமுழுத் தன்மை;
இகப்பரிய சுத்த வியற்சிற் பரவாழ்
வுகப்போ ரிடங்கொடா ரூனவகப் பேய்க்கே.

குறிப்பு:—இடங்கொடுக்கக் கூடாதென்று தாற்பரியம்.

43. ஊனப் பழிசே ருடலகந்தை யோயிலன்றி
வானப் பரசிவமெய் வாழ்வடைய வொண்ணுதேல்
ஈனக் களிசே ரியற்கையால் யானெனும்பொய்ம்
மானச் செருக்கிலிரு மாத்தலையென் னென்பதே.

44. துட்டவகப் பேயைத் தொலைக்கிலன்றி மங்களப்பே
ரிட்டசித்தி யானபே ரின்பவியற் சீர்மையில்லை;
சட்டவகத் தூடுருவித் தன்னைமுற்றச் சோதிக்கிற்
பட்டொழியும் மோகவகப் பாழான பேய்முனைப்பே.

## 6. மனம் கற்பனை

(குறள்)

45. சுத்தவறி வான சொரூபத்திற் கற்பிதமே
மத்த வகப்பேய் மனம்.

46. சுத்தத் துரீய சொரூபானு பூதியுறில்
மித்தையே யாகும் பிற.

குறிப்பு:—மித்தை - பொய்த் தோற்றம்; பிற - ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்ற மற்ற மூன்றவத்தைகள்.

47. மாண வொளிர்சொரூப மாட்சியாம் பூரணத்திற்
காணரிது ஜீவக் கலை.

## 7. பேதம் மனக் கற்பனை

48. போதமே யுண்மைப் புலமா விளங்குமதிற்
பேதம் மனக்கற் பிதம்.

49. கற்பனு பேதமறக் காண்பதே சுத்தவருட்
சிற்பரா னந்தத் திறம்.

50. கலக்கந் தெரிந்த கருத்திலே யுண்மைத்
துலக்கமியல் பாக வுறும்.

51. சுத்தவறி வான சொரூபந் துலங்கலுற்ருற்
பொய்த்தகலும் பேதப் புலம்பு.

52. பேதக் கலக்கமறப் பேர்ந்தொழியும் சுந்தவருட்
போதத் துலக்கமுற்றக் கால்.

(வெண்பா)

53. ஆண்டவன்மெய்க் காட்சி யலாதவெல்லாங் [கற்பனையா
வீண்டுவன்பேய்த் தேர்நீ ரியல்பிற்ரும்—நீண்ட
வஞதிமல வாசனேசே ராகமகம் புத்திக்
கஞமயக்கம் பேதக் கலாம்.

54. அத்தனையு மாமோ ரறிவுருவாற் தன்னையயர்த்
தித்தனுவே நானென் றிழுக்கலே—சுத்தவருட்
பூரணமாங் கேவலத்திற் பொன்னணிபோ
பாரமெய்யாப் பார்க்கப் படல். [லிவ்வகிலம்

55. மோன வறிவொளியான் மூடுண் டியல்விஷய
ஞானம் பரசொருப ஞானமே—தாஞெளிர்சற்
போதவருட் பூரணமாப் பொங்குமதிஷ் டானத்திற்
பேதமனைத் துங்கற் பிதம்.

56. மத்தவகங் கார மஞைமயமாங் கற்பனையே
மொய்த்தடரும் பற் வா முப்புடிகள்—சுத்த
வறிவே சொருப மகமிதமாம் பேத
வறிவோ வதிற்கற் பனே.

57. ஒட்பவுணர் வாக வுளந்தெளியின் முப்புடியும்
பெட்புறுசற் போதப் பிரம்மமே—திட்பமுறு
மோனத் திறந்தெளியா மோகமே கற்பனேசே
ருனமாம் பேத முறல்.

58. சுத்தவறி வாகச் சுடர்சொரூபந் தேர்கிற்பின்
மித்தையறி வென்பர் விகற்பமெல்லாம்—புத்த
ரனுபவமா மோன வருட்சிற் பரத்திற்
கனவெனவே காணு மவை.

59. சாந்திமய மான சதாசிவத்தோ டொன்றியறி
வார்ந்தியல்வ தான வருள்வெளியிற்—பேர்ந்தியல்
[வாழ்
விந்திரஜா லப்புலம்போ லெல்லா மனேமயமாய்
அந்தரமாந் தன்மெய் யகத்து.

60. வெறுங்கண் ணளவா விளங்கலுற்றன் காணப்
பெறுங்கற் பனையனைத்தும் போ—உறங்கனவிற்
பேதவறி வெல்லாம் பிழையென்க மெய்ந்நனவாம்
போத சொரூபப் புலத்து.

61. ஒருமையென் றென்று முளத் துள்ள வியல்பே
இருமையிலே சும்மா விருக்கில்—வெருவருபுன்
மத்தவகங் கார மனக்கற் பனையிறக்கிற்
பொய்த்தகலும் பேதப் புலம்பு.

## 8. அயலறிவு மித்தை

62. அறிவே பொருளாக வன்னியங்க ளெல்லாம்
வெறுவிதாஞ் சாயா விலாசம்—அறிவான
தன்னை யயர்த்துப்போய்த் தான்பிறவற் றாடுபட்டுப்
பின்னல்காண் மாயப் பிணக்கு.

63. அறிவான வாழ்வே யழியாத வுண்மை
நிறைவாக வாருயிர்க்கு நிற்கும்—பிறவனைத்தும்
கற்பனையாத் தோன்றிக் கழிபவன்றி யோர்படித்தா
நிற்பனவோ வல்ல நிலைத்து.

64. அறிவான தானேயோ ரத்துவித வுண்மை
பிறவான பேதம் பிழைகாண்—அறிவான
தன்னை யகந்தையாத் தான்மருண்ட பேதைமை
றுன்னியதே யந்தத் துயக்கு. [யாற்

55. அறிய வறிவிக்க வன்னியமற் றோங்கும்
பிறிவிலருட் கேவலமாம் பெட்பால்—மறவியற்ற
ஞான சொரூபமே நாளு வகந்தெளிந்த
மோனவியல் வாழ்வே முடிபு.

56. அறிதற்குத் தன்னி னயலாக மற்றோன்
றிறையளவு மில்லையுள்ள வெல்லாம்—செறிவான
சுத்தசச் சித்காச் சுடர்சொரூபம் மோனவருள்
வித்தகமெய்ஞ் ஞான வெளி.

## 9. அஞ்ஞானம் பொய்

(குறள்)

57. சுத்தவறி வான சொரூபத் தறியாமை
மெத்தியது மெத்த வியப்பு.

குறிப்பு:—அறியாமை - என்னையறியேன் நான் என்னும் மயக்கம். அம் மயக்கம் பிரமாதத்தால் உண்டானாற் போல்வதன்றி உண்மையில் உண்டாகவேயில்லை - உண்டாகவே யொண்ணாது என்பதாம்.

## 10. பிரமாதம்

58. மூல மயக்க முனைப்பா மகந்தையே
காலனென்பர் கற்றறிந் தோர்.

குறிப்பு:—பிரமாதமே மிருத்தியு வென்பதாம்; "உடலைநா னென்று, வரு மந்தகற் காளாகவோ"—தாயுமானுர்.

(வெண்பா)

59. மோனமாந் தன்னியல்பின் முற்றமுழுப் பேரின்ப
வானமா நின்றே வருந்தலுயிர்—ஊன
வுடலகந்தை பற்றி யுலகப் புலத்திற்
கிடந்துழல்பொய்ம் மோகக் கிறி.

70. பொறிபுலன்க ளூடு புலம்புவோர் சுத்த
வறிவுறுவாந் தம்மெய் யயர்த்தோர்—குறிகுணத்தோ
டொன்றுபட்டு நானென் றுதித்தபின்பே கற்பிதமாத்
துன்றுந் துவிதமயற் *சுட்டு.

* சுட்டு - சுட்டுணர்வு.

71. சித்தமா வுள்ளவருட் செல்வவளம் பாழாகப்
பொய்த்தொழிதல் புத்தியிற்சேர் பொச்சாப்பே—
[புத்திதெளிந்
துய்த்துணர்ந்தா லுள்ளத் துறுவ துபசாந்த
சுத்தவருட் போத சுகம்.

72. உள்ளதா மோன வுணர்வொளிப்பே ரின்பவருள்
வெள்ளப் பெருக்கில் விடாய்த்தலுயிர்—கள்ள
மனக்கலக்க மான மறப்பா லுடலின்
முனைக்கலுற்ற நானென் செருக்கு.

73. மாண்பான மன்னுயிர்க்கு மாறு வகங்கார
வீண்பாவ மென்ன விபரீதம்—காணுங்கண்
பார்வையிற்சேர் மோகப் படல மறைப்பாலே
சேர்வதுநா னென்னுஞ் செருக்கு.

74. நித்திரையின் பான்மை நினைந்து மனந்தெளிந்தாற்
செத்தபிணம் போலத் தெழிக்கவே—யொத்தவுடல்
யானென் றெனதென் றெழூஉ மபிமானந்
தானென்றல் சாலத் தவறு.

75. என்னே மடமை யிருப்பாகத் தான்றுறு
மன்னுசொரு பத்தை மறந்தொழிந்து—தன்னிற்றன்
கற்பனையா முப்புடியின் காட்சிகளிற் றனகப்பட்
டற்பனு யாப்புண் பது.

76. அருட்செல்வ மாக வகமே யிருக்க
மருட்செல்வ மோகமென்ன மாயம்—மருட்சியா
லாகமகம் புத்தி யனைந்த வனர்த்தமே
சோக மயக்கத் துயர்.

77. பேதமயக் கற்றாற் பிறந்திறப்ப தன்றியுயிர்
போதவடி வானவருட் பூரணமே—ஏதமுறு
நானென்னும் மோக நகையே சிவசொருபந்
தானென் றறியத் தடை.

## 11. மயல் (மயக்கவுணர்வு)

78. தேறக் கடவ சிவசொருப வுண்மையிலே
கூறக் கடவதொரு குற்றமிலே—கூறக்
கடவதொரு குற்றங் கலக்கமுறுந் தன்பாற்
படர்வதொர்பொய்ம் மோகப் பழுது.

79. சுத்தசச்சித் தான சொருபமாத் துன்றுகன
பித்தியைவிட் டுக்கற் பிதங்களாந்—சித்திரங்கள்
பற்றி யலமருமப் பான்மையே பல்விகற்ப
முற்றபசு பாச வுணர்வு.

80. ஒருதானே பல்வே றுயிர்களா நின்றுன்
பெரிதான சிற்சொருபப் பெம்மான்—விருதாவா
யானென் றவனென் றிரண்டுபட மோகிக்கும்
மானங்காண் பாச மயக்கு.

## 12. அனுபூதி பெருத நூலறிவு

81. அனுபூதி கூட லகன்றகத்து மேன்மேற்
பனுவலே யோதும் பயிற்சி—புனத்திற்
சருகரிப்ப தன்றிக் குளிர்சற்றுங் காயா
தொருவலினுங் கேடென் றுணர்.

## 13. மனோலயம்

(கொச்சகக் கலிப்பா)

82. உதார வருள்வெளியா வுள்ள சிவத்தை
இதாக வதாகமனக் கற்பனையா லெண்ணி
யதாலசயாச் சொக்கி மனோலயத்தில் வீழ்வார்
சதாசிவமாந் தம்முண்மையத் தத்துவமோ ராரே.

83. கனுநனு வானமனக் கற்பனையே தேரும்
எனுதுநா னென்னும் மயற்கையற வுள்ளத்
திலேயுதயமா வுண்மையுணர் வெய்தின்றி யோக
மலேலயத்தா லாருயிர்க்கு மாண்பயன்கிட் டாதே

## 14 மனவொடுக்கம்

(வெண்பா)

84. தன்மயமா நெஞ்சந் தழைத்தாலே யன்றியருட்
சின்மயவா னந்தஞ் செழியாதாம்—பன்மயமாஞ்
சித்தமொரு தன்மயமாச் சித்தமே யத்திலொருங்
கொத்தொடுங்கக் காண்ட லுணர்வு.

85. ஒன்றப்பெற் றுலே யுணர்வுக் குபசாந்த
வென்றித் திறமை விளங்குமன்றிச்—சென்றுசென்று
பல்கற் பனையிற் படர்ந்தாற் பரிபவஞ்சே
ரல்லற் பரம்பரையே யாம்.

86. ஒடுக்க வொடுக்க வுளத்திலே தன்னை
மடுக்கவரும் பேரின்ப வாழ்க்கை—அடக்கலரி
தாகக் கிளருநா னனுபவத் தற்றொழியும்
மோகக் கிரந்தி முரண்.

## 15. மனோநாசம்

(குறள்)

87. சிந்தையற்ற சிந்தையாத் தேறத் தெளிந்தவருட்
சந்தமுற்ற வாழ்வே சதிர்.

88. சுத்தப் பரசொருபத் துப்புரவால் வாழ்தலுறும்
மத்தவகஞ் செத்த மனம்.

89. சித்தக் கலக்கமாஞ் சிந்தையறிற் சித்துருவாம்
புத்தமுத மோனப் புலம்.

90. என்னதென வொன்றுமிலே னென்னலெவன், [யானெனதென்
றுன்னுமனம் பொய்த்தொழிந்த பின்பு.

91. அறிவொளியாந் தன்மெய் யகத்துமனஞ் செத்தோர்
பிறவிமயற் பீழையறப் பேர்வர்—இறவா
மனோலயத்தில் வாழ்வோர் மறந்தலன்றிச் சேரார்
தனுதியல்சேர் சாயுச் சியம்.

92. நாசமா னாலே நடலைமனம் முற்றமுற்ற
நேசமாம் பேரின்ப நெஞ்சிலெழும்—பாசமா
லன்றொழியப் பெற்றா ரனந்தானு பூதியுருப்
பெற்றொளிர்வர் பேராப் பதத்து.

## 16. அகந்தை யழிவு

(குறள்)

93. அகந்தை முனைப்பே யயற்சுட் டறிவென்
றகந்தையிற் றீர்த லறிவு.

94 தன்னியல்வாழ் வான சதாசிவசற் போதமெழும்
உன்னுமுனைப் பற்றா லுளத்து.

95. ஊன வகந்தை யிறந்தொழிந்தோர் சுத்தவருள்
வானமே யாகவாழ் வார்.

(கொச்சகக் கலிப்பா)

96. காணக் கடவவருட் கைவல் லியசித்தி
ஆணவக்கா ரான வகந்தைமுனைப் பற்றொழிவே
மாணக் கடவசிவ மாட்சிசே ரத்துவிதம்
பேணார்ந்து மோகவகப் பேயொழியாக் காறுமே.

97. சித்தக் கலக்கவிட் சேபமற வூன்றியுளத்
தத்தகவே நிற்கும்மோ னானுபவ மன்றிமற்
றெத்திறமும் பற்றா வியற்சிற் பரசொருப
முத்திநிலை நானெனும்பொய் மோக முனைப்பறலே.

98. உத்தமசற் பத்தி யுணர்வாற் பரசிவத்திற்
செத்தொழிந்தா லன்றிச் சிவானுபவங் கூடாது
அத்துவித மோன வருட்சிற் பரசிவத்திற்
செத்தொழிதல் யானென்னும் மோகச் செருக்கழிவே.

99. பண்ணவொண்ணு வுண்மைப் பரமார்த்த வாழ்வு
[யிருக்
குண்ணனவா வொட்பநுட்ப மாகவுளத் துள்ளதனே
நண்ணுவது சுத்த நனவாந் துரியவியல்
வண்ணமாய் நானெனும்பொய்ம் மாயமறத் தீர்தலே.

100. திடங்கெழுசுத் தான்ம சிவானுபவ மோனத்
தடங்கி யொடுங்கி யழிதலால் வேகம்
முடங்கினு லன்றி முனைப்பா முயற்சி
அடங்கினு ரல்லர் அறிவா மகத்தே.

குறிப்பு :—மோனத்தில் வேகம் அழிதலால் எனவும், முயற்சி முடங்கினு லன்றி எனவும், அகத்தே அடங்கினுரல்லர் எனவும் இயையும்.

101. அத்தகவே யுள்ளத் தடங்குறுஞா னங்கொண்டு
மத்தவகங் கார மனப்பிழையை மாய்க்கினல்லாற்
புத்திக்கு மட்டமற் புலப்படத்தாங் கற்றறியும்
புத்தகஞா னத்தாற் புலப்பமறப் போகாதே.

102. அகந்தை முனைப்பே யவித்தையாம் பாசம்;
அகந்தை யழிவே யரும்பரமா முத்தி;
அகந்தை யுருவையகத் தாழ்ந்து விசாரித்
தகழ்ந்தெறியி லன்றி யனர்த்த மறுதே.

103. ஊன வகந்தை யொழிந்தோர் அதனெடுமற்
றேனையுற வெல்லா மிகந்தொழிவால் வண்மைசேர்
மோனவெளி யான முழுமுதலே மெய்யகமாத்
தானவிர வுள்ளத்துத் தற்பரமாத் தங்குவரே.

104. யாவரே யுள்ளாழ்ந் திதயத் தலமடைந்து
ஜீவ வொளிக்கொளியா வுள்ள சிவவொளியிற்
றீர்வரோ நானென்னுஞ் ஜீவபோ தச்செருக்கு
நேர்வரப்பெற் றுரன்னுர் ஞேய சொருபமே.

105. அதர்மத் தொகைகளுக் காணிவே ரான
மதமத்த மான வகந்தை மனத்தை
யிதமித்தல் பாவ வியற்கை யெனத்தேர்ந்
ததமே புரிவ ரறமறிந் தோரே.

குறிப்பு :—மதமத்தம் - மதோன்மத்தம்; இதமித்தல்- இதமாகப் பற்றல்.

106. சிவத்திலே மூடச் செருக்கற்றோர் சேர்வர்
சுவத்தமாத் துன்று சொரூபானு பூதி;
எவற்றிலுமொட் டாத வியல்வா லறிவே
சுவச்சமாத் துன்று சொரூபமென் பாரே.

குறிப்பு:—சிவத்திலே மூடச் செருக்கற்றோர்—நானென்றொரு முதலுண்டென்ற மூடச் செருக்கு சுத்தாத்துவித முழுமுதற் செம்பொருளான சிற்பர சிவத்தில் அற்றொழிந்தோர்.

107. மருள்வளர்பொய்ம் மாறுபி மான மலப்பா
ழிருள்வளர்யா னென்னு மியற்கையறக் கெட்டோர்
வெருள்வளர்வே சாறகல மேவுவா ருள்ளத்
தருள்வெளியா மன்னு மனந்தசிவ வாழ்வே.

குறிப்பு:—யானென தென்னும் செருக்கறுப்பான் என்ற குறள் (346) நோக்கற் குரியது.

## 17. சித்தம் சிவமே

(குறள்)

108. துங்கவருட் போத சொரூபவொளி சேர்ந்தமனம்
பங்கமில்பே ரின்பப் பரம்.

(வெண்பா)

109. ஆரமுத வாழ்வுயிருக் கன்புமய மானசிவச்
சீரமைதி யுற்றவருட் சித்தமே—வாரமிகக்
கூர்சொருப ஞானக் குலாச்சே ரனுபவமா
ஏசறுதன் னின்ப வியல்.

## 18. தேகான்மபாவ மறலே புத்தர் சித்தாந்தம்

110. ஆசைகளுக் கெல்லா மடிப்படையாந் தேகமயற்
பாசவகங் காரப் பசையறவே—வேசகன்று
நித்தசித்த மாக நிறைந்தொளிர்பே ரின்பவுரு
புத்தர்சித் தாந்தப் பொருள்.

## 19. கர்த்தா—கருமம்

111. கருமம் புரிவர் கருத்தத் துவத்தாற்
கருமமுதல் யாரெனத்தாங் காணர்—கரும
முதலாக வெண்ணியதம் மூலவுண்மை காணின்
முதலொழியும் பொய்யா முடிந்து.

112. கர்த்தாவை யின்றியென்றுங் கர்மமில்லை கர்மமாக்
கர்த்தா தனைத்தான்முற் காண்பானேல்—எத்தாலுங்
கர்த்தாதா னல்லனய்க் கர்மபந் தங்கழன்று
முத்தான்மா வாகமுடி வான்.

113. கரும முதலை காந்தொழியக் காண்போர்
கருமத்திற் பட்டுக் கலங்கார்—கரும
விதிக்கற் பனைக்கு வெகுதூரத் துள்ளார்
விதிக்கன்னர் மேற்பட் டவர்.

## 20. கர்த்ருத்வ மற்ற நிலை

114. சிறப்பான மாட்சி சிவன்செயலே யாகப்
பொறுப்பான தம்பணிதீர் பூட்சி—மறப்பான
கர்த்தத் துவமதியாற் கலங்கிப் பேதுபட்டார்க்
கத்தத் துவந்தேர் வரிது.

115. அரிதாக வன்றி யெளிதாக வுண்மைத்
தெரிவான தெய்வத் திறங்கேள்—கரியான
கண்காணி மாத்திரமாக் கர்த்தத் துவங்கழன்ற
பண்பான சாந்திப் பதம்.

116. செய்வதெல்லாந் செய்தவமாஞ் செய்கையிற்கர்த்
[தத்துவப்பொய்ம்
மைவளர்நா னென்னுமதி மாய்ந்துவிடில்—தெய்வ
நிவேதனமா வாழ்வை நிகழ்த்தலே நெஞ்சில்
விவேகசன் மார்க்க விதி.

குறிப்பு:—மாய்ந்துவிடில் செய்தவமாம் எனக் கூட்டுக.

## 21. நைஷ்கர்மிய சித்தி

117. மயர்ந்தனமாய் பொய்யகந்தை மாய்ந்த மனத்தே
*யயத்தனமார் சித்திவந் தாரும்—இயற்றம்
முனைப்பற் றேகிர்சொருப மோனமே யாதோர்
நினைப்பற்ற சாந்தி நிலை.

* அயத்தனமார் சித்தி - நைஷ்கர்மிய சித்தி.

## 22. பசு பாசம் பொய்

(குறள்)

118. கண்கலக்க மன்றிமற் றுண்மையன்று, மெய்மயங்கிக்
கண்கலுழத் தோன்றும் பிறப்பு.

(கொச்சகக் கலிப்பா)

119. களிவளர்பொய்ம் மாயக் கருத்தைக் கடந்தோங்
கொளிவெளியை மோன வுணர்வொளியா லோர்ந்து
தெளிவரலாற் சித்தஞ் சிவமயமாத் தீர்ந்தால்
இளிவரல்சேர் பாச வியற்கைவெறும் பொய்யே.

120. உள்ளவொா று வுண்மையா வுள்ளதுளத் தெவ்வெ
[வர்க்கும்
தள்ளவொா று முற்றமுழுத் தத்துவசிற் கேவலமே;
பிள்ளவொா று வந்தப் பிரம்ம சொரூபத்திற்
கள்ளமனே மாயையெக் காலுமில்லாக் கற்பனையே.

## 23. பாசமும் பாசமறலும்

(வெண்பா)

121. பேதவறி வான பிரபஞ்சம் பாசமயல்
சார்தவறு வாலறிவே தத்துவமாம்—போத
வருள்வடிவே யாக வகந்துலங்கல் பாச
விருள்விடிய லான வியல்பு.

## 24. பந்த-முக்தி மனக்கற்பனை

122. சொந்தசொரு பானுபவந் துய்த்தலுறும் புத்தியிலே
பந்தசிந்தை யற்றொழியும் பான்மையால்—தொந்த
[மாய்
அந்தமருட் சிந்தையோ டன்றிநில்லா முந்திசிந்தை
முந்துறுமோ மோனத்தின் முன்.

## 25. எவன்?

123. யானென் றிதுவென் றிகலுமனக் கற்பனைசேர்
மானே யகந்தையே மாலிருளே—தானே
யனைத்துமாத் துன்று மதீதத்தைச் சிந்தை
இனைத்திதுவென் றெண்ண லெவன்.

124. அன்றென் றயலை யகற்றி யகமகமென்
றென்றுமொளிர் போத வியற்பதத்தே—ஒன்றனெடுந்
தாக்கற்று நிற்குநிலை சாதித்த லன்றிமற்
றேக்குற்று மாழ்க லெவன்.

125. பருவங்கண் டாண்டசிவன் பாத நிலைக்கண்
வெருவுங் கருத்து விளிந்து—கருவங்
கழன்றிருத்த லன்றிமனக் கற்பனையைச் சுட்டி
யுழன்றிடலென் யானென் றுருத்து.

126. பழுதான காட்சியைப்பின் பற்றிமனம் மூடக்
கழுதையா வேனோ கலங்கல்—அழுதழுது
மாயப் புலத்திலே மாள்வதன்றித் தன்சொருபந்
தோயப் பெருதறிவு தூர்ந்து.

## 26. தான்

127. வைப்பாக வுள்ளசிவ வண்பதமே யென்றென்றுந்
தப்பாத வுண்மையாந் தன்சொருபம்—இப்பாலைக்
குப்பாலா வுள்ள விதுதானே யப்பாலைக்
கப்பாலா வுள்ள வது.

128. பத்தி யெனத்தன் போத சொரூபவருள்
வித்தையன்றி மற்றனைத்தும் மித்தையே—புத்தியிலே
முப்புமசேர் போத முனைப்பற் றெழியிலருட்
சிற்பரமாய்த் தானே சிவம்.

129. சூழ்ந்தமனம் பத்தியுயிர் சொக்கவே மெய்யன்பா
லாழ்ந்திடின்மெய்ஞ் ஞான வருட்பதத்தே—
வாழ்ந்திடுவன்
மோனப் பரந்தாமம் மூண்டொளிரத்
தானப் பரப்பிரம்மந் தான். [தன்னுளத்தே

130. ஒன்றான வுண்மை யுணர்வொளியாந் தன்சொருபம்
மன்றாக மாயைக்கு வைகலாற்—பொன்றாத
கற்பனை பேதங் களுக்கோ ரதிஷ்டானத்
தற்பரமாங் கைவல்யந் தான்.

131. முந்தியென் றேதுநிலை மோனமாந் தன்சொருப
சித்தியென் றே தேறத் தெளிதலாற்—புத்திக்
கலக்கமா மோகவகங் காரமுனைப் பற்றுத்
துலக்கமாந் தானே சுகம்.

132. உள்ளதாந் தன்சொருப வுண்மைமறந் தாருயிர்த்
கொள்ளியே போலமனங் கோட்புறலால்—உள்ளதாந்
தானே யுலகுருவாத் தான்றோன்றத் தான்மருண்டு
தானேபின் றேறுந் தகைத்து.

குறிப்பு :—ஆருயிர் தன் சொரூப உண்மையை மறந்து, மருண்டு தேறுந்தகைத்து எனவும், மனம் கொள்ளியே போலக் கோட்புறலால் தானே உலகுருவாத் தோன்ற(க் கண்டு) மருண்டு எனவும் கூட்டுக. கொள்ளியே போல - கொள்ளிக்கட்டை (கொட்புற்றாற்) போல.

133. வென்றிசேர் ஞான விசாரணையாற் சிச்சடமாத்
துன்றுமகங் காரந் தொலைதலாற்—றென்றுதொட்ட
கற்பனைசேர் மோகக் கருத்தழிதல் சுத்தவருட்
சிற்பரமே தானந் திறன்.

## 27. தன்னறிவு

(குறள்)

134. ஞானப் பரசிவமே நானென் பதன்பொருளா
ஊனமறக் காண்கை யுணர்வு.

135. தன்னைப் பரமார்த்தத் தற்பரமாக் கேறுங்கா
*றுன்னிப் பொழியா துளத்து.

* உன்னிப்பு - யானென்னும் அகந்தை முனைப்பு; முயற்சியுமாம்.

136. தாக்கற்ற சுத்த சதாசிவமே தன்னுருவாய்
நோக்கற்ற நோக்கமா நோக்கு.

137. ஒருசிற் கனமான வுண்மையே தானுத்
தரிசிக்க வேண்டுந் தகைத்து.

138. தன்மையி னுண்மை சதாசிவமாக் கண்டாலே
கன்மசமு சாரமறுங் காண்.

139. கற்பனை மோகவகங் கார மறவதன்மெய்ச்
சிற்பரான் மாவைத் தெரி.

## 28. தன் மெய்யியல்பு

(வெண்பா)

140. அன்புபொரு ளென்பா ரறிவே பொருளென்பார்
இன்புபொரு ளென்பா ரிவையாவுந்—தன்பரிசாந்
திண்மைசேர் சுத்த சிவோகமாத் தீர்ந்தபர
வுண்மை பொருளென் றுணர்.

141. பேதுறவா மாயப் பிறவியறக் காண்கிற்கும்
மூதறிவு தன்னறிவா மோனமே—மேதகுசற்
போதமா முத்தவருட் பூரணமாங் கேவலமே
ஏதமிலாத் தன்மெய் யியல்.

142. நானென்னுந் தன்மை நடலைவெறும் பொய்த்
[தோற்றம்
தானென்னுந் தன்மை சதாசிவமே—நானென்னுந்
தோற்றுவாய் கண்டறிந்தாற் றோற்றமறும் பொய்ய
போற்றுவாய் மூலப் புலம். [கந்தை

143. மூலப் புலந்தானே மோனமா மெய்ஞ்ஞான
சீலத் தவத்தாற் செறிபதமாய்ச்—சாலப்
பெருமை யுடைத்தாம் பிரம்மபதஞ் சற்று
மிருமையற்ற தன்மெய் யியல்.

144. *"அவரவர் தாந்தா மறிந்தவா றேத்தி
இவரிவ ரெம்பெருமா னென்று—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்துந் தொழு"வதுநா ணுரெனத்தன்
னேர்த்துணரிற் றன்மெய் யுரு.

* அவரவர் ............தொழுவர்.—திவ்யப்ரபந்தம்,
பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி.

## 29. தன்னிழப்பு

145. சித்தமலங் கெட்டுச் சிவபதத்திற் சேர்தலுற
வுத்தமசற் பத்தி யுளம்பற்றி—நித்தம்
முறைபடமுன் னேறற முற்ற முடிந்த
விறைபணியின் மெய்தன் னிழப்பு.

146. மோனத்தாற் றன்னை முழுமுதலுக் கூறுகத்
தானளித்த தன்னிழப்பே சாந்திநிலை—ஊனமனக்
கற்பனையாம் பேதக் கலக்கமெழுக் காரணமோ
ரற்பமுமில் லாமெய் யகம்.

147. ஆன்ம நிவேதனத்தா லன்றிஞா னுனுபவத்
தேன்மருவு சாந்தி திளைத்தலில்லை—ஊன
முனைப்பற் றொழியவதன் மூலவொளிப் பாத
நினைப்பே நிவேதனமென் பார்.

குறிப்பு:—ஈண்டு நினைப்பென்றது நினையா நினை
வென்னும் மோன வடிவான உள்
ளுணர்வை என்க.

148. விலைமதிக்க வொண்ணா விழுப்பொருள் சொந்த
நிலைமடுத்த நெஞ்ச நிறைவே—பலிகொடுத்துத்
தன்னை யிழந்த கதியர்க் குரியதன்றி
யன்னியருக் கில்லை யது.

149. ஞானத்து வாயிலா நண்ணாக் கடவதுபொய்ந்
நானற் றெழுதலே நாடலுறின்—வானத்
தியலவிர்ந்த பூரணமா வெண்ணமற்ற மோனத்
தயலகன்று நிற்கு மகம்.

150. தம்மை யிழந்தல் சதாசிவஞா னானுபவச்
செம்மைசேர் சாம்ராச் சியந்திளைத்தல்—நம்மியல்யா
தென்று விசாரித் திதயந் தகந்தைமதி
பொன்றுவார் பூரணங்காண் பார்.

151. தன்னிழப்பா மோனத் தலவாசி தன்சொருப
நன்னிலைப்பா டன்றி நடப்பறியான்—மன்னுசிவக்
கேவலத்து மூழ்கிக் கிளர்தலாற் காணிலத்துப்
பாவலற்று வாழ்வன் பரத்து.

152. அற்பமாஞ் சீவ ரறிவாற்றல் பூரணமாஞ்
சிற்பரத்தின் சந்நிதியிற் செல்லாது—கற்பனைசேர்
மோகமுனைப் பான முரண்பாடு முற்றுமறச்
சாகலே வாழ்*சா தனம்.

* சாதனம் - உபாயம்.

## 30. சொந்த நிலை

153. அறிவியல்சே ருண்மை யகமான முத்தி
யுறுவதன்று சொந்த வுருவே—பிறிதலரு
சுத்தவெளி யான சுகப்பிரம்ம சோபனமா
முத்திமுக் காலுமுள தே.

154. வெற்றறிவே சுத்தவருள் வெற்றியென்பர் மூதறிஞர்
நற்றவமா மோன நடையதுவே—உற்றறிய
வொன்றுமில்லை தானான வுண்மையன்றிச் சிற்பரமா
வென்றுமுள்ள தேதன் னியல்பு.

155. அந்த நிலைவந் தடைவதன் றென்றென் றுமுள்ள
சொந்தநிலை யன்றே சொரூபமாம்—உந்துமுனைப்
பான வகந்தைநா னென்றொன் றறிந்திடின்மெய்த்
தானதுவாக் காணப் படும்.

156. கண்டடையப் பெற்றவருட் கைவல் லியவாழ்வு
தொண்டுதொட்ட சொந்த சொரூபமே—மண்டு
[பொருள்
பொய்ம்மறதி யாலிறந்தாற் போன்றதுமுன் மீண்ட
வம்மதியே யாகு மடைவு. [றிந்த

* தொண்டு - தொன்று

157. கண்டடைந்த முத்திநான் காணு ததன்முன்னும்
பண்டென் னுருவாப் பயின்றதே—மண்டு
மனக்கலக்க மற்றொழிந்த மாத்திரையே யன்றி
இனிக்கலந்த தன்றென் னியல்பு.

* இனி - இப்பொழுது, இனிக்கலந்த தன்று - இப்பொழுதே (புதிதாகப்) புணர்ந்த தன்று.

158. வீறு படைத்து விளங்கு சொரூபநிலை
நேறுபடு சுத்த சிவோகநிலை,—கூறும்
முயல்சே ரகந்தை முனைப்பற்ற மோன
வியல்பான முத்தி நிலை.

159. துன்பமற் றுள்ள சொரூபநிலை தானேபே
ரின்பமய மாக வியன்றநிலை—அன்புமயம்
பொங்கு மமுதநிலை பூரணமாங் கேவலமாத்
தங்குமுப சாந்த நிலை.

## 31. நடுவு நிலை

160. அனைத்துக்கு மாதியா மந்த வகந்தை
முனைத்தலற்ற மோனப் பதத்தே—தனித்துச்
சுடர்சொருப மாகத் துலங்கி யிருக்கை
நடுவுநிலை யாக வுணர்.

## 32. இதய மாட்சி

(குறள்)

161. இன்பவருட் போத விதயமே டாழ்த்த மனச்
துன்பமறக் காணுந் துறை

குறிப்பு:—இன்ப வருட் போதமே இதயமென, உடம் பொடு புணர்ந்தலின்றி உய்த்துணர வைத் தது காண்க.

162. கலங்கலற்ற வுள்ளங் கடவுள் வடிவாத்
துலங்கு சொருபந் துணி.

163. இயல்பாக வுள்ளா னிறையோன் அகந்தை
மயல்போ யொழிந்தார் மனத்து.

164. ஊற்றமா வுள்ளத் தொடுங்கலுற்று ருள்ளுணர்விற்
றேற்றமா முண்மைச் சிவம்.

## 33. இருப்புணர்வு

165. அருட்பார வாழ்வா வறிந்தடையத் தக்க
திருப்பாக வுள்ள வியல்.

## 34. ஆழ்தல்

(வெண்பா)

166. ஆவிக் கருந்துணையா வாண்டகுரு நாதனருட்
சேவைக்கே தீர்ந்தமுழுச் சிந்தையால்—வாழ்வுக்கு
வாழ்வா வொளிர்சொருப மங்கலமாஞ் சிற்பதத்து
டாழ்வாரோர் தாழ்வறி யார்.

## 35. கடமை

167. நாணற் றியல்சொருப ஞானநிஷ்டை தன்னியல்பாத்
தேஞெத் தொழுகத் தெரிதலே—ஊனமில்சச்
சிற்பரத்துக் காற்று சிவதரும மானவருட்
கற்பொழுக்க மாமெய்க் கடன்.

168. போன்றதொன் றின்றியொளிர் பூரணசுத் தாத்து [விதத்
தோன்றலுயிர்ச் சஞ்சலந்தீர் தாணமா—வூன்றும்
நரும சொரூபச் சரணவொளிச் சார்பே
கருமமா மிக்க கடன்.

குறிப்பு:—தோன்றலது சரணம் என இயையும்.

169. அடியாரைத் தாங்க லருட்பொறுப்பா வேற்ற
வுடையான் பணிசெய் தொழுகல்—அடியாருக்
கான முழுக்கடமை அல்லாப் பிறர்களுக்கே
ஏனைக் கடமை யெலாம்.

## 36. சாதகர் கடன்

(குறள்)

170. முப்புடித்தோற் றத்தையதன் மூலமாந் தன் [சொருபச்
சிற்பரத்திற் *சேர்த்தல் சிறப்பு.

* சேர்த்தல் - ஒடுக்கல், ஒன்றுவித்தல்.

171 தன்னை யலாமலொரு தத்துவம்வே றில்லையெனத்
தன்னியல்சா திக்கை தகவு.

172. உள்ளந் தெளிந்த வுணர்வொளியாற் பாசவகக்
கள்ளங் கழிதல் கதி.

173. தன்னை யறியத் தலைப்பட்டோர் தன்னின்மற்
றன்னியமெல் லாமகற்று வார்.

குறிப்பு:—அகற்றவேண்டு மென்பது கருத்து.

174. அகற்றக் கடவவற்றை ஆசையா லுள்ளத்
துகத்தலுற்று ரூழ்த்தொழி வார்.

175. ஊடுருவ லுற்றபர வுண்மையே தம்முருவாக்
கூடுவர்தற் கூர்த்துணர் வோர்.

## 37. சாதனை

(வெண்பா)

176. மூன்றெழுந்த மோக முனைப்பா மகந்தையற்று
வேண்டுதல்வேண் டாமை விளிந்தொழிய—அண்ட
வன்சற்
போதனையின் சாரம் புலங்கொண் டமைநலே
சாதனையாற் சாரும் பயன்.

177. ஆற்றக் கடவதாத் தக்கநெறி யாருயிர்க்குப்
போற்றக் கடவசிவ புண்ணியமே—ஆற்றுபணி
மாசில னாக மனத்தேநிட் காமியமாத்
தேசுபெற வாற்றுந் திறன்.

## 38. செய்யத்தக்கது

178. அண்ணலே யண்ண லவன்பதத்தோ டொன்றுபட
வெண்ணலுறு மெண்ணமே நல்லெண்ணம்—
நண்ணலுறு
மைக்கியமா மோன வநள்வாழ்வே வாழ்க்கைநலன்
பொய்க்கவல்போய் மெய்க்கழலே போற்று.

## 39. கற்கவேண்டியது

179. அகந்தைமதி யற்ற வறிவே யபார
சுகந்துய்ப்பு சுத்தந் துரீயம்—அகந்தைமதிப்
பற்றற்ற மோனப் பரமோப சாந்தியே
கற்றொழுக வேண்டுங் கருத்து.

180. கழற்கே யடிமைசெய்யக் கற்றலே கல்விப்
பழக்கமா நாளும் பயில்க—ஒழுக்கம்
பலவற் றுளுஞ்சிறந்த பத்தியாற் பாச
மலமற் றொழியும் மனத்து.

181. ஆண்டான் திருமுன் னடைந்துநின்ற
வாருயிரைத்
தீண்டாது பாசமறத் தீர்ந்தொழியும்—பூண்டார்வம்
சிற்பரமே நோக்கித் தெளிந்த சிவானுபவம்
கற்பதுவே நல்லோர் கடன்.

182. அருள்வைப்பா வுள்ள வகண்ட சிவச்செம்
பொருள்வைப்பா மோனப் புலமே—மருள்விப்
பிரமங் கழன்ருெழியப் பேணக் கடவ
பரமங் களமான பற்று.

183. காட்சிக்கு மூலமாங் காண்பான் சொரூபமே
*தாட்சியறக் கண்டறியத் தக்கதுகாண்—மாட்சிசே
ரான்மசொரூ பத்துக் கயலாகப் பின்னெதுவுந்
தான்மருவா தத்தனையுந் தான்.

* தாட்சி - தாழ்ச்சி.

184. அற்றவருக் கற்ற வருட்பரமாந் தன்சொருபப்
பற்றிலொருப் பட்டொளிர்சற் பத்தியால்—முற்றத்
தருமார்த்த காமந் தணந்தொழியத் துன்று
பரமார்த்த மோனம் பழகு.

## 40. சிரவணாதி

185. கல்வியாற் கேள்வியாற் கண்டாலே போவுறுனித்
தொல்லுமா றுண்மை யுணர்ந்தாலும்—புல்லுங்
கருத்தமைதி யின்றேற் கதிகலங்குஞ் சித்தந்
திருத்தமுற வேண்டுந் தெளிந்து.

186. சிந்திக்க வேண்டுமனஞ் சிந்தித்த வொண்பொரு
புந்திக்கு நல்லவருட் போதமுற—முந்து [ளைப்
தெளிதலுற வேண்டுந் திடம்படவே நிட்டை
யொளிர்தலுற வேண்டு முளத்து.

(கொச்சகக் கலிப்பா)

187. சித்தமா வுள்பொருளைத் தேர்ந்திருத்தல் சித்தி
சத்த விலாசயாச் சார்ந்த மனோல்லாச [மென்பர்:
சித்திகளின் மோகச் செருக்காற் களிக்கலுறும்
மித்தையோர் புத்திக்கு விள்ளாதவ் வுண்மையே.

## 41. அந்தர் முகம்

(குறள்)

188. சாமா னியமன்று தன்சொருப வுண்மை நிலை
ஏமாரு துண்ணேக்கம் பற்று.

189. உள்ளத் தியல்சொருப வொட்பநுட்பம் பற்றரிது
கள்ளவகங் காரக் கருத்து.

190. திண்மைசேர் சுத்தசிவச் சிற்பரமே தன்சொருப
வுண்மை தெளிந்த வுணர்வு.

191. விளங்கலுற்று லன்றித்தன் மெய்யுள்ளங் கூடு மோன
வளங்குலவு வாழ்க்கை யரிது.

## 42. அஸ்பரிச யோகம்

(வெண்பா)

192. உள்ளதலை தென்னுமவ் வொள்ளியவெண் பாவு
[ணர்த்துந்
தெள்ளியசற் போதத் திறத்தாலே உள்ளவற
வுள்ளுந் தியான வுணர்ச்சியொளிர் மோனநிலை
யுள்ளந் திளைத்த *லுறவு

* உறவு - சுற்பத்தி.

## 43. சும்மாவிருத்தல்

193. முற்றுமாத் துன்று முனைப்பா மகந்தைமுத
லெற்றியறச் சும்மா விருத்தலே—சற்றும்
பிழைபா டுறுமற் பிரம்ம பதத்தில்
வழிபாடு செய்யும் வழி.

194. பிரம்மமா நின்றுற் பிறப்பில்லை சுத்தப்
பிரம்மமே தன்சொருபப் பெட்பாம்—பிரம்மமா
நிற்கை முனைப்பூர் நினைப்புமறப் பற்றுமனந்
தொக்ககமாச் சும்மா விருப்பு.

195. சும்மா விருத்தல் சொருபநிலை ஜீவனியல்
செம்மான் பரமாச் செறித்தநிலை—மும்மலமும்
பாழா வொழியப் பரமோப சாந்திசுக
வாழ்வாக வைகு நிலை.

196. அருட்பாத பத்தியா லன்பே சிவமாய்
விருப்பான சாந்தி விளைந்தால்—இருப்பா
யிருத்தலே யன்றி யியல்பாகச் சும்மா
திருத்தவேன் டாதோர் செயல்.

## 44. கிரந்தி பேதம்

197. மோகவகங் கார முடிச்சுழியின் முப்புடிதீ
ரேக சொருப வியல்காணும்—தேகமகம்
புந்திக் கலக்கமறப் பொன்றுமிடந் துன்றுவது
முத்தியுரு வான முதல்.

## 45. செத்துயிர்த்தல்

198. சுத்தவறி வான சொருப வொளிப்பரப்பில்
மித்தையறி வெல்லாம் விளிந்தொழிய—நித்தசித்தப்
புத்தமுத்த மானவருட் பூரணச்செம் பொற்பதத்திற்
செத்துயிர்த்தல் வாழ்க்கைத திறம்.

199. செம்மைசேர் தெய்வச் சிவபதத்தே செத்துயிர்ப் [போர்
இம்மையே பேரின்ப மெய்துவார்—பொய்ம்மயலாற்
றுன்றுமனந் தாபந் தொலையா தருட்பதத்தூ
டொன்றுவதா லன்றி யுயிர்க்கு.

குறிப்பு:—ஒன்றுவதாலன்றித் தாபந் தொலையாது எனக் கூட்டுக.

200. அத்துவித மான வருட்பூ ரணத்திலறச்
செத்தவகம் சுத்த சிவசொருபம்—புத்துயிர்பெற்
றந்தவகந் தேறு மகம்பிரம்ம மாவொளிர்சச்
சந்தமா மோனச் சதிர்.

## 46. மோகமறல்

(குறள்)

201. கற்பனைசேர் மோகக் கலக்கந் தெளிந்தக்கார்
சிற்பரவாழ் வோங்குஞ் செழித்து.

## 47. மோக்ஷயாத்திரை

(வெண்பா)

202. ஆகாய மான வருட்சிற் பதவொளியில்
தேகாதி மோகமறத் தீர்ந்தொழியின்—போகாத
யாத்திரையாப் பொங்கும்பே ரின்பவருட் கைவல்யச்
சீர்த்தியுறு மந்தத் திறம்.

குறிப்பு:—ஆகாயம் - பரவெளி.

## 48. விவேகம்

203. புத்தமுத போகமாப் பொங்கு சொரூபவியல்
வித்தகமா முத்தி விளங்கலுற—மெய்த்திறமா
முற்றமுழுத் தன்மைசேர் மோனத் தகந்தைமத்
யற்ருெழியக் காண்ட லறிவு.

204. பூசகன் பூசனை பூச்சியன் மூன்றுமொரு
தேசளவாத் தீர்ந்த திகழ்ச்சியால்—பேசருமவ்
வெற்றுணர்வா மோன விழுப்பதத்தில் யானொடுங்கி
யற்ருெழிதல் போலு மறிவு.

205. மயக்கப் புலத்தே மனத்தைச் செலுத்தி
நயக்குமகப் பேயறிவு நாண—மயற்கற்
பனைகடந்த மோனப் பதத்திலே சாந்தி
தனையுகந்து நிற்றல் சதிர்.

206. விளக்கமா வுள்ள விசுத்த சொரூப
மளக்கலரு மோன வருள்விண்—உளக்க
ணமைதியா மூழ்கி யறிவா லுபாசித்
தமைதலே சான்ற வறிவு.

207. பேத மனப்பிழை பேர்ந்தாலே யத்துவித
போத சிவானுபவம் பொங்குமுளம்—பேதமனப்
பெற்றிக்குக் காரணமாம் பேதைமைசேர் நானெ
யற்றொழியக் காண்ட லறிவு. [னும்பொய்

## 49. விசாரம்

(குறள்)

208. கற்பனை பேதங் களிலே மனத்தைவிடா
துற்பவமோர்ந் துட்சேர் வுணர்வு.

209. உள்ளத்தே யுள்ளமா வுள்ளதன்னை யோர்தலே
கள்ளமறக் காணுங் கதி.

10. ஒதுக்கமா வுள்ளத் துசாவலுற்றால் விள்ளும்
பதுக்கமா வுள்ள பரம்.

## 50. விசார சாதனை

(வெண்பா)

211. உண்மையா மோன வுணர்விலே யூன்றுமனத்
திண்மையே ஞான திடப்பாடு—நுண்மைசேர்
சுத்தமனத் தூடு சொரூப சமாதிதோய்
மெய்த்தவமே மேவும் விதம்.

212. உண்மையியல் யாதென் றுளத்தூ டுசாவிலருள்
வண்மைசேர் வாலறிவே தன்வடிவாய்த்—திண்மை
[சேர்
மாயமனச் சுட்டறிவு மங்கவெறுங் கற்பனையாய்
ஞேயவியற் சீர்மையுறும் நெஞ்சு.

213. உணர்வே யுருவான வுண்மைப்பே ரின்பப்
புணர்வழிதன் சொந்தப் புலனே—துணிவற்
றமுழுங்குமகங் கார வறிவுருநா னென்
றெழுங்குபெற வுள்ளு றுசா.

214. நானென் றெனதென்று நண்ணுமாதி சேர்புருடன்
றுனெ ரெனும்போத சாதனையால்—யானெனதென்
றன்னவற்றுக் கென்று மவகாச மின்றிமனம்
துன்னும் பிரமத் துவம்.

215. நித்தசித்த பாக நிகழ்சொருப வுண்மையை யோர்த்
துய்த்துணர்ந்தோ ருண்மை யுணர்வொளியாற்—
[சித்திரமாங்
கற்பனையா வெல்லாங் கழன்றொழியக் கைவல்யத்
தற்பரமாத் தாந்தழைப் பார்.

216. நானெற் றெளிர்சொருப ஞானமின்றி மன்னுயிருக்
கூனப் பிறவி யொழியாது—மோனத்
தியல்விளங்க வுள்ளத்தில் யாருரென் றுயின்
மயலருமெய்ஞ் ஞானம் வரும்.

## 51 விசார ஞானம்

217. குடைந்துளத்தை யுடுருவக் கூர்த்த வுசாவால்
அடைந்தவுணர் வவ்வுளத்தை மாய்க்கும்—கடைந்த
விறகு ளிருந்து வெளிப்பட்ட தீயவ்
விறகை யெரித்து விடும்.

218. புத்திக்குட் போகமாப் பொங்கலின்மெய் நானுரென்
றேற்றித்தன் னுட்டே றுசாவிலன்றிப்—புத்திக்
கலையாய சந்தைக் கடையிலே யில்லை
தலையாய போதச் சதிர்.

குறிப்பு:—''மதிக்கொளி தந்தம்'' என்ற (உள்ளது நாற்பது) பாடல் ஈண்டு கருதத் தக்கது.

219. வேறுபா டற்ற விசுத்த சொரூபவுண்மை
தேறலகத் தேயாகத் திட்பமுறக்—கூறு
முசாநுணுக்கங் கண்ட வுளத்திலே சொந்த
நிசானுபவங் காணு நிலைத்து.

220. போதவருட் பூரணமே புத்தியிற் சீவனைச்
சேர்தலா லந்தத் திறமுணர்ந்தோர்—*தேர்தலாற்
புத்தியருட் போதமாப் பொங்கச் சுயசொருப
சித்தியுறக் காண்பர் சிவத்து.

* தேர்தலால் - ஜீவனாகத் தோன்றுந் தான்யார் என்று ஆராய்தலால்.

## 52 அடங்கல் ஒடுங்கல்

(குறள்)

221. ஒடுங்கொடுங்க வுள்ளத் துடசாந்த பூமித்
தடங்கிளரக் காணுந் தகைத்து.

222. ஒடுங்கிய வுள்ளத் துபாசனு யோகம்
டரங்கிளர்மெய்ஞ் ஞான ந் தரும்.

(கொச்சகக் கலிப்பா)

223. தன்னின்மற் றொன்றுமற்ற தன்னிலே நானெனும் [பொய்
யன்னியமா மோக வகந்தையறத் தேர்ந்தொடுங்கும்
அன்னவரே சாவா வமுதவியற் கைவல்ய
மன்னவராய் வாழ்வார் மதோன்மத்த ராகவே.

224. மடக்கி மடக்கி மனத்தை யுளத்தே
யொடுக்கி யொடுக்கி யுணர்வுள் ளழுந்த
அடுக்குமெய் யன்பர்க் ககவொளி யாக
மடுக்க விளங்கும் மனோதீத மாண்பே.

225. அளக்க வொணாத வருட்சிற் பரமே
துளக்க மிலாததாளிர் சொந்த சொரூபம்;
முளைத்த வகந்தை முனைப்பை மடக்கி
யுளத்தி லொடுக்கி யுணர்ந்திட லாமே.

## 53. அன்றி யரிது

(வெண்பா)

226. வெள்ளப் பரங்கருணை வேந்தனருட் பார்வையாற்
றெள்ளத் தெளிவாத் தெரிகலுற—உள்ளத்
தகமகமாப் பொங்கு மறிவுற்று லன்றி
யகமிதமா மோக மறுது.

227. சீர்மைசே ருண்மைத் தெளிவான மோனவருட்
பார்வைசேர் வாழ்வு படைக்கிலன்றிக்—கூர்மைசேர்
சுத்தசிவ மாகச் சுடர்சொருப சாந்திசுகந்
துய்த்த லெவர்க்கு மரிது.

228. நுட்பவொட்ப மாக நுனித்துணரத் தக்கவருள்
விட்புலமாந் தன்மெய் விளங்கிலன்றிக்—கொட்புந்
றலேயுயா மோக வகந்தைமனத் தாபந்
தொலேவுற்ற சாந்தி யரிது.

229. சித்தக் கலக்கமாஞ் சிந்தா குலந்தீர
வுய்த்துணர்தல் வேண்டுந்தன் னுண்மையுரு—புத்தி
றனே யறிந்து தரிக்கிலன்றித் தானுகத் [யாந்
துன்னரிது சாந்தி சுகம்.

230. மூர்க்கவகங் கார முருட்டுமனத் தோடிசைந்த
சேர்க்கையற வெட்டிச் சிதைக்கினல்லால்—வேர்க்கும்
புழுக்கமறப் பொங்குசிவ போகமார் சாந்தி
செழிக்குமியல் வாழ்க்கை யரிது.

231. காட்சிபல கண்டு கலங்கித் தடுமாறும்
பூட்சிசேர் மாயமனம் பொன்றிலன்றி—மாட்சிசே
ராண்டா னருட்பதச்சீ ரானசொரு பானுபவம்
ஈண்டா திதயத் துயிர்க்கு.

232. நானென்னும் புத்தி நழுவுற்ரு லன்றியருள்
வானமா மோனநிலே வாய்க்காதே—ஊன
வுடல்வடிவு நானன்றென் ருேர்த்தொழிந்து
கடவுளியல் வாழ்வு கல. [மோனக்

233. கோசவகம் புத்தி குலேந்தொழிந்தா லல்லாது
நீசவுயிர்ப் பாசமற நீங்காது—பாசவலுக்
கட்டொழிய வேண்டிலகங் காரமாங் கோசமதி
கெட்டொழிய வேண்டுங் கிடாய்.

234. நிறைவா வொளிர்சொருப நிட்டானு பூதி
யுறுவதா லன்றி யுளத்தே—செறிவான
மோகாந்த கார முடிச்சறுபட் டெங்குமொன்ரும்
ஏகாந்த வாழ்க்கை யரிது.

235. சுட்டுணர்வாங் கற்பனைக்குத் தோற்றுவாய் சூனியமே
உட்டுருவி யாய்ந்தா லுபயமில்லை—நிட்டையா
லொன்றான வுண்மை யுணர்ந்த வுளத்திலன்றிப்
பொன்றாது

236. மோன வுணர்வொளிமுன் மூண்டெழுந்தா லன்றி
வானமாம் பேரின்ப வாழ்வில்லை—ஊனமாங் [யருள்
கற்பனா பேதமயற் காட்சியகன் றெட்பநுட்பச்
சிற்பரமா முண்மை தெளி.

237. கடவுளை மோனக் கருத்தாலே யன்றித்
தொடர்வரிது சிந்தைத் துணையால்—படர்வுறுவெம்
பாச வகந்தைப் பழிப்பற் றொளிர்சொரூப
நேசமே யுண்மை நினைவு.

238. விரிந்த சொரூப வெளியான மோனம்
பொருந்தினா லன்றிப் *புலத்திற்—சுரந்திடா
துண்மைத் தெளிவா முபசாந்தி யானவருள்
வண்மைசேர் வாழ்வு மனத்து.

* புலத்தில்—அறிவில்

239. கைவல்ய மோனக் கடவுளருட் பேறுகொண்
டுய்வதன்றி மற்றோ ருபாயமில்லை—செய்வல்ல
சாதனமெல் லாமொருமெய்ச் சார்பையே பற்றி
தேய்தலொன்றே சிந்தையறச் செத்து. [மனந்

240. மருட்புலத்தை நம்பி மயங்குலக வாழ்வில்
இருப்புணர்வா மின்ப விறைவன்—அருட்பதத்தைக்
கண்டாருக் கன்றிமெய்க் காதலா மன்பொழுக்கத்
தொண்டாடும் பெற்றி யரிது.

241. விளங்கினா லன்றி விசுத்த சொரூபம்
உளங்கிளர்பே ரின்ப வுணர்வாய்—வளங்குலவு
சித்தோப சாந்தத் தெளிவாமோ னானுபவ
முத்தோக மாத லரிது.

242. மோன சொரூபமா முற்றமுழுச் செம்பொருளை
மோனவறி வாலே முழுவலன்றி—நானெனுமவ்
வூன வகந்தை யுணர்ச்சி முயற்சியாற்
றுனறவே சார்த லரிது.

குறிப்பு:—சார்தல் அறவே அரிது எனக் கூட்டுக.

243. மோன சொரூபமே முற்றமுழுச் செம்பொருளாத்
தானவிர்சற் போத சதாசிவமாம்—ஊன
முனைப்படியோ டற்று முடங்கிலன்றிச் சற்றும்
நினைப்பரிதவ் வுண்மை நிலை.

244. வசைகூ ரகந்தைதீர் வாழ்க்கையே சற்று
மசைவிலா மோனநிலை யாமால்—பசையிலாச்
சிற்பரமாத் தூன்று சிவானந்த வாழ்க்கையஃ
தற்பரா மூடர்க் கரிது.

245. கொடியனேன் மோகக் குழியிலே யாழப்
படியவிழ்ந் தாவி பதைத்தேன்—படியிலே
தன்னிழப்பு வாழ்க்கையருட் சத்தியாற் சார்ந்
தென்னுழப்பா லாற்ற லெவன். [திலனேல்

(கொச்சகக் கலிப்பா)

246. நானெனென் றெண்ணு நலிவுக்குக் காரணமாய்
மானுபி மான மயக்கவகப் பாழ்கரக்கத்
தானான சுத்தசிவத் தன்மை தழைக்கிலன்றி
மோனனு பூதி முகவா துளத்திலே.

குறிப்பு:—தழைத்தல் - விளங்குதல்.

## 54. அறிவு

(குறள்)

247. அறிவரிய வுண்மையா மான்ம சொரூபத்
தறிவொடுங்கி யொன்ற லறிவு.

(கொச்சகக் கலிப்பா)

248. அறிவின் தெளிவே யறிவின்ப வுண்மை
அறிவு கலங்கலா லன்றே யயற்சுட்
டறிவான பாழி லகப்பட் டுழுங்கல்
அறிவைத் தெளிவித்த லாமெய் யறமே.

249. அறிவைப் பறிகொடுத்தோன் றுவதில்லை சுத்த
வறிவே சொருப வருட்பரஞ் சோதி
அறிவை யறியில் அமலவெளி யாமவ்
வறிவே சொருப வருட்பரவீ டாமே.

250. உணர்வுதூய் தாவுள் ளொடுங்கலுற்றால் அவ்வுள்
ளுணர்வே சொருப வொளியாக வுள்ளத்
துணர்வான தன்னை யொளிர்வித் திடலால்
உணர்வே பரமார்த்த வுண்மையென் பாரே.

251. எண்ணியது மெய்யா வினியதோ வின்றோ
எண்ணினு ரெண்ணிற் றெதிர்காணு மென்பரால்
எண்ணலின்றி யாதும் மறத்தலின்றி வெற்றறிவா
நண்ணிலகங் காணும்மெய்ஞ் ஞான சொருபமே.

252. அறிவிலே வேறுன் றணுகவொட் டாதவ்
வறிவுதூய் தாக வகன்வெளியாக் காணில்
அறிவே சொருப வமுதவியல் பிற்றாய்
நிறைவுதரு மென்பர் நிறைவுசான் றோரே.

253. அறிவொளியைச் சற்று மலட்சியஞ்செய் யாதீர்;
அறிவொளியே மிக்கபே ரம்மான் சொருபம்;
அறிவொளியே யன்றியொன் றில்லை; அருட்சீ
ரறிவொளியே யாமிவ் வகிலங் களுமே.

254. அறிவுருவ வுண்மையே யுண்மையன்றி யல்லாப்
பிறவுருவ வுண்மை பிழைசே ரசத்தாம்;
அறிவுருவ வுண்மையே யத்துவிதான் மாவென்
றறிவுதெளி யாதா ரவித்தை யுறுரே.

255. மறவியாத் துன்றுபிர மாதமன மாசற்
றறிவுதூய் தாக வவிர்ந்திடப்பெற் றால்அவ்
வறிவினும்வே றுக வரும்பரமொன் றில்லை
அறிவுதூய் தாகை யருந்தவத்தின் சீரே.

256. [illegible] ரறிவி லிகபரங்கள் யாவுந்தன்
மீதூர்சிற் சாயா விலாசமாத் தாம்படர்ப,
யாதானும் பேத வியைபில்லா வந்தவருட்
போதானு பூதிப் பொலிவேசாம் ராச்சியமே

குறிப்பு:—தன் என்றது அவ்வறிவு வடிவான ஆன்மாவை

257. சுத்தவறி வான சொரூபவிலா சங்களே
மித்தையறி வான விகற்பமனைக் கற்பனைகள்;
எத்தகைய பேதமுமங் கில்லை யியற்பரத்திற்
சித்தமனம் புத்திவெறுஞ் சிற்சித் திரங்களே.

குறிப்பு—இயற்பரத்தில் சிற்சித்திரங்களே என்ப
தன்றிப் பேதமு மங்கில்லை யென்னவுமாம்

258. அறிவையே யன்றிமற் றோர்பொருளுண் டாக
அறிவறிந்த வுண்மை யறிவோ ரறியார்
பிறிதுபடு கற்பனை பேதவிவ கார
வுறவொழிய வுள்ளத் தொளிர்வெற் றறிவே.

குறிப்பு:—வெற்றறிவு - கேவலவறிவு; சுத்தவறிவு - பிரஞ்ஞானம் என்பதுமது வெற்றறிவு என்பதனை வெற்றிலை போலக் கொள்க வெற்றறிவாகிய அறிவையே யன்றி என வியையும்.

259. உடலுருவா வெண்ணி யுழல்வுறுநான் யாரென்
றுடலுருவ மோகமற வோர்த்துணர்ந்தா லுள்ளத்
திடமெழுமோர் வாலறிவு யான்யானென் றந்தத்
திடவறிவே தன்சொருபச் சிற்பரமாம் வாழ்வே.

260. உணர்வொழியா முண்மை யுளத்திலே யுண்மை
யுணர்வளவாத் தன்னை யொருக்கவுமாம், அந்த
வுணர்விலே தோன்று முடலுலக மாயப்
புணர்வகன்று சுத்தவருட் போதவொளி யாமே.

261. உணர்வு தெளிந்தா லுயிர்பர மாதும்
உணர்வு கலங்கி லுயிரகப் பேயாம்
உணர்வென் பதுதன் னிரண்டற்ற வுண்மை
உணர்வதற்கு யானிதுவென் றொன்றுமங் கின்றே.

## 55. அறிவாராய்ச்சி

(வெண்பா)

262. அறிவா லறியக் கடவ பொருளவ்
வறிவான வுண்மையே யாகும்—அறிவா
லயலாகச் சுட்டி யறிப வனைத்தும்
*மயலன்றி யன்றே யறிவு.

* மயல் - மயக்கம், கற்பனை.

263. அறிவான தன்னை யறியாது தன்னிற்
பிறவறிவ தெல்லாம் பிழையாம்—அறிவான
தன்னை யறிந்தானேற் றுனறிய வேண்டுவதா
வன்னியமொன் றில்லை யவற்கு.

264. அறிவான வாழ்க்கை யகத்தே மயக்க
வறிவா மகந்தை யரிதாய்—*நிறைவா
லறிவு விளக்க மடைய வடையப்
†பிறிவுடும் ||பேதப் பிழை.

* நிறைவாலறிவு - நிறைந்த வாலறிவு; அறிவு நிறைவால் என்றுமாம். ||பேதம் - பேதமதி †பிறிவுபடும். நீங்கும்.

265. அறிவு கலங்கி லகிலங் கலங்கும்
அறிவன்றி யின்று லகிலம்—அறிவு
கலங்கலறக் காணிற் கடவுட்கை வல்யந்
துலங்கலுறும் பாசந் தொலைந்து.

266. அறிவே சொரூபவுண்மை யாதலா லந்த
வறிவிற் பரம்பிறிதொன் றில்லை—அறிவா
லவிர்சொருபந் தன்னை யகந்தைமுனைப் பற்றுச்
சிவசொருப மாகத் தெளி.

267. உள்ள துணர்வே யுணர்வேதா னுள்ளதுமற்
றுள்ளலுகக்கார் சற்று முபயமில்லை—உள்ள
வுணர்வளவா வுள்ளத் தொடுங்கலுற்று மோனம்
புணர்வதே ஞானப் புலன்.

268. உணர்வே யுளபொருளா முண்மை யுணர்விற்
புணரவே தில்லை புதிதா—உணர்விற்
புணர்முப் புடியாப் பொருந்து மெலாமவ்
வுணர்வின் விலாசமென் றோர்.

269. அறிவே பொருளா வமைவாற் பொருளவ்
வறிவின்வே றுகா வடைவால்—அறிவால்
அறிவறிந்தா ருண்மை யறிந்தா ரதனிற்
பிறவறிந்தார் பேதுபட் டார்.

270. படர்தலுற்ற பேதமயற் பார்வையறத் தன்பா
லடர்தலுற்ற சுத்த வறிவே—சுடர்தலுற்ற
மோனவருட் செல்வமாய் முத்திப் பரசுகமாய்த்
தீனமனப் பான்மை தெறும்.

271. முற்றறிவைப் பற்றி முடிந்தவுண்மை மோகமற்ற
வெற்றறிவா மோன விளக்கமே வெற்றறிவா
முண்மையிலே சற்று முபயமில்லை பேதவுணர்
வுண்மையன்று சுட்டற் றெழுகு.

## 56. அறிவை யறிதல்

272. அறிவொளியாங் கேவலசுத் தான்ம சொருபம்
பிறவொளியா லெங்ஙன் பிறங்கும்—அறிவொளியாந்
தன்சொருப மானவருட் சார்பாலே தாமிலங்கவ்
வெஞ்சியவை தன்னையிலக் கா.

273. அறிவை யறிதல் பொருளா மெனிலவ்
வறிவிரண் டில்லை யறியு—அறிவை
யறிவத னுண்மை யகந்தைமுன்னைப் பற்றவ்
வறிவா விளங்கலே யாம்.

274. அறிவுருவா ந் தன்மெய் யறியிலன்றி யார்க்குஞ்
செறிவரிது சுத்த சிவத்தில்—பிறிவருதன்
னுண்மையுரு யாதென் றுசாவியுளத் தாழ்ந்திடிலவ்
வண்மைசேர் வாழ்வு வரும்.

(கொச்சகக் கலிப்பா)

275. அறிவாலே யந்த வறிவான தன்னை
யறிவோரே யுண்மை யறிவோர்; பிறரோ
செறிவான மோகச் செருக்கா லெழும்பிப்
பிறவேதஞ் சித்தப் பிரமையாற்காண் போரே.

குறிப்பு:—பிறவே காண்போர் என இயையும்.

## 57. உண்மை உணர்ச்சி

(வெண்பா)

276. முனைத்துநா னென்று முழங்கு மகந்தை
தனைத்துருவில் வெட்கிமுடி சாய்ந்து—மனத்திற்
கடமை யுணர்ச்சியறக் காண்சொருபக் காட்சி
திடமெய் யுணர்ச்சித் திறம்.

277. மறதியா மாய மயக்கமறக் காணும்
உறுதிசே ருண்மை யுணர்வே—பிறவிக்
கலக்கமறு முத்திக் கடவுட் பதத்தைத்
துலக்கவுறு தெய்வச் சுடர்.

278. கட்புலத்திற் றீர்ந்தவருட் காட்சியுரு கைவல்ய
நுட்ப வொட்பத் திட்பமுறு நோக்கமே—விட்புலமாங்
கைவல்ய மாகக் கடந்தொளிர்சச் சிற்பரமே
யுய்வதா முண்மை யுணர்வு

279. தரிக்கவே தக்கது தன்சொருப மாக
வுருக்கிளரு முண்மை யுணர்வே—வெருக்கொளா
வாறு விளங்கு மகண்டபரி பூரணமாம்
பேறுமற் றில்லை பிறிது.

280. ஒளிசேர்ந்த வுண்மை யுணர்ச்சியா லுள்ளத்
திளிசேர்ந்த புத்தி யிறக்கும்—களிசேர்ந்
துழன்றசெருக் கானபா ழூத்தை யகந்தை
கழன்றொழியத் தான்பரமாக் கண்டு.

குறிப்பு:—உண்மை யுணர்ச்சியால் அகந்தை கழன்றொழியத் தான்பரமாக் கண்டு இளி சேர்ந்த புத்தி யிறக்கும் எனக் கூட்டுக.
இளிசேர்ந்த புத்தி - தைனிய புத்தி.

281. பேரின்ப மான பிரம்ம சொரூபத்துக்
கோரன்பு பூண்ட வுணர்வுடையோர்—ஓரம்
படாதே நடுவுநிலைப் பான்மையிலேவே சூன்றி
மடாநிற்பர் சாந்தி மனத்து.

282. பொய்யுலகத் தோற்றயாம் புன்புலமே தேர்ந்தபூலும்
ஐயுணர்வா மோக வகந்தையற—மெய்யுணர்ச்சி
யார்ந்தோ ரழியா வமுத சொருபமாய்ப்
பேர்ந்தா ரிறப்பாம் பிறப்பு.

## 58. உண்மை யறிவு

(குறள்)

283. கற்றிடினுங் கற்பனையைக் கல்லா விடினுமென்ன
உற்றறிந்தா லுண்மை யுளத்து.

## 59. உள்ளுணர்வு

(வெண்பா)

284. உள்ளகத்தே யுள்ளமா வுள்ளவுணர் வேயுயிருக்
கெள்ளத் தனைதபே ரின்பநிலை—தெள்ளத்
தெளிந்து விளங்குசிவச் சிற்பாயா மோன
மளைந்தவருட் கைவல்ய மஃது

285. கண்ணுறு வொளிர்சொருபக் காட்சியா முள்ளுணர்வே
உண்ணு ரமுத வொளிப்பெருக்காய்—மண்ணுலக
மட்கிக் கிடந்த மனத்திலருட் பேரின்பப்
புட்கலமாப் பொங்கும் பொருள்.

## 60. உள்ளலற உள்ளல்

286. உள்ளலற வுள்ள லுபாதிபற்றி நானிதுவென்
றுள்ளுமனக் கற்பனையற் றோய்தலே—துள்ளுமனப்
பேயகந்தை செத்துப் பெயர்ந்துயிர்த்தல் சிற்பதத்திற்
போயமர்ந்த மோனப் புலம்.

287. எண்ண வருரும்பொருளை யெண்ணுவது தான்பிறவற்
றெண்ணமறச் சும்மா விருந்தலே—வண்ணமிகத்
தெள்ளிதா மோனத் தியான சமாதியுளத்
துள்ளலற வுள்ள வுணர்வு.

## 61. மெய்யறிவு

288. உறுதிசேர் சிந்தி யுயிர்த்தொகைக்கு மோன
வறிவுண்மை யாமவ் வளவே—பிறவற்றைப்
பற்றி யுழன்றவகப் பாழறிவா(ம்) யோகமுனைப்
பற்றவறி வுண்மை யறிவு.

289. மெய்யான விஞ்சை விளங்கினு லுள்ளத்திற்
பொய்யான மோகமறப் பொய்த்தொழியும்—எய் [யாமை
யுள்ளத் தொடுங்கி யுணர்வான கேவலத்தைத்
தெள்ளத் தெளிதல் சிறப்பு.

290. மேதக்க வுண்மை விளங்கினு லவ்வொன்ருற்
றேர்தக்க வெல்லாந் தெரிந்தனவாம்—போதப்
பொருளுக் கயலாப் புலன்களின்மை தேறின்
மருளக் கடவதன்று வாழ்வு.

291. திரோதத்தி னின்றே செருக்கா மகந்தைச்
சிரோதயமாய் மூளுந் திறத்தால்—சொரூபமா
மோனவொளி கண்டு முனைப்பான மோகமதி
யூனமற லுண்மை யுணர்வு.

292. விவேக விசாரங்கூர் மெய்யுணர்வில் வேத
மவேதமா மென்ப ரறிந்தோர்—அவேதமாத்
தீர்த வகந்தைச் செருக்காற் புணர்துவித
பேதமயல் பேர்ந்தொழித லால்.

## 62. மெய்க் கல்வி

(குறள்)

293. உள்ளத் துணர்வுருவா வுள்ளசுய வுண்மையே
கள்ளமறக் கற்குங் கலை.

குறிப்பு:—கற்குங்கலை - கற்க வேண்டுங் கலை

294. அற்றமா மோக வகந்தை யகன்றொழியக்
கற்றலே முத்திக் கலை.

(வெண்பா)

295. செழிக்க வியன்ற சிவதருமச் சார்பால்
ஒழுக்கமாம் பத்தி யுறவால்—அழுத்தமா
வுள்ளமுறு மோன வுணர்ச்சித் தெளிவேதான்
கள்ளமறு முண்மைக் கலை.

296. என்னதியா னின்றி யிதயத் தியல்பாகத்
துன்னுபர மார்த்தத் தூரியமாய்—மன்னுயிருக்
கோர்தா ரகமா வொளிர்சிற் பரவுணர்வே
யாதாரக் கல்வி யறிவு,

## 63. மெய்க்காட்சி

297. காரணத்துக் கப்பாலாக் காண்பதே சுத்தவருட்
பூரணத்தின் போதப் பொலிவாகும்—தேரணைத்தும்
மாயா விலாசத்தின் மாட்சியே யானவெறுஞ்
சாயா சமூகமே தான்.

298. கற்பனைதீர் சுத்தவருட் காட்சியின்மெய் சுட்டற்று
நிற்பதே தான்றனு நிட்டையிலே—அபமுமோ
ரன்னிய மில்லாசுத் தாத்துவிதக் கேவலமா
மன்னியதன் னுண்மையின் மற்று.

299. கண்மயல்சேர் பேதக் கலக்கமறக் காண்கிற்ப
துண்மையுள வாக வுறுங்காட்சி—வன்மையுறு
சாந்திசேர் சுத்தவருட் சைதன்யப் பார்வையால்
மாய்ந்தொழியும் பாச மயக்கு

## 64. மெய்ந்நிலை

300. மற்றொன் றறிதலற்ற வாலறிவா மௌன நிலை
எற்றென் றுரைப்பரும்பே ரின்பநிலை—முற்றுங்
கலாதீத மானவருட் கைவல்ய மாக
நிலாவுவே தாந்த நிலை.

301. பந்தமொடு முத்தி படைக்கும் மனப்புணர்ப்பாஞ்
சிந்தையற்ற மோனச் சிவசொருபம்—புந்தியில்வந்
துள்ளதே தானை வொளிர்சொருபக் காட்சியுயிர்க்
குள்ளலரு முண்மை நிலை.

302. அவத்தையபி மான வகந்தைமுனைப் புள்ளிட்
டவத்தையொருங் காரோப மாக—அவற்றுக்
கதீதமா மோன வருட்பரமா முண்மை
யதேதனு தற்புதமெய் யாம்.

303 அம்பரமா நிற்ற லகம்பரமாகப் பற்றலென
நம்பெருமான் சாற்றியமெய்ஞ் ஞானவுரை—
[பம்பலறக்
கற்றறிந்து மோனங் கடைப்பிடித்து நிற்குமவர்க்
கத்தகவே முத்தி யறி.

304. அதிதிடமா வுள்ள வதீந்திரிய வுண்மை
மதிதிடமா மோனம் மடுத்தால்—எதிரிடமா
முன்னிலைச்சுட் டற்றெழிய மும்மையுமோர் தன்
தன்னிலொளிர் தானுந் தகைத்து. [மயமாத்

குறிப்பு:—உண்மை - பிரம்மம்; மும்மை - திரிபுடி; தான் - ஆத்மா; மோனம் மடுத்தால் உண்மை தானுந் தகைத்து என முடிவு காண்க.

305. விந்தைசேர் தொந்த விகற்பமெலாம் பாசமனச்
சிந்தனையாத் தீர வவற்றடியா—உந்தும்
முனைப்பற்ற மோனமே மோகமறப் போடு
நினைப்பற்ற வுண்மை நிலை.

306. சித்திரமா முப்புடிக்குச் சேர்படமாய்ச் சேமமுறப்
புத்திமனங் கட்குப் புகலிடமாய்—அத்துவித
வித்தகமா மோன விசுத்தப் பரவெளியே
நித்தியமா வுள்ள நிலை.

307. நினைப்புமறப் பாகநிகழ் நீசவெம் பாச
*மனப்பகையை மாய்த்த வரவோர்—முனைப்பறலாற்
கற்பனைதேர் மோகக் கலக்கமற்றுச் சிற்பரமா
நிற்பரது வன்றே நிலை.

* மனப்பகை - மனமாகிய பகை.

308. ஜீவத் திறமாஞ் செருக்கற் றெழுந்தலே
ஓர்வந்த வானொளிர்தன் னானந்த நிலே—ஓர்வத்த
சிற்பரவா னகச் செறிந்தொளிருங் கைவல்யத்
தற்பரமா மோனத் தலம்.

309. அந்தமில்பே ரின்பவருட் பதமே யாக்கமிகு
சொந்தமா வுள்ளசொரூபமாச்—சிந்தை
யமைதிசேர் சுத்த வறிவா மகமே
யிமையாத வுண்மை யியல்.

310. அத்துவித மான வருட்பத்தி யாலகந்தை
செத்தொளிர்தம் பூண்மை சிவசொருபம்—மத்த
கற்பனை யேதக் கலக்கமில்சிற் கேவலமா [மனக்
நிற்பதே யுண்மை நிலே.

311. அந்தமில்பே ரின்ப வமைதியே யன்புசால்
சொந்தமாத் துன்று சொரூபமாம்—பந்தமனக்
கற்பனையா மோகக் கலக்கமகன் றுள்ளறிவாய்
நிற்பதுவே யுண்மை நிலே.

312. அதிநுட்ப மான வறிவொளியா முண்மை
மதிநிஷ்டை யூடு மடுத்தால்—இதயத்துத்
தானேதா னகத் தனித்தொளிரும் மோனவருள்
வானேற வூன மனத்து.

குறிப்பு:—உண்மை - பிரம்மம்; மதி மடுத்தால் உண்மை இதயத்துத் தனித் தொளிரும் எனக் கூட்டுக.

313. நினைத்தற் கரிய நிறைவா யகந்தை
மனத்துக்கு மூலமா மாண்பாய்—முனைப்படங்கி
யுள்ளொடுங்கில் வீறுற் றொளிர்சொருப வாழ்க்கையே
எள்ளலரு முண்மை யியல்.

314. மூலப் பகுதிக்கும் மூலாச் சிரயமாய்
மூலமற் றோங்கும் முழுமுதலே—காலதே
சாதியலாக் கற்பனையின் றகவருட் கேவலமாய்
நேதியான் மிஞ்சு நிலே.

315. தானன்றி யில்லாச் சகத்திலே யாணவத்தா
னானென் றுபாதியோ டொட்டியொட்ட—நானென்
றுருவான பொய்யகந்தை யோய்ந்தொழிகை தானே
நிருவாண மாமெய்ந் நிலை.

316. அறங்கூறு ஞானவே தாகமங்க ளாய்ந்து
திறங்கூர் பரமார்த்தந் தேரில்—வறங்கூ
ரியானென தென்னு மிரண்டு மிகந்த
தியாகமே யுண்மைத் திரு.

317. அதுவென்று மன்றி யிதுவென்று மன்றன்
றுதுவென்றுஞ் சுட்டு முறாழ்வார்—அதுவிதுவென்
றொன்றுமே பற்றா வுபசாந்த போதமா
நின்றதே யுண்மை நிலை.

318. சிவாயநம வென்று சிவத்தா டழுந்தல்
சிவானுபவஞ் சேருந் திறங்காண்—சிவாயநம
வென்றெண்ணி யெண்ணியெண்ணி யெண்ணு
நின்றநிலை யுண்மை நிலை. |மௌனஞ் செத்ததுவா

## 65. மெய்ப்பதம்

319. நிகமா கமப்பொது நிச்சய மாக
மிகமே தகவா விளங்கும்—முகமாய்
அகமா வகத்தே யவிர்மெய்ப் பதமே
பகமான தெய்வசம் பத்து.

320. பந்தவகங் காரமனப் பான்மையறச் சிற்பரமே
சொந்த சொரூபமாத் தோய்தலாற்—றொந்த
விருப்புவெறுப் பாதி விகற்பமற்ற சுத்தத்
திருப்பதமே சாந்தித் திறன்.

321. மாணக் கிளர்சொருப வைப்பான வண்பதமே
பேணக் கடவ பெரும்பொருளாம்—காணக்
கிடைத்தவருட் காட்சியோர் கேடருமெய்ச் செல்வம்
படைத்தவர் பற்றொன் றிலார்.

## 66. மெய்வாழ்வு

322. ஒளிர்தல் சொருப வுணர்வாற் றழைத்தல்
வளர்தலது குன்றுது நீடல்—உளேதலற்
றுண்மையுணர் வாந்தன் னுபசாந்தி துய்த்தலே
வண்மைபெற வாழ்த லுணர்.

## 67. கைவல்யம்

323. வரமாம் பதங்களில் வைகும் பெரிய
பிரமன் முதலாப் பிறர்க்கும்—திரமான
மெய்வல் லபந்சேர் விசுத்த சொருபவருட்
கைவல் லியங்காண் கதி.

324. முட்டற் றுளிர்சொருப மோனமே மோகமனக்
கட்டற் றியல்பிரம்மக் கைவல்யம்—சுட்டற்
றகமகமா நிற்கி லருட்பார்வை யாலே
இகம்பரமா மாறு மினிது.

325. கறைசே ரகந்தைமனக் கற்பனைதீர் மோன
நிறைவான வுண்மை நிலையே—அறிவான
சுத்த வருள்வெளியாத் துன்றுசொரு பானுபவ
வித்தகமாங் கைவல் லியம்.

குறிப்பு :—கைவல்லியமே உண்மை நிலை என விதத்
பிரித்துக் கூட்டுக.

326. உள்ளத் தொளிர்மெய் யுணர்வா முபசாந்தி
வெள்ளத் தகந்தைமாதி வேரழிந்து—கள்ளமனக்
கண்கலக்க மானசங் கற்ப விகற்பமற
விண்கலத்தல் கைவல் லியம்.

327. தனுவாதி மோகந் தணந்தொழியப் பெற்ற
வனுபூதி ஞான மதுவே—நனவு
கனவாகத் தோன்றவருட் கைவல்யம் மீதூர்
மனவா தனைகடந்த வாழ்வு.

328. தனைப்பற்றி நிற்றலே சாந்தி யகந்தை
முனைப்பற் றொழிதலே மோனம்—நினைப்புமறப்
பற்ற வறிவே யனுபூதி வாசனைபோய்*
வற்றலே கைவல்ய வாழ்வு.

* போய்வற்றல் - வற்றிப் போதல். வாசனாக்ஷயமே கைவல்ய வாழ்வென்பதாம்.

329. பொலிந்துநின்ற மோனவருட் பூரணத்திற் புக்குக்
கலந்துறைதல் கைவல்ய வாழ்க்கை—அலைந்துமனம்
பாழ்பட்ட மோகப் படரொழிந்து சாந்தியியல்
வாழ்வுற்று நீடுமுயர் மாண்பு.

### 68. சற்சங்கம்

(குறள்)

330. உணர்வா வுயிர்க்கு முரவோரைச் சாரிற்
புணருமனு பூதிப் புலம்.

(வெண்பா)

331. மெத்தவுற வாக விடாதொழுகத் தக்கதுதன்
சுத்தவறி வான சொரூபமே—ஒத்தவழிச்
சித்தமத னோடு சிவத்துவம்பெற் றன்புமயப்
புத்தமுத போகமா மோர்.

332. ஆன்றமெய்ஞ் ஞான வருட்கேள்வி யாலிதயத்
தூன்றவுற்ற வுண்மை யுரவோராஞ்—சான்றோர்தம்
பக்கலுறக் கூடிப் பயில்சுகந்தக் கொவ்வாது
சொர்க்கலோ கத்தின் சுகம்.

333. சுத்தமனத் தூடு சொரூபஞா னானுபவப்
புத்தமுதந் தன்னியல்பாப் பொங்குவதாம்—வித்தகரா
மிக்கவர்தம் பக்கல் விடாதொழுகு மன்பருள்ளம்
பக்குவமாய்ச் சேரும் பரம்.

334. சேட்டைசேர் மோகச் செருக்கா மகந்தைமதி
நாட்டியர்தங் கூட்டுறவு நல்லதன்று—வீட்டியல்சேர்
மேதகவு வாய்ந்து விளங்குமெய்ஞ் ஞானவருட்
சாதுசங்க வாழ்வே சதம்.

335. நல்லா ரிணக்கமிக நண்ணினு லாாயிருக்
கெல்லா நலனு மினிதெய்தும்—பொல்லாத
மோகப் புணர்ப்பாய் முளைத்த வகங்கார
வேகப் புழுக்கம் விடும்.

336. பரிதியொளிப் பாதவருட் பத்திநிலே பேரா
விரதியரிற் கூடில் விளங்கும்—அரதையறக்
கற்றெழுக வேண்டுங் கதியான காட்சியாற்
பற்றற் றெளிர்மெய்ப் பரம்.

குறிப்பு:—விரதியர் - மாதவத் துறவோர்; அரதை - பிறவித்துன்பம். காட்சி - ஞானம், ஞான நிஷ்டைக் காகுபெயர்.

337. மத்தக் களிசேர் மனக்கீழ்க் கடைகளும்
சித்தந் தெளிந்து சிவம்பெறுவர்—சுத்தமனச்
சீரியோர் தம்மைச் செறிந்தொழுகில் வாழ்க்கையிக
நேரியோ ராகி நிலத்து.

338. மனத்திற் கலக்கமற மாற்றும் பெரியோ
ரினத்திற் பயில்வதே யின்பம்—முனைத்துக்
கலங்குமகங் காரக் கருத்தற் றொழிய
நலங்கிளர்மெய்ஞ் ஞானந் தரும்.

## 69. சித்தசுத்தி

339. செழிக்கலுறக் கூட்டுஞ் சிவஞானந் தேறப்
பழக்கலுற்ற சித்தபரி பாகம்—அழுக்கற்
றொளிர்தலுற வுண்மை யொழுக்கமிகப் பூண்டு
வளர்கமனத் தூய்மை வளம்.

குறிப்பு:—சித்தபரிபாகம் சிவஞானம் கூட்டும் என இயையும்.

340. சிந்தைகசிந் துள்ளுருகிச் சித்தசுத்தி பெற்றவர்க்கே
விந்தைசேர் ஞான விசாரங்காண்—சிந்தை
கசிந்துருகி லன்றிக் கழலில், உடலிற்
பசைந்த வகப்பற் றறுது.

341. சிந்தைக் கலக்கமே சிழிக்கும் பாசபந்தம்
பந்தமரு விந்தைப் பரங்காணச்—சிந்தைச்
செறிவான மோனமே தெய்வவொளி யுண்மை
நெறியிலே நிற்கின் றவர்க்கு.

## 70. சித்தி

342. கற்பனைதீர் மோனக் கருத்தா மருந்தொளிர்சச்
சிற்பரமே சுத்த சிவசொருபம்—கற்பனையை
மாற்றிக் களைந்து மனத்தை யடைந்தெழுந்
தேற்றலே *சித்தித் திறன்.

* சித்தி – சிவஞான சித்தி.

343. புத்தியிலே போதும் பொலிவின்றே லெத்தகைய
சித்திசேர்ந் தாலுமுயிர்க் கென்னபயன்—நித்தியசற்
போத சொரூபவருட் பூரண சித்தியே
சார்தலுறத் தக்க துடைத்து.

## 71. சுபேச்சை

344. மெய்வகை பொய்வகை வேறு படுக்கவொண்ணா
வைவகைக்கூட் டாமுலகத் தோற்றத்தே—தெய்வ
வருட்பித்துக் கொண்டோ ரறிவொளிபெற் றுய்வர்
மருட்பித்து விட்டு மனத்து.

## 72. ஞானத்திறன்

345. *குருபதே சக்குறியிற் கூடாதா ருண்மை
துருகமென்று சுட்டறிவாற் சொல்வார்—சொரூப
பார்வையா மோனப் பகத்திலச் சுட்டறிவு [வருட்
தீர்வதே ஞானத் திறன்.

* குருபதேசக்குறியிற் கூடாதார் - குருநாதன் கூறுங்
கூறும் மௌனோபதேசமான சிந்முத்திரையின்
வழி நிஷ்டை கூடாதவர்.

346. முளைத்த வகந்தையா மோகமதி போகத்
தெளித்தலுறு *ஞானத் திறத்தால்—உளத்திற்
கரந்தொழிந்தா லன்றிமனக் கற்பனையாம் பேதம்
பொருந்தலரி †துண்மைப் புலம்.

* ஞானம் - நானாரென்றுயும் ஞானவிசாரம்;
† உண்மை - அத்துவித வுண்மை.

347. புன்மலக்கா ராணவமாம் பொய்யிருளாற் பற்றி
கன்மமுத லானவகங் காரமறத்—தன்மயமா [விடாக்
நீடும் பரசிவ நேய வுளர்ச்சியுளங்
கூடுவது ஞானக் குலா.

348. நானற்றுத் தானான ஞானமே ஞானமன்றி
ஏனைத் துவிதவுணர் வெல்லாமும்—ஊன
மயற்கனு ஞானமன்றி மாட்சிசேர் சுத்த
வியற்கனமெய்ஞ் ஞானமன் றே.

## 73. ஞான பூஜை

349. கருத்திலே மோனக் கடவுட் பதத்தை
யிருத்தியே சாந்த வியல்பாற்—பொருத்தமா
விந்தைசேர் ஞான விழாப்பூஜை வித்தகங்கூர்
புத்தியா லாரும் பொலிந்து.

## 74. ஞான வித்தை

350. மெய்ஞ்ஞான வித்தை விரும்பியகந் தேறலின்றிப்
பொய்ஞ்ஞால வித்தைகளின் போதமுறல்—மெய்ஞ்
[ஞான
சூரியனுந் தன்சொருபஞ் சோர்ந்துநிழ லீட்டமே
யோர்தலாம் பெற்றி யுடைத்து.

351. பெற்றிசேர் சுத்தப் பிரம்மமே தன்னுருவாப்
பற்றியகத் தூன்றல் பரநிட்டை—மற்றையபல்
பாவனைந் தோன்றும் பரசொருப நிட்டையே
ஜீவனமா வாழ்க தெளிந்து.

352. தெளிந்தவர்க்கே யுள்ளந் திறந்து வெளியா
வினைந்திடுமெய்ஞ் ஞான விபூதி—அனைந்தவகம்
மும்மலத்தி னின்றுமற மோசனமாய் மோனவருட்
செம்மைசேர் சுத்த சிவம்.

353. புத்தியா லன்றிப் புணர்தற் கரிதான
சுத்தவித்தை மோன சொரூபமாம்—புத்தியதி
நுட்பவொட்ப மாக நுனித்தவகத் துட்கிளரவ்
விட்புலமே தன்மெய் யுரு.

354. பொங்குமெய்ஞ் ஞானப் புலத்தாற் புணர்வதன்றித்
துங்கமா வோங்கு சொரூபவியல்—அங்கமா
மற்றைச் சரியாதி வாய்ப்பாலே நேராக
வுற்றடைய வொண்ணு துயிர்க்கு.

355. மித்தையாம் பாச விமோசனமா முத்தியிலே
புத்திமிகத் தீவிரமாம் புண்ணியர்க்கு—வித்தகமெய்ஞ்
ஞானமொன்றை யன்றிமற் றெல்லா நலன்களுமிக்
கீனமென்றே யெண்ணத் தகும்.

356. நாமான தன்மை நழுவாத ஞானமே
ஏமமா முத்திநமக் கெய்துவிக்கும்—சேம
வியற்பரமா மோன மிதயத் தொளிர
மயற்பதைப்பற் றேய்தல் வழி.

குறிப்பு:—பதைப்பு - உடல் வடிவாக உதிக்குஞ் சீவ
போதச் சேஷ்டை.

357. மனத்திலே காண மனங்கடந்த வுண்மை
தனித்தொளிர்சற் போத சமாதி—மனத்திலே
யூடுருவிப் பாய்தலா லுள்ளம் பரவெளியாய்
நீடுவது ஞான நிலே.

358. உலகுக் குயிரா வொளிரும் பரமே
அலகி லுயிர்க்கு மதுவாக்—குலவும்
அபேதமே யாகு(ம்)ஞா னன்மானு பூதி
உபாதி யுணர்வே பிறிது.

குறிப்பு:—எல்லா வுயிர்க்கும் தனித்தனியே உயிராக.

## 75. தவம்

(குறள்)

359. தவம்பேணு வாரே சிவம்பேணு வார்மற்
றவம்பேணு வாரேமற் றோர்.

(வெண்பா)

360. அடித்தளமா வுள்ள வருட்சிற் பரத்தை
விடுத்தவகங் கார விசைப்பார்—கெடுத்தமனக்
கற்பனை பேதக் கலக்கமற்ற சாந்தியே
தற்பரமா முண்மைத் தவம்.

குறிப்பு:—விடுத்த - மறந்தொழிந்த; விசைப்பு- முனைப்பு; கலக்கமற்ற - கலக்கமறத்தெளிந்து விளங்குகின்ற.

361. அத்தக நிற்கு மனுபூதி யுண்டாகச்
சித்தக் கலக்க மறத்தெளிந்து—சுத்த
வறிவொளியைப் போற்று மதேயனுசந் தானம்
பிறவுள்ளல் யாவுமதன் பின்.

362. வாய்ந்த புலத்தை மறுத்துமனங் கண்மூடி
யோய்ந்துளத்தி லெங்கோ வொடுங்கலென்கொல்—
சிவத்திலே யூன்றித் திளைத்தலே யுண்மைத் [சாந்த
தவத்திலே யாழ்ந்தமனச் சால்பு.

363. தெள்ளத் தெளிந்தவருட் சிற்பதத்திற் சிச்சடமாங்
கள்ளமனச் சிந்தை கரந்தொழிய—உள்ளத்
துலப்பில்பே ரின்ப வுணர்வான சாந்தி
தலைப்படலே ஞானத் தவம்.

364. அத்தமியா வுண்மை யறிவொளிசேர் மோனவருட்
பத்திமையா லுள்ளம் பழுத்தலுற—வித்தகர்தம்
போதனையைப் போற்றிப் புலங்கொண் டொழுகலுற்ற
சாதனையிற் சாருந் தவம்.

365. அவனுன தன்னை யயலாக நானென்
றிவனை னகங்கரித்து மாழ்கல்—சிவமே
யகமகமென் றுள்ளத் தவிர்சொருப மோனந்
தகவுணர்ந்து நிற்கை தலை.

366. அப்பனருட் பாதத் தகந்தைகெடத் தானடங்கிச்
செப்பமுறக் கூர்த்த சிவயோகம்—தப்பலரு
சாதனமாய் மோன சமாதிநிலை கூடலே
மேதகவா முத்தி விளைவு.

367. சொற்பால தன்று சொரூபமென மோனவருட்
கற்பா லறிந்த கருத்தினராய்க்—கற்பனைதீர்
மூலப் பதத்தின் முளைப்படங்கி நிற்போரே
சாலப் பெரிய தவர்.

## 76. தியாகம்

368. வாலறிவர் போற்றும் மகந்தாந் தியாகமே
சாலவுயர் சாதனையாத் தக்கதாம்—மூலமா
மோக வகந்தை முனைப்பற் றொழிதலாத்
தேர்க தியாகத் தியல்.

## 77. தியானம்

369. கல்லாத மோகவகங் காரமனக் கற்பனைபிற்
செல்லா துளங்கூர் தியானத்தால்—எல்லாம்
ஒருங்குசிவ மாமெய் யுணர்வுதிக்கின் மாயும்
பொருங்குடில மாயைப் புணர்ப்பு.

370. கற்பனையை யெண்ணிக் கருத்துக் கலங்காது
சிற்பரமே யென்னுந் தியானத்தால்—விற்பனர்தஞ்
*சித்தமலங் கெட்டுச் சிவோகஞா னுனுபவ
சித்தராய் வாழ்வுதினைப் பார்.

* சித்தமலம் - ஆணவமலம்.

371. திருவருளே நாடித் தியானிப்பா ருள்ளே
வெருவால்போ யுண்மை விளங்கும்—பருவரலாஞ்
சிந்தா குலந்தீர் திருத்தியுறச் சிற்பரமே
வந்தாரு மன்னுர் மனத்து.

372. கலந்தவருட் பாதக் கருத்தூடு தெய்வ
நலந்தருமெய்ஞ் ஞானவொளி நண்ணும்—சலந்தவிர் [சாந்
தானுபவத் தாற்பே யகந்தைமுனைப் போய்ந்தொழிய
வானுருவா வாழும் மனம்.

373. கற்பூர வாசங் கமழுந் திருப்பாதப்
பொற்பூ ரொளிவீசும் புந்தியோர்—சற்போத
மோனானு பூதி முகப்பா லிதயத்தே
தானான தன்மைதனைப் பார்.

374. நடைமுறையா லாண்டமெய்ஞ் ஞானகுரு நாதன்
புடையெழுமெய் யன்புணர்ச்சி பொங்கத்—தடை
[படா
தோடுசிவ கங்கையொழுக் கொப்பவொரே தாரையா
நீடலுற வேண்டு நினைப்பு.

375. சாந்திவடி வான சதாபத்தி பொங்கவருட்
காந்தி யளாவு கருத்தூடு—சேர்ந்தியல்சச்
சிற்பரமாந் தெய்வத் திறத்தை யெணுமலெண்ணிப்
பொற்புறுமென் புந்திப் புலம்.

## 78. அன்னிய தியானம் பிழை

(குறள்)

376. அறிவுருவை அந்த வறிவேயாந் தன்னிற்
பிறிதுபட வெண்ணல் பிழை.

## 79. தியான பாவத்தினும் விசாரமே தக்கது

(வெண்பா)

377. உள்ள பொருளையகத் துய்த்துணர்ந்து நிஷ்டையாற்
கள்ளமனங் கட்டழியக் காணாமல்—அள்ளுமனோ
பாவனையே மேன்மேற் பயிற்ற லகந்தைமனோ
ஜீவனமே நீளுந் திறன்.

## 80. திருப்தி

378. மெத்தப் படைத்த வெறுக்கையோர் முட்டமுட்ட
மெத்தக் குறைபாடு மேவினோர்—சித்தத்
*தலமென்னும் புத்தி யடைதலே சாந்த
நலமன்னு மின்ப நெறி.

* அலனென்னும் புத்தி - போது மென்ற மனம்.

## 81. துறவு

379. தூண்டுசுட ரான சொருபவருள் காப்பாக
வேண்டுதல்வேண் டாமை விலக்கியே—பூண்ட
நெறியிற் பிறழாத நிச்சய புத்தி
துறவுக்கு வேண்டுந் துணை.

380. அதனையன்றி மாந்த ரரும்பாடு பட்டெவ்
வெதனையடைந் தாலுமின்ப மெய்தார்—அதனை
விராகமடைந் தெல்லா விடயத்துஞ் சீவன்
ஒரார்வமாத் தேர்க வுளத்து.

குறிப்பு:—அதனைத் தேர்க என இயையும்.

381. அசாவா லடைந்த வனுன்ம வகந்தை
நிசானுபவத் தாலகத்து நீங்க—உசாவா
லறிவேதன் மெய்யா வறிந்தாற் பிறவற்
றுறவேன் சொரூப வுயிர்க்கு

## 82. நிராசை வலியுறுத்தல்

382. மருட்செல்வ வாழ்வின் மயக்கமற்ற பின்பே
அருட்செல்வ வாழ்க்கை யடையும்—மருட்செல்வ
மாயமுணர்ந்தோர் மனத்தையவ் வாசையினின்
றேயவிடு விக்கை யுறும்.

383. ஆசையறப் பெற்ற வகத்தே பரமசிவ
நேசமியல் பாக நிரம்பலால்—தேசமைந்த
பத்தி விருப்பர் பசுபாச மோகமனப்
பித்தொழிய வேண்டும் பெயர்ந்து.

384. மாசியன்ற யானெனதென் மானபி மானங்கூ
ராசையாம் பாச மறல்வேண்டும்—மாசகலச்
சித்தந் தெளியிலன்றிச் சிற்பரமா வுள்ளுறைமெய்
யத்தனருட் காட்சி யரிது.

385. அத்தனருட் காட்சி யடையிலன்றி யாருமே
மத்தமனப் பாச மயக்கமறுர்—மத்தமனப்
பாச மயக்கமறப் பற்றற் றுளிர்சொருப
நேசமுறப் பற்றுகதந் நெஞ்சு.

## 83. நிட்டை

(குறள்)

386. ஒரியல்பிற் றுகவுளத் துள்ள சொரூபமே
கூரியநிட் டைக்குறிக் கோள்.

(வெண்பா)

387. பெம்மா னருள்விளக்கம் பெற்றவரே சூற்றிடுவார்
சும்மா வொளிர்சொரூ பானுபவம்—அம்மா
வனந்தமா மந்த வருட்பேறறு வாழ்வே
நினைந்துநீ சாந்தமா நில்.

388. செல்வமெல் லாமாத் திகழ்சொருப ஞானவருட்
கல்வியிலே யாழக் கருத்தூன்றிற்—பல்வளமாச்
சாருந் தியான சமாதிவளர் பத்தியொளி
யூருந் தெளிவா வுளத்து.

389. தன்னியல் கண்டு தரித்த மனத்தின்மற்
றன்னியமென் னுள்ள தறிபடவே—அன்னியமாம்
புன்மனத்தின் கற்பனையைப் போக்கித்தன் னுண்
தன்மமுற்றக் காப்பே தலை. [மைதேர்

390. ஆசத்தி முற்ற வகன்று சொருபசிவ
நேசத் தழுந்தலுறு நிஷ்டையே—பாசப்
பிடிபட்டு மாழ்கும் பசுத்துவத்தி னின்று
விடுபட்டு வாழும் விதம்.

391. அறிவாக வுள்ளத் தவிர்சொருபந் தானே
செறிவாம் பரம சிவமா—அறிவால்
அறிந்து திளைக்குமெய் யன்பான நிஷ்டைத்
திறந்தான் சிவானு பவம்.

392. சேர்சொரூப நிஷ்டைச் சிறந்தா லனுபவமாச்
சார்சகஜ ஞான சமாதியே—சீர்செய்
யறிவுநூற் கல்விக் கரும்பயனுந் தேர்க
அறிவுநூற் கல்விவல் லார்.

393. தஞ்சீ வனமாகுஞ் சுகநுமெய்ஞ் ஞானவருட்
சஞ்சீவி யான சமாதியே—வஞ்ச
மரணக் கலக்கமற மன்னுயிருக் கோர்வல்
லரணமாக் காண்க வது.

394. நித்தமா முத்தி நிலைவிளங்கச் சிற்சொருப
பத்திமேன் மேலும் பழுத்தலாற்—புத்தி
பரமான வுண்மையைப் பற்றிலன்றிப் பற்றா
துரமான மோன வொளி.

395. போதமய மாகப் பொருந்து சொருபநிஷ்டை
பேதமகல் சுத்தப் பிரம்மமயம்—பேதைமைசேர்
சித்தக் கலக்கமறத் தேற்று சமாதியே
சுத்தவருட் காட்சித் துணிபு.

396. முப்புடியின் பேசும் முகத்தநுற்ற முன்னிலைச்சுட்
டெய்ப்புறவுள் ளூன்றி யிருக்குமனம்—கப்பு
மகங்கார மோக மறவொழிந்து ஞான
சுகங்காணுந் தன்சொருபந் தோய்ந்து.

397. நினைவற் றறிவாக நின்றா லுயிர்க்குத்
துனியற்ற வின்பந் துலங்கும்—நினைவற்ற
சாந்தி யுணர்வே சதாகதியா வாருயிர்க்கு
வாய்ந்தியல்பே ரின்பவருள் வைப்பு.

398. ஒற்கமுற வுள்ளத் துணர்வொடுங்கி யோமென்று
நிற்கிலன்றித் தன்மயமா நிட்டையிலே—கற்கின்ற
ஞானக் கலையனைத்து(ம்) நட்டமே நானற்ற
தானத் துயிர்த்தல் சதிர்.

399. ஒன்றான வுண்மையிலே யூன்றினா லன்றியுயிர்க்
கொன்றா துபசாந்தி யுள்ளத்தே—ஒன்றான
தன்சொருபம் பற்றியொளிர் சாந்தானு பூதியகிழ்
நெஞ்சுருவ நிற்கை நிலை.

400 அறிதலற்று நீயே யெழுங்குகின்றாய் மற்றொன்
றறிதலற்ற வந்த வறிவிற்—பிறிதொன்றன்
சாயையற நானெனும்பொய்த் தன்மையுந்தீர் மெய்ப்
மாயையற நிற்கை மதி. [பதத்தே

401. அறிவருசற் போத வருட்பதத்தே நானற்
றுறைவளவே யுண்மை யொழுக்கம்—பிறிவருதன்
னுண்மையா மோன வுணர்வொளிசேர் கைவல்ய
வண்மையிலே வாழ்க மனம்.

402. அறிவாக நின்று ரனுபவிப்பர் சொந்த
வுறவாக வுள்ளவவ் வுண்மை—பொறிவாய்ப்
புலன்களிலே தம்மனத்தைப் போகவிட்டால் வாழ்வு
நலன்கழிந்து நாணுடைத் தாம்.

403. தானேதா னாகத் தரித்தறிவா நிற்கிலன்றி
யூனசமு சாரதுக்க மோயாது—நானெனுமப்
பொய்யான பாசபந்தப் பொல்லாங் கொழியத்தன்
மெய்யுணர்ந்து நிற்றல் விதி.

404. பாச மறுக்கவல்ல பட்டயவாள் சுத்தசிவ
நேசமுறு மெய்ஞ்ஞான நிஷ்டையே—கோசமே
நானென் றெழுமகந்தை ஞான விசாரநிஷ்டை
தானென்றிற் சாயுந் தலை.

405. ஒன்றான வுண்மை யொளிசேர் வெளியாக
நின்றாலே யன்றி நிஜவுருவாய்த்—தொன்றான
மூலா வரணம் முடிந்தொழிந்த தாகவகத்
தேலா ரறிவியல்கண் டார்.

குறிப்பு :—அறிவியல் - சுத்தவறிவான சுபாவநிலை.

406. சற்கதியாம் போத சதாசார நிட்டையிலே
நிற்குதியேற் சிற்பரமே நின்னியல்பாய்—முற்கதுவா
மோனப் பரவெளியாய் மூண்டொளிர நின்னுணர்வு
நானெனும்பொய்ப் பாச மறும்.

407. செஞ்சொற் பொருளாந் திகழ்மோன வுண்மையைத் [தந்
நெஞ்சிற் பதித்தலே நிஷ்டையென்பர்—வஞ்சமனம்
பாழ்பட் டொழியப் பரமோப சாந்தியொளிர்
வாழ்விற் கதுவே வழி.

408. தானதுவென் றோர்ந்து சரிக்கையன்றி நிஷ்டையின்மற்
றேனையெத முறையுமெய்ப்பே ரின்பமில்லை—ஊன
வகந்தைமோ கத்தை யகழ்ந்தெறிந்து ஞான
சுகந்ததும்பு முண்மை துலங்கு.

409. செம்மைசேர் சுத்த நிவர்த்திலே தானதுவா
விம்மையே முற்ற வியல்பாக—நிம்மதியா
மோன சமாதியொளி மூண்ட நிலை யோகமறு
ஞானமா முத்தி நலன்.

410. தானேதா னைவெறுந் தானாக நிற்றலொழிந்
தேனோதான் யானிதுவென் றேங்குவது—தானேதா
னைவவ் வுண்மையே யானந்த மோனஞா
னனுபவ முத்தி யறி.

411. போதவெளி யானவருட் பூரணமே பொற்புறுமெய்ப்
பாதவடி வாகமனம் பற்றுக—பாதமாந்
தன்னிலே சித்தமறத் தானொடுங்கி நிற்றலே
மன்னு சமாதி வடிவு.

412. கற்றதனாற் கேட்டதனாற் கல்விப் பொருளுணர்ந்து
சொற்றதனான் மட்டும் பயனில்லை—குற்றமறக்
கற்றபடி யாண்டவனாற் கற்பிக்கப் பட்டபடி
யுற்றொழுக வேண்டு முளத்து.

413. சித்துவங்காத் தோம்பிலன்றித் தீராது மாயமலத்
தத்துவங்கூத் தாடுஞ் சகமயக்கம்—புத்தகங்காத்
தோம்பலொழிந் துள்ளத் துணர்வான மோனநிஷ்டை
யோம்புறுதி யாக வுயிர்க்கு.

414. நிற்றலா லன்றி நிலையிலே சாத்திரங்கள்
கற்றலா லேமட்டுங் காண்பயனென்—கற்றதன்
சாரமோ கற்றுங்குத் தன்மயநிஷ் டானுபவஞ்
சேரலன்றி யன்று பிற.

## 84. நேதி நேதி

415. அன்றன் றெனச்செய் விசாரணையா லெவ்வியுந்தி
னின்று பிரிந்து நிகழுமனம்—துன்று
சிதாகாச மாகச் சிறந்த பதந்தே
ததாகார மாகுஞ் சதிர்த்து.

## 85. பிரிதல் கூடுதல்

416. பிறிவுபட்டார் போலப் பிதற்றல் சொரூப
வறிவறியா மோக வகந்தை—அறிவில்
அனைத்துமொன் றேக வவிர்சொரூப மோனத்
தெனைத்துமில்லை பேத வியல்பு.

417. யானென் றெழுந்தா லிரண்டாய்ப் பரவடிவே
தானென் றடங்கிலொரே தன்னிலையாம்—ஊனஞ்சேர்
முன்னையது மோக வகந்தை முனைப்பிலன்றித்
தன்னியல்பிற் சற்று மிலை.

418. உணர்வொளியா வுள்ளதோ ரொன்மையாந் தன்னைப்
புணர்வ தகந்தைமதி போதல்—உணர்வொளியாம்
ஏக சொரூப மிருவேறு பட்டதற்கம்
மோகமதி தானே முதல்.

## 86. பாக்கியம்

(குறள்)

419. பாக்கியமா கப்படைக்கத் தக்கதுவே தாந்தமகா
வாக்கியத்தாற் றேறும் பொருள்.

## 87. பேரின்பம்

420. உணர்வா விளங்கு முபசாந்த மோனம்
புணர்வதுபே ரின்பப் புலம்.

## 88. சாந்தி

(வெண்பா)

421\. குபேரசம் பத்துவெறுங் குப்பையாத் தோன்ற
வபாரமா வான்றவருட் செல்வம்—அபேதக்
கிழமைசேர் பத்திக் கிளர்ச்சியாற் பொங்கும்
பழமைசேர் சாந்திப் பதம்.

422\. அத்தகநிற் கின்ற வறிவே யருந்தோழன்
முத்திநெறிக் கண்ணே முனைவார்க்கு;—சுத்தமனப்
பண்பாடு சேர்ந்தவருட் பத்தினையு மத்தகவே
நண்பாக வொத்த நலன்.

423\. சாந்தியே தன்சொருபந் தானதுவா முண்மைநிலை
மீந்தியல்சுத் தாத்துவித மேதகவு—பேர்ந்தொழியா
வாதார மான வதிஷ்டானந் தன்னையன்றி
யாதானு மில்லா வியல்.

424\. நிட்களமாத் துன்று நிரதிசய சாந்தியே
புட்களமாத் துன்றுசிவ போகமாம்—கொட்கு
மகந்தைப்பே யாட்ட மறக்குலைந்து சாந்த
சுகந்தப்பா தூன்றல் சுபம்.

425\. பந்தமுத்தி யற்றுப் பரமா வொளிர்சொருப
விந்தைசேர் மோன விலாசத்தே—புந்திக்
கலக்கமா மோகமனக் கற்பனைதீர் சாந்தித்
துலக்கமே மிக்க சுபம்.

426\. மீதூர் பரமா விளங்குசிவப் பேரொளியில்
யாதோர் துவிதமுமங் கின்மையால்—வாதாடு
மூட வகந்தை முனைப்பற்ற மோனவியற்
பீடார்ந்த சாந்தி பெரிது.

427\. முத்திப் பரத்திலே மூண்டவுயிர் போதவருட்
சித்தான சத்தாச் செறிதலாற்—புத்திச்
சலனமறப் பெற்ற சதானந்த சாந்தி
யுலகமுற்றத் தாஞ வுறும்.

428. மோனவருட் காட்சி முயங்கலுற்ற சாந்தியில்விஞ்
ஞானமருட் பேதமற நட்டமாய்—ஊனமயற்
கர்த்தத் துவஞ்சேர் கடமை யுணர்ச்சியறப்
பொய்த்தொழியுந் தன்மெய்ப் புலத்து.

429. நீடுமனோ வேக நிகழ்ச்சி யடங்கிலன்றிக்
கூடுவதன் றின்பக் குலாமாட்சி—ஓடுமனச்
சிந்தா குலமற்ற சித்தோப சாந்தியே
நந்தாத வுண்மை நலன்.

## 89. உபசாந்தி

430. ஆன்றபெரும் பேறு யமிர்தத் துவமாகச்
சான்றவருட் சித்தோப சாந்தியே—ஆன்றோர்
பொருத்தக் கடவதாப் புந்தியிலே பொங்குந்
திருத்தக்க தெய்வப் பதம்.

431. இதுவதுவென் றென்றை யெதிரிட்டுச் சுட்டிக்
கதுவுறுபொய்ப் போதவகங் காரம்—கதுவுபுலங்
காண்பானுந் தன்சொருபக் காட்சியாற் செத்
மாண்பா முபசாந்த வாழ்வு. [தொளிர்மெய்ம்

432. தோன்றுதொட் டுள்ள சொருபவருட் போதமா
நின்று நிலாவுவதாய் நெஞ்சிலே—என்றென்றும்
ஊழ்க்கையுறு தோங்கு முபசாந்த நீர்மையருள்
வாழ்க்கையிலே யுள்ள மகிழ்.

## 90. இன்ப நிலை

433. கனமவசப் பட்டுக் கலங்கிக் கனவுலகிற்
சன்மவிடா யாலே தவித்தலால்—தன்மெய்
யறிவு விளங்கலே யாருயிருக் குண்மை
நிறைவாம்பே ரின்ப நிலே.

434. அற்றொழிந்த மோக வகந்தைமுனைப் பாலமைதி
யுற்றொழுக லேமெய் யுணர்வுநிலே—அற்றமில்சற்
போத வொளிமயமாப் பொங்கலுற்ற சாந்தியே
மேதகுபே ரின்ப விளைவு.

435. அத்துவித பூரணத்து டாழ்ந்தாலே தன்சொருபப்
புத்தமுத போகம் புலனுகும்—பொய்த்துவிதக்
கற்பனு மூலவகங் காரமதி மூலமெங்கென்
றுற்பவமோர்ந் தாழ்க வுளத்து.

436. அறிவான தன்சொருப மாக வனைத்துஞ்
செறிவாகப் பெற்றுச் செழித்தாற்—பிறவிலாத்
தலையமா யோங்குமுப சாந்தியே சுத்தசச்
சின்மயா னந்தந் தெரி.

## 91. பேறு

(குறள்)

437. மாணப் பெரிய மகோன்னதமாஞ் சிற்சொருபம்
பேணற் குரியபெரும் பேறு.

438. திருவருட்பே ருகத் திளைக்குமுப சாந்தி
பருவரல்சே ராமெய்ப் பதம்.

## 92. புருஷார்த்தம்

(வெண்பா)

439. அனைத்துயிருக் குள்ளுமொரே யாருயிரா முற்றத்
தனித்தொளிர்மெய்த் தத்துவமே தானுய்—எனைத்
றியம்பவொணு மோன வியல்பான வுண்மை [தென்
நயம்படலே *வாழ்க்கை நலன்.

*வாழ்க்கை நலன் - புருஷார்த்தம்.

440. தெளிவான சுத்தவருட் சிற்பரமா மோன
வெளியாக வாழ்க்கை விளங்கில்—தளையான
மோகக் கிரந்தி முடிவிடுபட் டிற்றெழிந்த
தாகக் கலக்க மறும்.

## 93. பொருள்

(குறள்)

441. சுத்தத் துரிய சொருபஞா னுனுபவப்
புத்தமுத வாழ்வே பொருள்.

## 94. போதம்

(வெண்பா)

442. பேத மயக்கப் பிழைதீர்ந்த சுத்தவருட்
போதமன் றி யார்க்கும் புகலில்லை—வேதமுதற்
கல்வி யறிவடங்கக் காண்குருசற் போதமே
வெல்வதா முண்மை விறல்.

443. நலமொன் று ஞானமா நண்ணுவது சுட்டும்
புலமொன் றிளாதவெறும் போதம்—சலமொன்
றகந்தைமதி யானசி தாபாசங் கெட்டா
லகந்துலங்கு முண்மை யது.

444. சும்மா விருக்கத் துலங்குசற் போதமே
யம்மா சொரூபஞா னனுபவம்—புன்மாய
வேற்றுப் புலத்தியைபு வேண்டாது தன்னியல்பாத்
தேற்றலுறு மோனந் திளைப்பு.

445. தாக்கற் றெளிர்வதே சற்போதம் தன்சொருப
நோக்கமன்றி நோக்கற் கியலில்லை—நோக்க
முனைந்துக் கலங்ககந்தை மோகமே பேத
மனைத்துக்குங் காரண மாம்.

446. சும்மா வமைந்த சொருபசற் போதமே
யம்மா வகில வதிஷ்டானம்—சும்மா
வமைந்த மனத்த ரதுவேதா மாக
வமைந்தா ரதீத ரவர்.

447. கற்பனைதீ ருண்மைக் கடவுளா வோங்குசிவ
தற்பரமாம் போதந் தலையெடுத்தாற்—கற்பனைசேர்
மோகமனப் புன்கலக்கம் முற்றுமற மூண்டுசிவ
போகமெழும் புந்திப் புலத்து.

448. அத்துவித மென்ரு லருவருக்கும் மத்தமனப்
பைத்தியமா நின்றபசு பாசமறச்—சுத்தசிவத்
தத்துவமா மத்துவித சத்திற் றலைகரந்து
பொய்த்தொழிதல் போதப் புலம்.

## 95. வாழ்க்கை

449. வாழ்வுக் குரியபெரு மாட்சி மனமயக்கப்
பாழ்வளர்வெம் பாசப் பசையறுத்தல்—பாழ்படு
மூலப் பசையான மோக வகந்தைதீர் [பொய்ம்
வாலறிவே பேரின்ப வாழ்வு.

450. மித்தையாத் தோன்றும்பல் விஞ்ஞான பேதமுமோர்
சித்துருவாந் தன்மயமாத் தேர்தலாற்—புத்தியிலே
போத சொரூபவருட் பூரணமா மோனவொளி
வாய்தலுற்ற சாந்தியே வாழ்வு.

451. மன்னு சொரூபசுக வாழ்க்கைக் கிடையூறுத்
துன்னுமகப்பேய் தொலைந்தொழியத்—தன்னிழப்பாற்
பேரின்ப மோனம் பிறங்கவுளத் தாசைகெடக்
கூரன்பு வாழ்க்கைக் குலா.

452. பற்றுசிவப் பார்வையாற் பாசமனச் சேட்டையறப்
பெற்றவுயிர் வாழ்வே பெருவாழ்வு—வெற்றறிவா
நிற்றலாற் புத்தி நிஜசொரூ பானுபவம்
பற்றலாய் வாழும் பரத்து.

453. தாண்டவக்கோ னை சதாசிவன்பொற் பாதவருள்
பூண்டபர பத்திப் பொலிவாலே—மூண்டெழுபல்
கற்பனைபேதக் கலைஞானச் சிந்தனைதீர்
சிற்பரமே வாழ்வாஞ் சிறந்து

454. பிச்சையேற் றுண்ணும் பெருவாழ்வு சாதுக்கட்
கச்சமில்கெம் பீர வருள்வாழ்வு—துச்சமனப்
பாய்ச்சலறு சாந்திப் பதமாம் பரவெளியு
டேச்சகல்பே ரின்பவியல் வாழ்வு.

## 96. விஷய தோஷம்

(கொச்சகக் கலிப்பா)

455. வாலறிவா வுள்ளத்தில் வைகு சொரூபவருட்
கோலமே தாமுன்னைக் கூட விழைவுறுவார்க்
கேலவே சற்று மியைவதன்று மாலறிவாம்
போலிமனக் கற்பனை போகப் புலன்களே.

## 97. கலியாரவாரம்

(குறள்)

456. சித்தாகச் சித்தந் தெளியிலன்றி வேதாந்த
வித்தாரப் பேச்சென் பயன்.

457. உணர்வு தெளியிலன்றி யுண்மையுரு வாகப்
புணர்வரிது சாந்திப் பயன்.

குறிப்பு:—உருவாகத் தெளியிலன்றி என வியையும்.

458. கற்கினுங் கேட்கினுங் கற்றறிந்தாங் குள்ளூன்றி
நிற்கிலன்றி யில்லை பயன்.

459. தருக்கஞா னத்தாற் றலைப்படவொண் ணாதே
இருக்குமுணர் வாந்தன் னியல்பு.

460. அகத்தே முழுகித்தா னென்த்தேர் வுற்றால்
அகத்தகமாக் காணு மது.

## 98. துற்சங்கம்

461. தெளிவிலா மூர்க்கச் செருக்கரொடு சேர்க்கை
அளவிலாத் துன்பந் தரும்.

## 99. மாயை வலி

462. அதிகார மோக வகங்கார வாண்மை
சதிகார மாயைச் சதிர்.

## 100. வைராக்கியம்

(வெண்பா)

463. புலத்திலே வேட்கையற்றுப் பூரணமா முண்மை
நலத்திலே நாட்டமுற்ற நல்லோர்—சலத்தியல்சேர்
மோகக் கலக்கமற்று முத்திநலம் பொங்குசிவ
போகப் பயன்புணர் வார்.

464. ஆணவமா மோக வநாதிமல ஜீவியத்தில்
விணபிமா னத்தை விடுத்தறவே—மாணவொளிர்
மோனஞா னுபவம் முற்றினு லன்றியுயிர்க்
கூனமில்பே ரின்ப முறுது.

465. ஆண்டா னடிகளைநன் காராதிக் கின்றவர்க்கு
வேண்டாமை தானே விருதுகாண்—வேண்டாது
மற்றவற்றி லுண்டான வைராக் கியமுழுதும்
உற்றபத்தி யூன்றற் குரன்.

466. தொட்டாரைத் தொற்றுலக தொந்தபந்தச் சிந்தை [மயல்
விட்டோரே மெய்ஞ்ஞான வெற்றியோர்—விட்டோரை
யுற்று றுறுதிசே ருள்ளத் திலுஞ்சற்றும்
பற்று துலகமயற் பற்று.

## 101. யோகத் திறன்

467. இருப்பளவா வுள்ளத் திலகு மறிவே
குருப்பதமா மோனக் குறியா—ஒருப்படவுட்
கூர்த்த மனத்தாற் குறிக்கொண் டொழுகலே
சீர்த்தபர யோகத் திறன்.

468. அகப்பொருளா மின்ப வருட்பரமே தானு
வுகப்பதே சுத்தசிவ யோகம்—மிகப்படர்பல்
பேதப் புறப்பொருளைப் பேணு தகற்றிமனத்
தாதரஞ் செய்க வதற்கு

469. ஓர்ந்தறியுஞ் சுட்டற் றெழியநா னுரென்று
கூர்ந்தமதி யாலகத்திற் கூடியே—தேர்ந்து
பிராப்பியமா வோங்கு பெருந்தன்மை சேர்தல்
பராற்பரமா யோகப் பயன்.

## 102. முக்தி

470. மகிழ்ச்சிமீக் கூற மடுப்பதாய் மோக
விகழ்ச்சியோர் சற்று மிலதாய்ப்—புகழ்ச்சிசேர்
சுத்தவருட் போத சொருபமாய் முத்திநிலை
மெய்த்தவருட் பொங்கும் மிளிர்ந்து.

471. மனோமயவாழ் வான மயக்கமற வுள்ளத்
திலேதயமா வென்லது நா னின்றி—அனுமயமெய்ப்
பீடுசால் போதவருட் பேரின்ப வாழ்க்கையொளிர்
வீடு திறந்த வெளி.

472. செவ்வண்ண மானவருட் சிற்சொருபஞ் சிந்தனையற்
றெவ்வண்ண முள்ள திதயத்தே—அவ்வண்ணம்
நிற்றலாற் சிந்தை நிருவிகற்ப மோன வியல்
பற்றலே முத்திப் பயன்.

473. துள்ளுமனப் பேயகந்தைச் *சுட்டற் றொளிவெளியா
வுள்ளபொரு ளேதன் னுருவாகத்—தெள்ளிதா
வான்றமைந்த மோனஞா னனுபவச் சீர்மையுயிர்க்
கான்றசதா முத்தி யடைவு.

* சுட்டற்று அமைந்த என வியையும்.

474. துள்ளு முனைப்புத் தொலைந்தொழியக் கேவலமா
வுள்ளதன் னுண்மை யுணர்ந்துணர்ந்து—தெள்ளி
துன்றுமே கான்ம சொருபசித்தி யெய்தலே [தாத்
யொன்றுபர முத்தி யுணர்.

475. அலங்கலிற் றோன்று மராப்போலத் தன்னிற்
கலங்குமகங் காரமே பந்தம்—துலங்குசுப
முத்திமற் றென்றுமில்லை மோனமாந் தன்சொருப
சித்தியன்றித் தன்மெய் சிவம்.

குறிப்பு:—சொருப சித்தியன்றி முத்தி மற்றொன்று மில்லை என இயையும். தன் மெய் - தன் பாரமார்த்திக வுண்மை.

476. தற்குறியா மோனந் தலைப்பட் டொளிர்தலின்மற்
றெக்குறியு மின்றி யிதயத்தே—ஒற்கமறச்
சித்தம் பரவெளியாய்ச் சீவன் சிவவடிவாய்
நித்தசித்தம் முத்தி நிலை.

## 103. கதி

477. மரணமா மோக மனக்கலக்கம் போக
வரணமா மூண்மை யறிவாய்க்—கரணங்
கடந்தவருட் பெம்மான் கருத்திற் பொறுத்துந்
தடந்தாள் சதாசற் கதி.

## 104 மோனம்

(குறள்)

478. *நெஞ்சமே புக்கு நிலைப்பட்ட மோனமே
சஞ்சலந்தீர் சாந்தித் தகவு.

* நெஞ்சம் - இதயம்

(வெண்பா)

479. கேவலசற் போதக் கிளர்ச்சியா மோனமே
சீர்வளர்சுத் தாத்துவிதச் செம்பதமாம்—ஆர்வளர்
மோகவகங் கார முனைப்பான மாயமனை [பொய்ம்
வேகமற்ற சாந்த வெளி.

480. நானற் றெழுகலை ஞானநிட்டை நல்லசிவ
மோனத் தியல்பான முத்திநிலை—ஊன
மனைமையமாங் கற்பனைதீர் மாட்சியா லுண்மை
யினைதையமா நிற்கு மியல்.

481. மோன மகத்து முனைப்புறலே சுத்தவருள்
வானமா முண்மை மடுத்தலாம்—ஈனகுணச்
சிச்சடமா மோகச் செருக்கின் முனைப்பங்கு
மிச்சையா மாய்ந்து விடும்.

482. மோனமே யுண்மை முழுமுதலாந் தற்பரமெய்ஞ்
ஞானமா மங்கோர் நடலையில்லை—வானவருட்
சிற்பரமாப் பொங்கு சிவலோகக் கைவல்யப்
பொற்புடைய சாந்திப் புலம்.

483. நினைப்புமறப் போடு நிகழு மகந்தை
முனைப்பற்ற ஞானமே மோனம்—வினைப்பற்றங்
கர்த்தத் துவபுத்திக் கட்டற்ற சாந்தியே
புத்தமுத முத்திப் புலம்.

484. அவித்தையிலே கட்டுண் டழுங்கலுற்ற ஜீவன்
அவத்தையபி மானபந்த மற்றே—சிவத்தோ
டிரண்டறவொன் றும்புணர்ச்சி யேகான்ம போதந்
திரண்டெழுந்த மோனத் தெளிவு.

485. சுத்தவறி வான சொரூபானு பூதியின்மற்
றெத்துவிதக் கற்பனையு மின்றாக—அத்தகவே
கண்டடையத் தக்கவருட் கைவல்ய மாண்பதமா
மண்டுமொளி மௌன வடிவு.

486. அறிவாக வுள்ளத் தவிர்சொருப வுண்மைக்
குறியான மோனக் குலாவே—நிறைவான
முத்திப் பரங்காட்டு முத்திரையாய்ப் பாசபந்தப்
பொய்த்தொழியக் *காணும் புறம்.

* காணும் புறம் - புறங்காணும்.

487. அறிவு ருவாந் தன்னி லகிலங் களுமே
யறிவளவா முற்ற வடங்கப்—பிறபலவாங்
கற்பனையைச் சுட்டெரிக்குங் காட்சியே தன்சொருபச்
சிற்பரமா மோனத் திறன்.

488. ஆர்க்கும் பலபலவே தாந்தத் தரும்பொருளாச்
சீர்க்கும் பரிசுத்த தெய்வமொழி—யார்க்கும்
புதுமொழியன் றுய்த்துணரிற் புந்தியிலே பொங்கும்
முதுமொழியா மோன மொழி.

489. சும்மா விருத்தல் சொரூபசிவ பூஜையாம்
பொய்ம்மா லகந்தையறப் பொய்த்தொழியில்—அம்மா
யான சொரூப வருள்விலா சத்திலுற்ற [மெய்
மோனம் முழுப்பூ சனை.

490. சுத்தமா மோனவருட் சூழலே சான்றோர்தஞ்
சித்தஞ் சிவமாத் தெளிந்தவிடம்—புத்திக்குட்
போதமாப் பொங்குசிவ பூரணசாந் தானுபவ
மோதமரு முத்தி யுலகு.

491. மோனானு பூதியா முற்றும் பரமுத்தி
தானேதா னெனவியற் றன்மையே—மானுபி
மான மயக்க மனக்கற் பனைசேர்பா
மூனமற்ற வுண்மை யது.

492. நூலறிவோ வன்று நுனித்துள்ளத் தூடுருவி
வாலறிவே தன்மெய் வடிவாக—ஏல
வறிந்தடங்கும் மோனமே யான்ம சொரூபத்
திறந்தெளிந்த ஞானத் திறல்.

493. மோனமே யாணவமா மூலப்பாழ் மோசித்து
வானவருள் வாழ்க்கை வழங்கலால்—மோனமே
யீடு யெடுப்புமில்லே ரின்பநெறி தோன்றுதொட்டு
நீடுசிவ ஞான நெறி.

494. முயல்சே ரகந்தை முனைப்பான ஜீவச்
செயல்போய்த் திருவருளே சிந்தித்—தியல்பாப்
படிந்தொழுகு மோனப் பதத்திலே முத்தி
யடைந்தொளிருந் தன்னுருவா வார்ந்து.

495. நன்னயஞ்சேர் நல்லசிவ ஞான வருட்பதத்தே
என்னதியா னென்னுமிரண் டேதமறத்—தன்னை
முழுக்கலுற்ற மோனமே முத்திய லன்றி
யுழுக்கலன்று நானென் றுணர்வு.

496. சாந்திவடி வானவெதன் சார்பா லகந்தைமதி
சாந்தமா யின்பநிலை சாருமோ—சாந்தவருட்
கேவலமா முண்மைக் கிளர்ச்சிசேர் மோனமே
வாழ்வலரு மான்ம வடிவு.

497. எண்ணவிரண் டின்றி யிதயத்தே சுத்தவருள்
வண்ணமா மோனவொளி வாழ்க்கையே—நண்ணக்
கடவதா வோங்குமுயர் கைவல்ய மாகச்
சுடர்வதா முத்தி சுகம்.

498. அதிட்டான மான வதேதானு மோனம்
பதித்தானேற் றுனே பரனுய்—விதிர்த்தாலோ
காண்பானுத் தன்னைக் கலங்கிமனக் கற்பனையிற்
பூண்பான் புலத்தே தனை.

குறிப்பு:—கற்பனையிற் கலங்கி விதிர்த்தாலோ என
வியையும்.

499. அகத்தா டகமா வவிர்வதே யன்றி
மகத்தான வாழ்வுபற் றில்லை—தகத்தேர்
சொருபவருட் பூரணமாத் தொக்கமனே தீதம்
துறகமாஞ் சுட்டு முயிர்க்கு.

500. தானேதா னுகத் தழைக்கிற்பே ரின்பவருள்
வானேவாழ் வாக மலர்தலுற்று—ஞானுனு
பூதியா மோனப் பொலிவே யனுக்கிரக
போதனையாப் பொங்கும் முகத்து.

501. அறிவுருவா நின்ற வருட்பரத்தே மோனஞ்
செறிவுறுவார் மெய்ஞ்ஞான சித்தர்—நிறைவுறுசுத்
தாத்துவித ஞான சொருபான்மாவிற் புன்மனத்தை
யாழ்த்துவதே மோன வடைவு.

502. இதுவதுவென் றென்று மெகிர்சுட்ட லற்றுப்
பொதுவியல்சற் போதப் பொலிவால்—இதமகமென்
றேதிலாம் பேதந்தீ ரேக சொருபானு
பூதியே மோனப் பொருள்.

503. ஊன வுடலுலகப் பற்றுருவா வுற்றுழலும்
யானெனது மான விதயத்தே—தானதுவாந்
திண்ணமுற்ற மோனவருட் சிற்பரமெய்க் [கற்பொளியே
எண்ணமற்ற வண்ண வியல்.

504. சுவத்தமா மோனமே சோகமோ கந்தீர்
சிவத்துவமாந் தன்சொருப சித்தி—விவத்தையறச்
சேரும் பலவிகற்பச் சித்தக் கலக்கமறக்
கூரும் பரத்தின் குறிப்பு.

505. வேதாந்த மெவ்வளவாத் தேர்ந்திடினுஞ் சொச்சொரு
போதாந்த மாகப் பொருந்தலால்—வேதாந்தம் [பம்
கௌணமாக் காட்டுங் கனசொருபம் முக்கியமா
மௌனத்தா லன்றி மடாது.

506. புலங்களைப்பின் பற்றிப் புலம்புமகங் காரச்
சலங்கடிந்து தனபாற் றரிப்பால்—நலங்கூர்
சுகமென் பதுதான் சொருபமே யாக
நிகழ்மவுன வாழ்வே நிலை.

507. பிறிதின்றி யெல்லாம் பிரம்ம சொரூபம்
வற்தன்று வான வளாகம்—நிறைதுன்று
சொந்த சொருபச் சுடரொளிசேர் போனவருட்
புந்தியே போதப் புலன்.

508. முனைப்பற் றெழிந்தநிஜ மோனமே பேசு
நினைப்பற் றௌிர்சொருப நேயம்—முனைப்பற்
றொளிர்சுத்த மோன வொழுக்க மியல்பா
வளர்சித்தம் முத்தி வடிவு.

509. *புதையொத் தனைத்துமெழப் பொங்கும் முனைப்பின்
உதயத் தலமோர்ந் தொடுங்கில்—இதயத்து
ஞான சொரூபமா நண்ணுமகண் டாத்துவித
மோனமே முத்தி முடிபு.

* புதை - புதை வாணம்.

510. நானற் றௌிர்சுத்த நாகரிக ஞானமா
மோனந் தியல்வதே முத்திசுகம்—தேஹனைத்
தொழிவறவே யுள்ளத் தொரேதாரை யாக
வொழுகுறுநீள் சாந்த வுணர்வு.

511. சிவத்திலே மோனஞ் செழித்தலே யுண்மைத்
தவத்தியலா ஞான சமாதி—அவித்தைசே
ருணமனப் பொல்லாங் குடையவகங் காரமுனைப்
பானபே யாட்ட மறல்

512. முத்திப் பெருவாழ்வு மோனத்தி லன்றியுயிர்க்
கெத்திறத்து மில்லையென் றேத்துமது—புத்தித்
தெளிவா லகந்தைச் செருக்கான மோக
முளையாய்ந் தெறிவே முனைந்து.

குறிப்பு:—ஏத்துமது - புகழ்ந்துரைக்கப்படும் அம் மோனம்; ஆய்ந்தெறிவு - விசாரணையால் ஆராய்ந்து களைந்தெறிந்த வியல்பு.

513. ஊனமறு முண்மை யொளிப்பிழம்பாஞ் சிற்பரத்தை
நானெனுமிவ் வூனவுயிர் நண்ணலெவன்—நானெ
[னும்பொய்
யுள்ளலற்ற மோனமே யுண்மைநிலை நான்முனைப்புற்
றுள்ளனுறி லுள்ளலென் னும்.

514. ஊனமனக் கற்பனை நீ ரொட்பவருட் சிற்பரத்தில்
யானதுவென் றெண்ணற் கிடமெங்கே—நானுதியா
வித்தகமா மோன விசுத்தப் பிரஞ்ஞையே
அத்துவித ஞான வடைவு.

குறிப்பு:—சொல்லுக்கடங்காச் சுகப்பொருளை என்னும்
தாயுமானவர் பாடல் கண்டு அறியத்தக்கது.

515. இச்சை முதலியவற் றேதுவாம் பொய்யகந்தை
பொய்ச்சொழியப் பொங்கிப் பொலிமோனம்—[சிச்சடநான்
வேறு வொழியிலன்றி வேதாவுள் ளிட்டெவருந்
தேறு மறைமந் திரம்

516. பரமான மோனம் பழுத்தலா லுள்ளத்
துரமாக வுண்மை யொளிரும்—நரமான
ஜீவன் சிவசொருப சித்தியாற் சிற்பரமாய்
ஆர்வ னமுதத் துவம்.

517. மோனக் கருத்து முகந்த வுளத்தின்மற்
றேனைக் கருத்துக் கிடமில்லை—ஊனமில்சற்
போதவொளி யானவருட் பூரணத்திற் பொய்த்
பேதப் பிழைசேர் கருத்து. [தொழியும்

518. கலைத்தொகையிற் றேடிக் கடவுளையார் கண்டார்
கலைத்தொகையி லில்லை கடவுள்—நிலைத்த
வமைதிசேர் சுத்த வறிவான மோனச்
சிமயத்தி லுள்ளான் சிவன்.

519. அறிவகத்து மோன மடைந்தாலே யன்றிச்
செறிவரிது சுத்த சிவத்தில்—அறிவு
பலவிகற்ப மாகப் படர்ச்சியற்றுத் தன்னுட்
குலவுமா ரேம்புக கூர்த்து.

520. ஒன்றிநின் றுலன்றி யுள்ளத்தே மெய்ஞ்ஞான
வென்றிசேர் சாந்தி விளைவரிது—ஒன்றியுளத்
தூன்றவுறு மோன வுணர்வேமெய்ஞ் ஞானநிஷ்டை
யான்றபர மார்த்த வியல்.

521. தாக்கற்ற போத சதாசார மோனமே
யாக்கமாப் போற்ற லறிவுடைமை—நோக்குற்
றடையவே தேர்ந்தா லதுபோ லுறுதி
யுடையதொன் றில்லை யுயிர்க்கு.

522. நிலையிலே நின்று நழுவாத மோனக்
கலையே கடவுளைக் காட்டும்—மலைவகற்ற
மற்றைக் கலையறிவு மாட்டுவதன் றுதலாற்
கற்றெழுக மோனங் கருத்து.

523. வினைப்பாச மற்று விடுதலை யாக
நினைப்புமறப் பாக நிகழும்—மனப்புன்
குறையிலா மோன நிறைவுண்மை தானே
யுறையுளாம் புக்கி லுயிர்க்கு.

குறிப்பு:—விடுதலையாக உறையுளாம் புக்கில் எனக் கூட்டுக.

524. போதங் கடந்தவருட் பூரணமா மோனத்தா
டாதங்க முற்ற வகன்றெழியும்—மோதங்
கடலாக வெங்குங் கலந்த விசும்பே
யுடலாக நீட வுயிர்க்கு.

525. பேச்சுமூச் சற்றவருட் பீடுசேர் மோனத்து
நீச்சுநிலை யற்ற நிகழ்ச்சியின்முன்—காச்சுமூச்
சென்றுசிறுர் கத்து மியல்பிற்றே பண்டிதர்பாற்
றுன்று விவாதத தொகை.

526. எட்டற் கரும்பே ரிறைமைக்கண் மன்னியமெய்ச்
சிட்டர் சிவானுபவத் தேற்றத்தாற்—சுட்டற்ற
போதாந்த மானவருட் பூரண மோனமே
வேதாந்த மெய்ம்மை யுணர்.

## 105. மோனப் பதம்

527. மோனப் பதமே முடிவாக வோங்குசிவ
ஞானப் பதமாக நண்ணுவதாய்—ஊனப்
பிறவி மயக்கப் பிழைதீர் சொரூப
நிறைவாக வுள்ள நிலை.

528. மோனப் பதத்திலே மூண்டமனம் மோகஞ்சே
ரீனப் புலத்தி லிறங்குமோ—வானளவக்
கண்ட சொருபவருட் காட்சியிலே கற்பனைபின்
னண்டுவதன் றற்றமின்மை யால்.

529. தொக்கபுல வேட்கையறத் துங்கமாப் பொங்கு [மொளிச்
சிற்கனவாழ் வுக்குமனந் தீவிரமாம்—பக்குவர்க்குக்
காமியா நின்றவருட் கைவல்ய வாழ்வுகிளர்
பூமிகாண் மோனப் புலம்.

530. மோனத் திருப்பதமே முற்ற முழுப்பதமாய்
நானற் றொளிர்சொருப ஞானபதம்—ஏனைப்
பதங்க ளனைத்தும் பரசொருபப் பார்வை
பிதிர்ந்த மனக்கற் பிதம்.

## 106. மோன மொழி

531. ஏனை மொழியா லியலா தனுபவமாத்
தானுணர்த்த முற்படுஞ்சொல் *சாகசமாம்—
கட்டுப்பா டற்ற கடவுளைத் தேற்றுவதில் [மோனமே
முட்டுப்பா டற்ற மொழி.

* சாகசம் - துணிகரமான பாசாங்கு.

532. பருவரல்செய் மோகப் பசுபாசப் பற்றல்
வெருவலறக் காத்தருளு மெய்யன்—திருவருளால்
ஊன மயக்கமற வுள்ளத் தொளிர்சொருப
மோனமே பொய்யா மொழி.

533. பொய்யா மொழிப்பொருளைப் போற்றிப் பொதுவி [லுளத்
தெய்யாமை வாழ வியல்வதன்றி—உய்யவோ
மற்றோ ருபாயமில்லை மாளுபி மானமறச்
செற்றொழிக செம்பொருளைத் தேர்ந்து

534. பொய்ம்மயக்கம் போக்குசிவ போதமொழி செம் [பொருளா
லெம்முயிர்க்கு வாய்த்தபே ரின்பமொழி—செம் [மனர்க்குச்
சீர்மழையா வாழ்வருளுஞ் செம்மொழியான் றோர
றேர்மொழியா மோன மொழி. [கந்தேற்

## 107. மோன வாழ்வு

535. கண்மயலாற் புத்தி கலங்குந்தன் னுண்மையுணர்
நுண்மைசே ருண்முகத்து நோக்காலே—உண்மை
[யாந்
திண்மைசேர் சுத்தவருட் சிற்பதத்திற் சிந்தையறல்
வண்மைசேர் மோனவியல் வாழ்வு.

536. தனிப்பட் டியல்சொருபத் தத்துவமா முத்தி
முனைப்பற் றெளிர்சொருப மோனம்—நினைப்புமறப்
பற்றவருள் வாழ்வே யசங்கமாங் கைவல்யப்
பெற்றிசேர் வெற்றி யுயிர்க்கு.

537. வாழ்வா மதித்து மனோமயமாம் பல்கதியூ
டாழ்வதாய்ச் சிந்தை யழுங்கலறக்—கேவலமா
மோனப் பதத்தை முயங்கலே தன்சொருப
ஞானத்தா லான நலன்.

538. தானே பரமார்த்த தத்துவமாந் தன்னையன்றி
யானென் றொருவ னிலாமையால்—யானெனுமவ்
வூனவகங் கார வுணர்ச்சியறப் பொங்குசுப
மோனவியல் வாழ்வே முடிவு.

## 108. அமுத வாழ்வு

539. படர்ந்த வகந்தைப் பதைப்பற் றெழியத்
தொடர்ந்து விசாரணையாற் சூழ்ந்து—கடந்த
வதுவேதா னாக வறலே யமுத
மதுவான தன்சொருப மாண்பு.

540. தம்மியலே யாகத் தழைந்தவருட் சிற்பரத்திற்
பொய்ம்மயல்சேர் தேகவகம் புத்திபோய்ச்—
[செம்மைசே
ருண்மையள வாக வொழிதலே கைவல்ய
வண்மைசே ராரமுத வாழ்வு.

541. அளக்கலரு மாட்சிசே ராண்டான் பெருமை
திளைக்கத் திளைக்கத் தெவிட்டா—துளக்க
ணமுதவூற் றாக வனுபூதி கூட்டு
மமிதமா வுள்ளு மவர்க்கு.

542. அத்துவித மான வருட்பூ ரணத்திலகஞ்
செத்துநிலை சுத்த சிவத்துவமாம்—மத்தவுயிர்ச்
சித்தமறச் செங்கோளிர்சச் சித்தவங்கூர் சாந்திமே
யுத்தமுக வாழ்க்கைப் பொலிவு.

## 109. துரீயம்

543. விதவிதமா மோகவலை வீசு மகப்பே
யுதயமறக் காண்மெய் யுணர்வால்—இதயத்
துவாரந் திறந்த துரீயவெளி வாழ்வே
சிவானந்த முத்தித் திறம்.

544. மன்னு சொரூபமா வைகும் பரமார்த்தந்
துன்னு சுபேச்சையுள்ள சுத்தர்க்கு—வன்னாஞ்
சொலப்படா மோனத் துரீயமே யுள்ளத்
துலப்பிலா வுண்மை யொளி.

545. பரிபக் குவத்திற் பளிச்சென் றகத்தே
தெரியக் கிளர்துரியந் தேறின்—மருவுசிவ
போதமா மந்தவருட் பூரணமே தன்னியல்பாய்க்
கேதமன மாயை கெடும்.

## 110. துரீயமே துரியாதீதம்

546. அரியமெய்ஞ் ஞான வருட்பரமே சொந்தத்
துரிய சொரூபச் சுடராத்—தெரியலால்
அத்துரியந் தானே யதீதமா வோங்குபர
தத்துவமென் றுள்ளந் தரி.

547. துரியமா மோன சொரூபமே சுட்டற்
கரியதா முண்மை யதீதம்—பிரிவற்
றேதற்குமதிட் டானமா மேகசச் சித்தாப்
பதுக்கமா வுள்ள பரம்.

## 111. அதீத நிலை

548. அளவைக் களவையா மான்மவுரு மற்றை
யளவைகளுக் கெல்லா மதீதம்—உளதா
மதனுருவே யான வருளறிவா லன்றி
யதனுருமற் றோர்த லரிது.

549. அருமையா வுள்ள வதீந்திரிய வுண்மை
இருமையற்ற தன்மெய் யியல்பே—பெருமைசே
ரான்ம சொரூப வருட்பரத்தை யாவரித்த
தூனகந்தை யாம்பொய் யுயிர்ப்பு.

550. அறிவாக வுள்ளபர மார்த்த சொரூப
நிறைவான ஞானமே நிட்டை—செறிவாமந்
நிட்டானு பூதி நினைவுமறல் சிந்தனைக்கே
யெட்டாத்தன் றுண்மை யியல்.

## 112. உலகோர்க் கிரங்கல்

551. அறிவொளியாந் தன்மெய் யகத்திற்றோன் றந்தப்
பிறிவுபடு பேத மனைத்தும்—அறிவறியாப்
பாமரனோர் மோகவகப் பாசபந்தப் பட்டுடலிற்
*பார்மயலாற் பாழ்படுகின் றான்.

* பார்மயல் - உலகமயக்கம்.

552. ஆண்டானுக் கன்பா லடியர்சொல் பல்லாண்டவ்
வாண்டா னருளாலவ் வன்பர்க்கே—ஈண்டுபல
பல்லாண்டா மேன்மேற் பயன்படலாற் பாடுகசேர்ந்
தெல்லாரும் பல்லாண் டினிது.

(கொச்சகக் கலிப்பா)

553. சித்திகளிற் சற்றுமே சித்தங் கலங்காது
சுத்தவருட் கேவலமாத் துன்றும் பரமார்த்த
முத்தியியற் பேரின்ப மோனமெய்ஞ் ஞானமே
அத்தனளித் தென்னை யருளியவா வச்சோவே.

554. என்பு நெகு மெய்யன் பிலாதமட வேழையேன்
அன்பறியாத் தென்னைமெய் யன்புருவா வாண்ட [வன்பே
ரின்பமலர்த் தாளி லிசைந்தொழுகி வெம்பிறவித்
துன்பவுணர் வோயத் துலங்கியவா றோணோக்கப்.

555. பாழைக் கடந்து பராபரமாத் தங்குசிவச்
சூழலே யுள்ளமாத் தொக்கொளிரக் கண்ணோக்கா
வேழைத் தொழுத்தையேற் கின்னருள்செய் தாண்ட [வினை
தோழமையபா டிப்பாடித் தோழிகளோந் தோணோக் [கம்.

556. ஆழமயக் கத்தி லமிழ்த்திருமை யாவுலகப்
பாழையருட் பார்வையாற் பாரத் தூரியமோனச்
சூழலாக் கண்ட சுயஞ்சோதி சீர்பாடிச்
சாழல் விளையாடத் தங்கையீர் வாரீரே.

557. வேற்று விகார விடக்குடம்பே நானென்பவப்
போற்றியவென் மோகப் புலைமயல்செற் றென்னுருவு
தோற்றமறை வற்ற சொருபவருட் சிற்பரமாத்
தேற்றினைச்சீர் பாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

558. மனக்கற் பனையை மடிந்தொழுக்கி வென்றித்
தனக்கொழியா தென்று(ம்)மனச் சஞ்சலமேன்
முனைக்கு மகந்தையின் மூடனுஞ் சீவன் [றாரான்
வினைக்கடலின் மூழ்கி விளிந்தொழிகின் றானே.

559. ஒருவலற் றெல்லா வுயிருள்ளும் ஒன்று
மருவுற் றொளிர்சொருப மாட்சியைத்தாந் தேறார்
உருவுற் றெழுந்தபா மூத்தை யகந்தைக்
கருவுற்ற கற்பனையிற் கண்கலுழ்கின் றாரே.

560. அருட்காணி யாட்சி யகத்திருக்கை நோக்கா
திருட்கே வலத்தா டியல்சொப் பனத்தே
மருட்காணி தேடி மயங்கு மனத்தர்
வெருட்கேத முற்று விளிதலுற் றாரே.

561. துங்கமார் சொந்த சொரூபமா வுள்ளத்திற்
பொங்கும் பரசிவத்திற் புக்கொடுங்கும் புத்திபோய்க்
கங்குகரை யற்றமனக் கற்பனையிற் காதலால்
அங்குமிங்கு மோடி யலமரல்காண் பேதைமையே.

562. உள்ளும் புறம்புமொருங் கொக்கவனைந் துள்ளமாந்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமாந் தன்மையைமற்
றெள்ளி யிகழ்ந்துநா னென்னுமனக் கற்பனையில்
வெள்ளவியா கூலமுறல் வெற்றவெறு மோகமே.

563. விந்தையிலும் விந்தை விசுத்தப் பரவெளியே
சொந்த சொரூபமாத் துன்றலா னுள்ளபடி
எந்தவித பந்தமுந்தா மில்லாதோர் சொப்பனமாம்
பந்தமனக் கற்பனையிற் பட்டுக் கலங்குவதே.

564. பிள்ள வொண்ணாத பிரம்ம சொரூபத்தைக்
கள்ள வகந்தைமனக் கற்பனையால் வேறுபடத்
தள்ளித் தமக்கயலாத் தாமுலகப் பாழ்வெளியில்
வெள்குற் றழுங்குவது மிக்க விசித்திரமே.

565. சுத்தமா வுள்ள சொரூபப் பரவுணர்வு
மத்தமனக் கற்பனை மாயாசத் தித்திறத்தாற்
பொய்த்தொழிய முப்புடியிற் புத்திக் கலக்கமுற்றுச்
செத்தொழிதல் போலும் செடமக்கள் ஜீவியமே.

566. ஏமவைப் பான விதயத்தே சுத்தவருட்
சேமநிதி யானசிவச் செம்பொருள்கண் டுய்யாதார்
காமனையாற் பாசமனக் கற்பனைக்கட் டாமுலகில்
யாமெமதென் றேங்கி யிரங்கிக் கவங்குவரே.

567. கண்டிக்க வொண்ணாத காட்சியாஞ் சுத்தசச்சித்
தெண்டிக்கு மொன்று வியைந்திடவும் பின்னமின்றி
மண்டிக் கிடந்து மயக்கமனக் கற்பனையாற்
கண்டித் துயிர்கள் கலங்குவதோர் சித்திரமே.

குறிப்பு:—பின்னமின்றி இயைந்திடவும் எனக் கூட்டுக.

568. தான்றானா வுள்ளசிவ தத்துவத்தி லானதுவென்
றான்ற துபசாந்த யோகவுணர் வாலுளர்த்து,
யான்றே துவித மமேமையக்கக் கற்பனையு
டேன்று மிதுவதுவென் றிங்குமங்கு மோடுவரே.

569. இன்பவறி வான விதயசொரு பத்தைமறந்
தன்மேனவெம் பாச வளக்கரில்வா பூந்தகர்பம்
றின்பதுன்ப மான விரட்டைமனக் கற்பனையிற்
புன்புலமே துய்த்துப் புலம்புவா ரின்பமென்றே.

570. பொக்க வெறித்த வியாமோகப் புன்செருக்கால்
நித்தசுத்த புத்தமுத்த ஞேயவுணர் வற்றொழிய
மத்தமனைக் கற்பனையின் மாறிமா றிச்சுழன்று
பித்த வுலகிற் பிறந்திறப்பர் பேதையரே.

571. யானா ரெனவே விசாரித் திதயத்துத்
தானான வுண்மையைத் தாமறிந்து துய்த்தலன்றி
ஏனோ வுடலுலகை யானெனதென் றெண்ணிமருண்
டானதை கற்பனையு டாழ்ந்து வருந்துவதே.

572. காண்பான் சொருபமே காணக் கடவதொரு
மாண்பான தத்துவமா மற்றயந் துணையாதார்
காண்பான மாயமனக் கற்பனையு டாழ்ந்தாழ்ந்து
வீண்பாழ் படுகின்றார் மெய்ம்மை யுணராரே.

573. உருவ வகந்தையற வூடுருவித் தம்முட்
பரவு மகண்டவருட் பானத் துரியப்
பரவெளியே தம்முருவாய்ப் பற்றாதோர் மோக
வுருவெளியா மிவ்வுலகத் துற்றுழல்கின் றாரே.

574. தானாக வுள்ளபர தத்துவத்தை மோனவருள்
வானாகக் கண்டறிந்து வாழ்வுசிவ மாகாமல்
ஏனோதான் யானெனதென் றேங்கிமனக் கற்பனையில்
மானாபி மான மயக்கால் வருந்துவதே.

575. ஊனமனக்கற்பனைச் சுட் டோய்ந்தொடுங்க வுள்ளத்தே
நூனமற்ற வெற்றறிவே நோக்கமா வோர்க்கிலுரு
மோனவெளி யாக முடிதலாற் றன்னுண்மை
யானெனதென் றெண்ணி யிரங்கலந்தோ
[பேதைமையே.

குறிப்பு:—உரு ஓர்க்கில் எனவும், தன்னுண்மை முடிதலால் எனவும் இயையும்.

576. அடிப்படையா முண்மை யறிவுருவே தாமாத்
திடப்படவே தேறத் தெளிந்தொழுக மாட்டார்
மிடிப்படுபாழ் மாயா விலாச வலைப்பட்
டிடர்ப்படவென் றென்றும் பிறந்திறந்தெய்ப் பாரே.

577. என்றென்று முள்ளபே ரின்பவியற் செம்பொருளாத்
துன்றுந்தம் முண்மையைச் சோதித் தறியாதார்
கன்றுமகங் காரக் கருத்தா வுருத்தெழுந்து
பொன்றுகின்றார் மோகப் புணரியாம் புன்புலத்தே.

578. வண்மைசேர் தம்மெய்யே வாழ்வா விதயத்து
நுண்மையுற நோக்காதார் நொய்தா நுடங்கலுற்றார்
விண்மையே போல வெறுங்கற் பிதமாக
வுண்மையலாற் றேன்று முலகக் கனவிலே.

குறிப்பு:—உண்மையலால் - தனது அஞ்ஞானத்தால்.

579. நயக்கலுற்றுப் பொல்லா நடலைகளை வஞ்ச
மயக்கமனப் பாழகத்து மாழ்குவார்; தம்மை
யியக்குகின்ற தெய்வ வியற்பரத்தை யெண்ணி
யுயக்கமற வாழு முபாயஞ்சூ ழாரே.

580. தன்னுண்மை யோர்ந்து தரித்தலே சித்தியன்றித்
துன்னுமணி மாதிசித்தி சொப்பனமார் கற்பனையே
என்னுமுண்மை யோரார் இயோக முயற்சிகளை
அன்னவற்றுக் கேசெய் தவிச்சையிலாழ் கின்றாரே.

குறிப்பு:— சித்தமா யுள்பொருளை’ என்றும் உள்ளது நாற்பது (35) ஈண்டு நோக்கத் தக்கது.

581. வியக்குற்று மாயா விசித்திர வாழ்வை
நயக்குற் றுடலையே நானென்று நம்பி
உயக்குற மேன்மே லுலகத் துழக்கும்
மயக்க மனிதர் மதிப்பிழை யென்னே.

582. சீமான் பரம சிவசக்தியே தற்சேர்ந்தார்க்
காமா றளிக்குமோ ராண்டவன்மெய்ஞ் ஞானவருட்
கோமான்பார் சென்றிரப்பர் குப்பைகளுஞ் செத்தை
காமாதிகளா னறிவுகலங் குற்றோரே. [களர்

583. நானற் றெழுந்தமெய்ஞ் ஞானியர்யா தொன்று
[மற்றோர்
தீனமில்லே ரின்பந் திளைத்திடந்தாங் கண்மழுந்தும்
ஊனவகப் பாழி லுழன்றே கலங்குலகோர்
ஈனமனப் பான்மை யிரங்கமிகத் தக்கதே.

584. தள்ள வொணாதமெய்த் தத்துவமா யார்பாலும்
உள்ள விறைவனைத்தா முள்ளியுளத் தோராது
கள்ள மனத்தாற் கலங்கிக்கா ராணவப்பா
ழள்ளலில்வீழ் தந்தோ வழங்கலென்ன பாவமே

585. ஆழ்வுற் றறிந்தா லகத்தே யனுபவமாச்
சூழத் துலங்கு துரீய சொரூபவருள்
வாழ்வுக் குரியதம் வாணாளை வீணாகப்
பாழுக் கிறைத்துப் பரிதபித்தல் பாவமே.

586. தொல்லை யனாதியாத் தொக்க வவிச்சையாற்
புல்லியதா பத்திரயப் புன்பிறவி போகநமக்
கெல்லையில்லே ரின்பவருள் வாரிதியை நள்ளிதயத்
தொல்லையுணர்ந் துண்ணநீர் நண்ணரி ருவகீரே.

587. மட்பகையம் மண்ணைத் தெறுவதுபோல் வையகத்திற்
கட்புலமாத் துன்றுகலி காலப்பா ழாசையுளார்
வெட்பகையாக கூடி யுயிர்த்தொகையைக் கொல்வது
[கண்
டொட்பமுற்ற நல்லோ ருளங்கரைந்து விம்முவரே.

588. பரசிவமா மோனப் பதவாழ்வே பொன்றுத்
திரசுபமாத் தேறித் திளைப்பர்நல் லான்றோர்;
அரசறிய வீற்றிருந்த வாழ்வே யலாதவ்
வரசியலே தானு மழிந்துபடு மன்றே.

## 113. உலகோர்க் குபதேசம்

(வெண்பா)

589. ஈனமதி செய்ய வெளியரல்ல ரானெனும்பொய்ம்
மானமற வேற்றுண்மை மாதவத்தோர்—ஞான
வயிராக் கியத்தில் வளருங்கம் பீரம்
அயிரா வதத்தாற் கரிது.

590. ஆண்டவனுக் கன்றி யடியாருக் குண்மையா
வீண்டுவதன் றெந்தப் பொறுப்புமே—ஆண்டவன்
அன்பொழுக்க மான வருட்பத்தி நாட்டமே [பால்
மன்பதைக்கு வாழும் வகை.

591. இறைவனருட் பார்வை யிதயம்பே ரின்பத்
துறையாகக் காவுந் துணிபால்—குறையிலார்
யாரு மிலாமையா லீசனருட் செம்பதமேல்
லோரு நினைக வுளத்து.

592. உடைமை துடைக்கின் றெதுக்கலுறி னுங்கே
கடமையாம் பந்தங் கடுகும்—உடைமையாம்
பற்றிரண்டு மற்றுப் பரவெளியில் வாழ்வார்க்குத்
தொற்றலெவன் பந்தத் தொடர்பு.

593. இன்பமென் றெண்ணி யெகிர்கனவைத் தோயாதே
துன்பமத னோடு தொடர்ந்துவரும்—இன்பதுன்ப
கொந்தமியல் பொய்க்கனத் தோற்றமில்சச் சிற்
பந்தமில்பே ரின்பப் பரம். [சொருபம்

594. உடலளவே யாக வுயிரை யுணரும்
மடமா ரகந்தை மதியே—உடல்தொறுஞ்சச்
சிற்பரமா வார்ந்தொளிருந் தேவன் குருநாமணான்
தற்பரமா வோய்ந்தா னெனல்.

595. சிவத்தி லழுந்தித் திளையாத சிந்தை
பவத்தி லழுந்திப் பதைக்கும்—சிவத்திற்
சரண்புக் கொடுங்கிச் சலவகந்தை மாளப்
பூரணம் புணர்தல் பொருள்.

(கொச்சகக் கலிப்பா)

596. மானவா! மாய மகிமையாமாத் தோற்றுலகத்
தேனவா வாலே யிலவுகாத் தேங்குகின்றாய்?
ஞான சொரூபகுரு நாதன்பா லாராய்ந்து
மோன வருட்பரமா முற்றுதி நின் னுண்மைகண்டே

குறிப்பு:—மானவா – மனிதா.

597. ஆணியா வுள்ளவென் னுண்டா னடியரைநல்
லேணியா வின்ப வியற்பாத்துக் கேற்றுகின்றான்
பாணியா தேவிரைந்து பத்தரா யுள்ளத்திற்
காணியா வுள்ளவருட் கைவல்யங் காண்பீரே.

குறிப்பு:—பாணியாது – தாமதியாது.

598. கதுவுவன யாவுமனக் கற்பனையே யாகப்
பொதுவெளியா வுள்ளவருட் பூரணத்தைப் போக்கி
இதுவதுவென் றேமனத்தா லெண்ணியினை கின்றீர்
கதவுகின்றேன் யாரெனநு முண்மையைக்கா
[ணீரே.

599. கண்டுகொண்டே யுண்மைக் கடவுளை நா
[னுள்ளத்திற்
பண்டுபோ லென்றும் பராற்பரமே யாகவுளான்
மிண்டுசெய்து நீரவனை வேறுபடுத்தா தீர்
உண்டென்று மவ்வளவா யோரா ரவனுநீவே.

600. உளந்துன்றி யென்னுயிரா வோங்குவது சற்று
மிளந்தெய்வ மென்றெண்ணி யெள்காதீர்! முற்ற
வளந்துன்று மிக்கபெரு வாழ்வளிக்குந் தன்மெய்
தெளிந்தன்றி யாருஞ் சிறப்புறவொண் ணாதே.

## 114. உயிர்க்கு உறுநிலை

(வெண்பா)

601. அறிவொளியா யென்னை யகத்தே விழுங்கி
வெறுவெளியா மிஞ்சியதன் மெய்யால்—வெறுவிதாத்
துன்று மதீத சொரூபமே போலுமுயிர்
மன்னு பராங்கதியின் மாண்பு.

## 115. சமயம்

602. நாரா யணத்தின் நமசிவயம் வேறன்று
நாரா யணமே நமசிவயம்—நேராக
நாராய ணாய நமவென்பார் ஞானவருட்
சீரா யமர்வர் சிவத்து.

603. அதாய்ந்தறியும் பன்மதமு மவ்வவற்றுக் கேற்ப
யதார்த்தமே யான வியல்பால்—மதாந்தரத்தே
மாச்சரியங் கொண்ட மதவாதி சாதனையோர்
பேய்ச்சரியை யான *பிழைப்பு.

*பிழைப்பு - தவறு

## 116. உலகு

604. புத்திப் புலந்தெளிந்து போதமா நின்றுணரில்
வித்தகசிற் சத்தி விலாசங்காண்—சுத்த
நிருவிகற்ப மாக நிகழ்சொருபத் தாலூ
டுருவலுற்ற மாட்சி யுலகு.

605. வெளியாக வுள்ள விசுத்த சொரூப
வொளியன்றி யில்லை யுலகம்—களிசே
ரகந்தைமுனைப் பற்ற வகிலமுந்தா னேக
முகந்துலங்கும் மோன முதல்.

606. என்றுமொன் றாக விருந்தொளிர்சச் சிற்பரத்திற்
றென்றுதொட்டுந் தோன்று விவர்த்தமாத்—துன்
[றுலகு
மாயைப் புணர்ப்பின் மயங்கினேர்க் குண்மையிற்
றாயப் படுத லரிது. [றென்

## 117. உலகு பொய்

(குறள்)

607. மயக்க மனக்கற் பனைசொப் பனமே
துயக்குறுவெம் பாச வுலகு.

608. நல்லா ரிதமித்து நள்ளத் தகாதுகாண்
பொல்லா வுலகப் புலம்.

609. அறிவாந் தனையலதின் றுமுலகைத் தன்னிற்
பிறிதா வறிதல் பிழை.

610. அவ்வவர்க் கேற்றவா றவ்வதையேற் கொண்டொழுகல்
எவ்வெவர்க்கு மேற்புடைத் தாம்.

## 118. உலகறிவு வெறும் மோகம்

(வெண்பா)

611. மனோமயமா வாழ்வோர் மயக்கமறத் தேறார்
மனோமயமா மிவ்வுலக மாயம்—மனோமயமே
யாக முடிதலா லன்று ருலகறிவு
மோகமே முற்றவெனத் தேர்.

612. கைவல் லியந்தானே கண்ணுங் கருத்துமா
உய்யவுற்று ருள்ளத் தொளிர்தலால்—ஐயுணர்வாம்
பேத மயக்கவகப் பேயறிவற் றன்னவருட்
போதவெளி யாமிவ் வுலகு.

குறிப்பு:—கண்ணுங் கருத்துமா ஒளிர்தலால் என
இயையும்.

613. உள்ளத் தியல்பா வொளிர்சொ ரூப மோனவருள்
வெள்ளப்பே ரின்ப வெளித்திரையில்—அள்ளித்
தெறித்தநிழற் புள்ளித் திரளேகாண் மெய்போ
லுறத்தெரியும் மாய வுலகு.

614. இகபரங்க ளாக வெதிர்படுப வெல்லாம்
அகவொளியே யாக வறிந்தேன்—நிகழ்வுறுமச்
சாயைகளைத் தன்பாலாத் தாங்குதிரைச் சீலைசச்சித்
தாய சொரூப வகம்.

615. தெரிவுலகு சுத்த சிவத்திலே யென்பர்
தெரியுலகு சுத்த சிவமே—தெரியுலகைத்
தேர்பவனு மன்றித் தெரிவுஞ் சிவமயமா
வோர்தலுறத் தக்க துடைத்து.

616. தள்ளலரும் போத தயாசொருபப் பாதவருள்
வெள்ளவொளி யாக விளங்குகில்—கள்ளமனத்
தோற்றத்தா லன்றித்தன் சுத்த சொருபவுண்மைத்
தேற்றத்தி லில்லை பழுது.

617. அடிகளையே யெண்ணி யறிவொளியா முண்மை
யடிகளர்மோ னத்தா லறிந்தேன்—குடிகளாய்
உன்னடிக்கீழ் வாழு முயிர்த்தொகையோ டிவ்வுலகவ்
வுன்னுருவே யாக வுளத்து.

618. கானற் புனலுங் கனவுப் புலமும்போல்
ஈனமில்சின் மாத்திரமா வேய்வதுகாண்—தானருளச்
சும்மா சுடர்தன் சொருபானு பூதியாற்
பொய்ம்மாய வாழ்க்கைப் புலம்.

619. அருட்பூ ரணமா வறிவு விளங்கின்
மருட்புலமாங் கற்பனை மாயும்—உருப்பழுதை
மந்தவெளிச் சுத்தரவா மாறுபட்ட தோற்றரவு
விந்தையா மாயும் விதம்.

## 119. உலகு பரம்

620. வித்தகமாத் தோன்று விசித்திரமா முப்புடிதன்
மத்தமனக் கற்பனையே மற்றன்று—சுத்தப்
பரமான தன்சொருபப் பார்வையாற் காணிற்
பரமேயாத் தோன்று முலகு.

621. கற்பனையாம் பேதக் கருத்தான மோகமே
சொப்பனமா முப்புடிக்குத் தோற்றுவாய் சிற்பரமா
மோன சொரூப முகத்திலருட் கேவலமாந்
தானலா தில்லை ஜகம்.

### 120. உலகு பரமே சொரூபத்தில்

622. வடிவாவ துண்மையிற் சிற்பரமே ஞான
முடிவா மதுசுத்த மோனம்—புடியான
கற்பனை பேதக் கலக்கமங் கின்றுசு
வொப்பமா மிந்த வுலகு.

623. தன்னையறிந் தான்றதிட கத்துஞா னிக்குத்
றன்னியமொன் றில்லையறிந் தாரவே—கல்வியமாம்
கேவலசச் சித்திற் கிளர்முப் புடியுலக
வாழ்வனைத்து மோர்தன் மயம்.

குறிப்பு:—அறிந்தார - அறிந்தனுபவிக்க: ஈண்டுக் கிளர்தல் - அசையாத் திரைச்சீலையில் அசையும் படக்காட்சி போல் அத்தியாசமாகத் தோன்றுதல்.

624. குலவு சொரூபவருட் கோலவொளிப் பாதத்
துலகனைத்துந் தன்மயமா வொன்ற—மலர்சொருப
வித்தகமாங் காட்சி விலாசத்திற் சற்றுமறப்
பொய்த்ததுபல் பேதப் புலம்.

### 121. காட்சி கண்ணேயாம்

(குறள்)

625. காணப் படுவதன்று காட்சியின்மெய், கண்ணேயா
மாண விளங்கலின் மற்று.

### 122. காட்சி யுண்மை

(வெண்பா)

626. காணக் கடவதொரு காட்சி கலக்கமறப்
பூணக் கிளர்சொருப போதமே—மாணக்
கடவதது வன்றிக் கனவே நனவாப்
படர்விகற்பக் காட்சி பழுது.

627. திருவருட்பே ரின்பச் செழுங்கனியாம் பாத
*வுருவிருப்பாம் பத்தி யுணர்வால்—அருவருப்பா
வைம்புலச்சிற் றின்பமய மற்றொழிய வுற்றொளிருஞ்
செம்புலமே காட்சித் திறம்.

*உரு - சொரூபம்.

## 123. முப்புடி

628. காண்பான் சொரூபமல்லன் காண்பானுந் தன்மை [யிலே
காண்பான் சொரூபமேற் காண்டலிலன்—காண் [பனவா
முப்புடியுந் தாயகமா மோனவருட் சிற்பரத்தின்
செப்படி வித்தைத் திறம்.

629. பிரிவறநிற் கின்ற பிரம்ம சொரூப
குரவனருட் கண்ணாற் குறிக்கிற்—கரவுறும்பொய்ம்
மாயா விலாச மனோமயமாய் முப்புடிகள்
சாயா சமூகமே தாம்.

630. சிற்பரமே யாகச் செறிந்தசிவ ஞானிதன்
பொற்புறுமெய்ப் பார்வையாற் போற்றலுறின்—முப்புடியின்
பேத விகற்பப் பிதிர்ச்சியெலாம் பெட்புறுசிற்
போதவருட் செம்பொன் மயம்.

631. பொய்ஞ்ஞால மான புலப்பாடு தன்சொருப
விஞ்ஞான சத்தி விலாசங்காண்—மெய்ஞ்ஞானம்
பொன்னேபோ லுண்மைப் பொருளாக முப்புடியும்
பொன்னணிகள் போற்சின் மயம்.

## 124. முப்புடிகளும் பரமே

632. அஞ்ஞான சூனியத்துக் கப்பா லிருந்தொளிரும்
மெய்ஞ்ஞான மான விசுத்தசிவன்—அஞ்ஞான
மோகக் கலக்கமா முப்புடிகள் சிற்பரமே
யாகக் கலந்தருள் வான்.

633. மோனவெளி யாகமுழு மகண்ட கூடமுற்றுத்
தானியல்கை வல்ல சதாசிவமே—யானெனதென்
றெல்லாமு மாக விதயத் தொளிர்சொரூபம்
பொல்லாத பேதம் புணர்ப்பு.

## 125. அதிஷ்டான உண்மை

634. சுட்டறிவு நோக்காலே சூனியமாய்ப் பூரணமாய்ச்
சுட்டறிவு கெட்டாற் சுடர்வதாம்—துட்டவறி
வான வகந்தைக் கடிப்படையா மவ்வுண்மை
நானென் பதன்மெய்ப் பொருள்.

635. அறிவொளியா மெந்த வதிஷ்டான வுண்மை
யுறைவதோ வாருயிருக் குள்ளே—குறிகுணந்தீ
ரந்தவருட் கேவலத்து டாழ்ந்ததுவே தானனை
சொந்தவியல் வாழ்வே சுபம்.

636. அறிவொளியாந் தானே யதிஷ்டான மாகச்
செறிவதா முண்மை செகத்துக்—கிறையளவும்
மற்றோ ருறுதியில்லை மாயமனக் கற்பனைமுற்
றற்று லறிபடுமம் மெய்.

637. அற்புதமாத் தோன்று மகிலபே தங்களுக்கும்
தப்பலரு சாந்த சதாசிவமாய்ச்—சிற்பரமா
மோனவெளி யான முழுமுதலே யாலயந்தா
னானவதிஷ் டான மறி.

## 126. அதிஷ்டானம் சொரூபம்

638. தாழ்வற்ற சுத்த சதாசிவமே *தொந்தமற்ற
வாழ்வுக் கடிப்படையா மன்னுவது—வாழ்வுதாழ்
வூழ்வகையா லான வுடலுயிருக் கன்றியில்லை
பாழ்கடந்த தன்சிற் பரத்து.

*தொந்தமற்ற வாழ்வு:—வாழ்வு தாழ்வு முதலான சகல கற்பனை தொந்தங்களுங் கடந்த தன்னியலான பாரமார்த்திக வுண்மை வாழ்வு.

639. அதிட்டான மான வாருட்கே வலத்துக்
கெதிர்த்தான மாகுமற்றென் றில்லை—சதிர்க்கார்
சொரூபமாத் துய்க்குமது சுட்டறிவுக் கெட்டா
விருபவிழி யான வெளி.

## 127. ஒரெழுத்து

640. ஊமை யெழுத் தென்றுவழுங் கோரெழுத்தே யொட்ப
சேமவெழுத் தாகச் சிறப்பதாய்—நாம [முடைச்
வெழுத்துக்கட் கெல்லா மிதயமாய் மிக்க
வழுத்தமா வுள்ள தகத்து.

## 128. பரம்

641. அகம்புறமென் றென்னு மகந்தைமறி தோர
வகத்தும் புறத்து மரிதாய்ப்—பகுத்தறிவார்
பேதமகல் சுத்தப் பிரம்மமென் றோதுபந்தப்
பாதமெலா வற்றின் பரம்.

642. முளைத்த வகந்தை முனைப்பற் *றொழிந்த
வுளிதன் னியல்பா முறுவா—உளத்தே
தொடர்ந்தொளிர்சுத் தான்ம சொரூபமே யெங்கும்
படர்ந்தியல்சச் சித்தாம் பரம்.

*ஒழிந்தவுளி — ஒழிந்த விடத்து

643. ஏகலிங்க மாக விருந்தொளிர நானவித்து
நீகலங்க வூனகந்தை மோகமே—ஓர்களங்க
மற்ற சொரூப வருட்சிற் பரவெளியாற்
பற்றுது யாதோர் பழுது

## 129. பரம் மோகபுத்திக்கு அகோசரம்

644. இனைத்தென் றறிதற் கியலாது யார்க்கும்
தனித்தொளிர்சச் சிற்பரமாந் தன்மை—புனைந்தோர்
தெரிதலருஞ் சுத்த சிவாத்துவித மான
பெரியபரஞ் சோதிப் பிழம்பு.

(கோச்சகக் கலிப்பா)

645. நம்மையே யுள்ளத்து நாமாரென் றுய்ந்தறியாப்
பொய்ம்மயல்சேர் மோகப் புரட்டான புத்தியைக்
டம்மநா மெவ்வா றறிவோமோ வத்துவித [கொண்
மெய்ம்மைசேர் சுத்த வெளியாம் பரத்தையே.

## 130. பரத்தில் கற்பனையில்லை

(வெண்பா)

646. சித்திரமா முப்படிகள் சேர்ந்த சிதாபாசச்
சித்தவியா பாரமுந்தன் சேர்ந்தெனினும்—சுத்தவருட்
சிற்பரமா மோனச் சிவத்தினுள்ளவாங் கென்றுமில்லை
கற்பனைசே ரந்தக் கருத்து.

## 131. பரவித்தை

647. மருண்டமனக் கற்பனையை மாற்றியுளச் சூழ்ந்து
திரண்டதன் னுண்மை தெளிந்தால்—இரண்டற்
றொருவத்து வாக வொளிர்சொரூபத் தாமே
பரவித்தை மோனப் பதம்.

## 132. பரந்தாமம்

648. அறிவை வழிபட் டடங்கு மகத்தின்
பொறையே யருட்பரமாம் பூமி—நிறைவா
வொளிபரந் தாம வுறுதிசா னுண்மை
வளர்சொருப மாட்சிசேர் வைப்பு.

## 133. பரவசம்

649. சிவசொருபக் காட்சி திளைத்தலாற் சித்த
மவசமா நிற்குமெய் யன்பர்—அவசமே
சுத்தமெய்ஞ் ஞான சொரூபக் தெளிவோடு
நித்தமுற வேண்டு நிலை.

## 134 சிவம்

650. சற்கதியா நீடு சதாசிவமாஞ் சிற்பதத்தின்
மிக்கதியா தொன்றுமலே மெய்ம்மையே—பொய்க்
[கதையாத்
தோன்றி மறைந்தொழியத் தூன்றும் பிறகதிகட்
கான்றவதிஷ் டான மது.

651. பொக்கமா மோகப் புணர்ப்பாம் புலத்திலே
துக்கமன்றி யில்லை சுகமுயிர்க்கு—மிக்க
சுபமான மோன சொரூப வொளிசேர்
சிவமே மனோரஞ் சிதம்.

652. போற்றக் கடவநருட் புண்ணியனும் போகதரு
தேற்றிக் கொடுத்தசிவச் செம்பதமே—வேற்றுப்
பதங்களுக் கெல்லாம் பரமா வொளிர்மெய்ப்
பதங்காண் சிவச்செம் பதம்.

## 135 சுத்த சிவம்

(குறள்)

653. சுத்த வறிவே சொரூபப் பரந்தாமம்;
வித்தகர்க்கே விள்ளு மது.

(வெண்பா)

654. அனந்த சிவானுபவ மாரத் திளைக்கை
மனந்தன் னுருவழிந்த மாட்சி—நினைந்துழல்பொய்
யூனவகங் கார வுயிர்ப்பற் றொளிர்சொருப
மோனமனஞ் சுத்த சிவம்.

655. அனந்தமுமொன் றாக வறிவறியாப் பெற்று
மனந்தெளிந்த மோனவருள் வைப்பிற்—கனிந்தியல்
போதானு பூதிப் புணரியாப் பொங்குசிவம் [சற்
போதாந்த மாமெய்ப் பொருள்.

656. பேதமகல் சுத்தப் பிரம்மமாஞ் சிற்பரமே
வேதமுடி வான விழுப்பொருளாம்—போத
முனைப்பா மகந்தை முடிந்த வகத்தே
தனிப்பரமா நின்றொளிருந் தான்.

(கொச்சகக் கலிப்பா)

657. எந்தநோக் கந்நாலும் யானென்னும் மோகமகிந்
தொந்தமற முற்றுந் துறந்தொழிந்த சுத்தியே
சொந்த சொரூபத் துலக்கமா மத்துவித
விந்தைசேர் மோன வெறுவெளியா முண்மையே.

## 136. சிவக்கேவலமே செம்பொருள்

(குறள்)

658. அறிவாக வுள்ள வனந்தசிவத் தன்மை
அத்வேது மில்கே வலம்.

(வெண்பா)

659. உள்ளதொரு காலு மொழியாது முப்புரகள்
கள்ளமன மாயை கரப்பதால்—வெள்ளவருட்
சிற்பரமா வுள்ள சிவசொருபக் கேவலமே
தற்பரமா வுள்ளவுண்மை தான்.

660. மோனமா மூண்டொளிரும் முத்தி சொரூபவருள்
வானமே யாக மனங்கரைதல்—யானெனதற்
றுர்தற் பரத்தூ டமுந்துசிவ யோகத்தாற்
சேர்தக்க சித்தித் திறன்.

குறிப்பு:—முத்தி சொரூபமான அருள்வானம் என்க.

## 137. சிவத் தியானம்

661. சிவாயநம வென்னுந் திருமந்திரத்தாற்
சிவாலயமே யாவொளிரச் சித்தப்—சிவானுபவ
வாழ்வான வுண்மைநிலை யாய்த்நலா றுள்ளத்திற்
பாழ்வா தனைபாழ் படும்.

662. சித்தந் தெளிந்து சிவாயநம வுண்மையொளி
பத்தியிற் போதயாப் போற்றலே—நித்தசித்த
மான வருட்பதத்துக் கன்புறவு தன்மயமா
மோனவழி பாட்டு முறை.

663. ஒக்கவோ வன்றித் தனித்தோ வுளத்தூடு
மிக்கமெய் யன்பு விளைத்துநீர்—நெக்குருகிச்
சிந்தித்துப் போற்றிச் சிவாயநம வென்னிழுப்மைப்
பந்தித்த பாச மறும்.

664. சிவாயநம வென்றுசதா சிந்தித் திருக்கிற்
சிவானுபவ மோனமகஞ் சேரும்—சிவாயவுஞ்சம்
முள்ளமே யாக வொளிர்சொருப மேசிவமாக்
கள்ளமற வுண்மை கலந்து.

## 138. சிவோஹத் தியானம் பயனற்றது

665. காணுக நின்ற சதாசிவத்தே தன்னிழப்பால்
மோனனுபூதி முயங்காது—நானென்
றகங்கரித்துச் சுட்டி யதுநானென் றெண்ணல்
அகந்தைமனே நாசமெவ்வா றும்.

## 139. சிவஞானம்

666. பட்டப் பகலிற் பனிமதிபோற் சீவமதி
வெட்கிக் கவிழ்ந்தூபுகும் வெள்குமாம்—கெட்ட
வவிச்சை யிருட்பா ழறச்செற் றகத்திற்
சிவச்செஞ் சுடர்கிளர்ந்தக் கால்.

667. பத்தித் தெளிவாம் பரிசுத்த நேயமுற்ற
சித்தத் தொளியே சிவஞானம்—சுத்த
வுளத்திலே நித்த முணர்வான சாந்தி
திளைத்தல் சிவானுபவச் சீர்.

## 140. சிவம் ஜீவர் எவர்க்கும் இனித்தது

668. அற்றப் படாமெய் யறிவொளியாந் தன்னியல்பாற்
பற்றற்ற மோனப் பரவெளியாய்—முற்றத்
தனிமைசேர் சுத்த சதாசிவமே ஜீவர்க்
கினிமையா வுள்ள வியல்.

## 141. சிவபக்தி

669. சுத்தசிவ மாகச் சுடர்தரா லிவ்வகிலம்
பக்திசெய லன்புப் பணிபுரிதல்—புத்தி
விகற்பமற வெல்லா விதத்துமெப் பாரே தன்மை
முகப்பவியல் வாழ்க்கை முறை.

குறிப்பு:—பத்தி - சிவபத்தி 'எண்ணுரு யாவு மிறையுரு
வாமென வெண்ணி வழிபட லுந்தீபற,
வீசனற்பூசனை யுந்தீபற'. உபதேசவுந்தியார்.

670. அறிவான மோன வருள்வெளியா மெங்குஞ்
செறியாக வுள்ள சிவத்தைக்—குறிகுணந்தேர்
சுட்டறிவைக் கெட்டொழியச் சுட்டெரிக்கும் [மெய்ஞ்ஞான
நிட்டயரே தாம்பற் றுவார்.

671. உள்ளசிவச் செம்பொருளை யுள்ளுணர்வா [லுள்ளுவோர்
கள்ளமனப் பாசங் கழன்றெரி வார்—உள்ள
பாச வகந்தைப் பதைப்பான கற்பனைநீர் [மியற்
நேசமார் சாந்தி நிறைந்து.

## 142. சிவ புண்ணியம்

672. தழைத்தொளிர்மெய்ஞ் ஞான தயாநிதிபொற் பாதந்
தழைத்தசவரம் பல்லா யிரமாச்—செழித்துவளர்ந்
தாற்றுமுயிர்க் கட்சமமா வாற்றப் பயன்படுமெய்
தேற்றலுயிர் வாழுந் திறம்.

673. முத்திப் பரிசான மூலபண் டாரவருள்
பத்தர்க் களிக்கும் பரசிவமே—வித்தகசற்
போதகுரு வாகப் பொருந்தியமெய் கண்டதிறன்
மேதகுதெய் வீக விளைவு.

குறிப்பு: - தெய்வீக விளைவு — (ஒருங்கு திரண்ட பூர்வ
ஜன்மப்) பதிபுண்ணியப் பயன்.

## 143. சிவ வாழ்வு

674. துன்னசைவு தீரத் துலங்கு சொரூபமா
மன்னுசிவ போகநல் வாழ்விலன்றி—மன்னு
சுபமான சாந்தி சுகானுபவஞ் சேர்ந்த
விபவம்வே றெங்கு மிலை.

675. சிவானுபவந் தானே சுவானுபவ வாழ்வாத்
தவாதவுப சாந்தி தரிக்கிற்—சுவாரசிய
மாகக் கிளரு மகிலங் களுந்தன்னோ
டேகத் துவமா மியல்.

676. சிவத்திற் கலர்ச வருட் சித்தத்திற் சற்று
மவத்தைத் திரய மணுகா—அவத்தைகளைச்
சேர்ந்தழுங்க லுற்ற சிதாபாசன் சுத்தசித்தாய்த்
தீர்ந்தொழிந்த தாலே சிவத்து.

677. அறிவிற் பிறவா மனைத்து மகற்றி
யறிவே சொரூபமா வார்ந்தோர்—அறிவான
மோனுறு பூதி முகத்தலாற் சுத்தசிவந்
தானாகி வைகுவர் தாம்.

## 144. சிவனுறைவிடம்

678. அஞ்சலிசெய் கின்றமெய் யன்பர் கரத்திலும்
நெஞ்சமுறு தஞ்சர் நினைப்பிலும்—விஞ்சுபுகழ்
சாற்றுவார் வாயிலுந் தாழ்வார்தஞ் சென்னியிலும்
தேற்றமா வுள்ளான் சிவன்.

## 145. சிவானுபவ இயல்பு

679. சிந்தையறத் தீர்ந்த சிவானுபவ மாட்சியொளிர்
விந்தையே மெய்ஞ்ஞான வெற்றிநிலை—புந்தியிலே
வெற்றவெளி யாக விளங்கும் பரசொரூபக்
கொற்றவருள் சாந்திக் குலா.

680. கர்த்தத் துவவகங் காரமுன்னைப் பானமேய்
சித்தத் தறச்செத்த சீர்மையே—சுத்தத்
தெளிவான சாந்த சிவானுபவ மாக
விளிவரலொன் றில்லா வியல்.

681. தூற்றுமற் றெல்லாமே துன்பமாய்ப் பின்முடிய
ஊற்றொழியுங் குற்ற முடைமையால்—சுற்றும்
தெவிட்டாத சாந்த சிவானுபவ மொன்றே
யுவட்டாத போக முயிர்க்கு.

682. திருவருட்கை வல்யத் திறக்கா லுளத்தூ
டுருவுசிவ மாமெய் யுணர்வில்—இருவிகற்பச்
சிந்தையறப் பொங்கு சிவானுபவ மோனவியல்
விந்தைசேர் சுத்த வெளி.

683. அனுபவப் பெற்றி யறிவான சாந்தி
தனுகரண மோகந் தணத்தல்—மனவுணர்வின்
மாயங் கழிய மனாதீத மானசிவ
நேயங் கலந்த நிறைவு.

684. பொய்த்தொழிய மோகப் புலந்தே ரகந்மைமதி
வித்தகமெய்ஞ் ஞான விசாரத்தால்—சுத்த
சிவத்திலே யொன்றுத் தினைத்த மனத்தோர்
சிவத்தையன்றித் தேறார் பிற.

## 146. ஆண்டவன்

685 கதியாகத் தன்கழலே கண்டடைந்தார்க் கண்ணா
நிதியாம்பே ரின்ப நிழலாய்—இதய
வெளியே சொருபமாய் வித்தகமெய்ஞ் ஞான
வொளிசே ரொருவ னுளன்.

குறிப்பு:—ஒருவன் - அத்துவிதத் தன்மையால், தனக்
குவமையில்லாத் தலைவனான ஆண்டவன்.

686. அச்சமொடு தன்னை யடைந்தார்க் கத்துவித
சொச்சொருப ஞானந் துலக்கால்—அச்சமகன்
றன்புமய மாவவ் வடியரா லாராதித்
தின்பமய மாவியல்கின் றான்.

687. மனத்தைக் கவர்ந்த வசீகரன்மெய் யன்ப
ரினத்திலெனைச் சேர்த்த விறையோன்—அனைத்து
மந்த ரியாமி யடியேனுக் காருயிர்மற் [யிர்க்கு
றந்தமில்பே ரின்பவழ கன்.

688. அன்பா லடைந்தார்க் கமிர்த சொரூபப்பே
ரின்பமய வுண்மை யிலக்கலால்—என்போற்
சரணு கதர்க்குத்தான் சஞ்சீவி யாக
மரணபவம் மாற்று மருந்து.

689. ஞான வகந்தையொடுங் குள்ளத்தி லூற்றெடுக்கும்
மோனவருள் வெள்ளமா(ம்) மூர்த்தியான்—நானது
[வாய்
பொங்குஞா னைப்பவர் புக்கமுகா வென்றுளத்தே
தங்குபரா தாம்புயன் ருன்.

690. ஒளிசேரத் தன்னடியோர் குள்ளநெனர்வா(ம்) மோனத்
தெளிவா விளங்குபெருந் தெய்வம்—வெளியாக
ஊக்கதைமலப் பாழிருள்சே ருள்ளத்தைப் பைம்
பூத்தகாமலப் பாய்கரப்பித் தோன். [மறிக்கும்

691. ஒளியா வுளத்தா டொளிர்சுத்த மோன
வெளியேதன் மெய்யுருவா மிக்கோன்—களியாட்டமற்
கொந்தளிக்கும் பல்ஜீவ கோடிகளுந் தன்னுணரா
வந்தரி யாமி யவன்.

692. நிராமயமா மோன நிலையி லெனக்குப்
பராவமுத மான பகவன்—ஒராலயமாத்
தானகிலத் தூக்குந் துரைத்துவநுட் கேவலமா
மோனவொளி சான்ற முனி.

693. மோனவெளி வாழ்வே முடிவான வுண்மைநிலை
ஈன வெளியே னிதயத்தே—ஞானவொளி
வீசவுறக் கண்ட விசுத்தவருட் பார்வையால்
ஈசனெனை யாண்ட விறை.

694. காட்சியுடைத் தானவருட் கற்பகமென் கல்விக்கே
மாட்சிதருஞ் செம்பொன் மணிமகுடம்—சாட்சியாஞ்
செய்யவருட் பார்வை செலுத்துங்கண் ஞானவழிச்
செய்யவருட் செங்கோல் செழித்து

695. கரிசித்தார் பாவங் களைந்தொழியத் தன்னை
யொருசித்தா னோக்கு முறவோன்—பரிசுத்த
நீரார்மெய் யன்பர் நினைக்க நினைக்கநெஞ்சத்
தாரா வமுதனென்னம் மான்.

696. அகத்தா மறைமே லறிவான சாந்தி
மகத்தாக வாண்ட வரதன் வள்ளல்—அகத்தகமாந்
தன்னின்வே றல்லாத சத்திய மெங்கொளிருந்
தன்னுபரஞ் சோதிச் சுடர்.

697. அக்காமா மோன வருட்பரஞ் சோதியாய்
மிக்கவிருப் பாலினிது வீற்றிருந்தான்—புக்க
விளங்கோயி லாமென் னிதயம் பெரிய
வளங்கோயி லாக வளர்ந்து.

698. அண்ட ரெவருமறிந் தார்தற் கரியபெரும்
பண்டமா வுள்ள பரஞ்சோதி—கண்டவர்தங்
காட்சியறத் தன்சொருபக் கைவல்யத் தேசுரக்கும்
மாட்சியாற் றுன்கே வலன்.

699. ஆங்கார மான வகப்பே யகன்றோட
வோங்காரஞ் செய்கென் றுளத்திலே—நீங்காப்
பரஞ்சோதி யானவருட் பாரப் பிழம்பா
வரஞ்சான் றுடையா னுளன்.

700. * தொடற்கரிய யோக சொருபசித்தி யாலே
நடக்கரிய மோன நடையான்—அடக்கரிய
வஞ்சப் பகையா மனோமாயை மோகித்துத்
துஞ்சவுற விஞ்சுஞ் சுடர்.

* தொடற்கரிய யோகம் - அஸ்பர்ச (மென்னும் பெய
ருள்ள ஞான)யோகம்.

701. சுபமா மஜபைச் சுடரொன் றுளத்தில்
விபவமாச் சேர்த்த விநோதன்—அபய
வரதன் மதிவதனன் மங்கலமாந் துங்கச்
சரிதன் பரஞ்சோதி தான்.

702. துணிந்துபெருஞ் சான்றோர் சரணை கதியாப்
பணிந்தொழுகும் பாத பகவன்—அணைந்தேனை நன்
காண்டகுரு வாகி யகப்பொருளா வென்னகத்துத்
தூண்டுபரஞ் சோதிச் சுடர்.

703. பொலிந்துநின்ற மோனவருட் பூரணனென்
[னுள்ளே
வலிந்துவந்து வாழ்வளித்த வள்ளல்—நலிந்துநொந்த
மன்னுயிர்தம் பாக்கியமாய் வாரா வரத்தாகத்
துன்னியசற் போதச் சுடர்.

704. அறந்தாங்கி யானவென் னம்மா னிதயந்
திறந்தாங் கொளிர்வெளியாந் தேவன்—மறந்தார்
மனத்தே மருவான் மனாதீத மோன
கனத்தா னுயிர்க்குட் கரு.

உயிர்க்கு உட்கரு - அகில வுயிர்த்தொகைக்கும்
[உள்ள கரு.

705. அத்துவித மோனஞா னனுபவ வாழ்வான
சுத்தவெளி யாகச் சுடர்சொரூபன்—மத்த
மனைமையமாம் பொய்க்கலக்க வாழ்வினையேய் தேற்று
மினைதயமா மெந்தை யெனக்கு.

706. உலகுக் கொருமுதலா வுள்ளோன் மனத்தின்
பலகற் பனைகடந்த பண்பன்—குலைவற்ற
புத்திக் கொளிதருமுட் பொற்பா வொளிர்சொரூப
வித்தைக் குளமாய் வெளி.

707. விட்புலமா நின்றதிரு மேனியாற் பல்லுயிருக்
குட்புறமுந் தானே பொருத்துமெய்க்—கட்புலத்துக்
கெட்டா திதயத் தியல்சொரூப மாகவுணர்
வுட்டா னொளிர்வா னுளன்.

708. வெளியாக வுள்ள விழுப்பதத்தை மோன
வொளியா லுபாசிக்கு மோர்மை—தெளிவாக
வுள்ளத்தே கூட்டி யுதவியசிந் தாமணியென்
னுள்ளத் தொளிர்செம் பொருள்.

709. அகத்தே யடியேற் கமுதவருள் வாழ்வா
விகத்தே பரமளித்த வீசன்—மகத்தாம்
பிரம்ம சொருபவருட் பேரின்ப மாக
விரம்மிய மான விறை.

710. குடிகளா மன்னுயிர்தங் *சுற்றமறக் காணக்
கடவுளா மீசன் கருதி—அடியா
ருருவமே தேராக வூர்ந்திவ் வுலகிற்
றிருவுலாப் போதுகின் றான்.

* சுற்றமறக் காண-குற்றங் குறைகளைக் கண்டுகளைய.

711. தானே தா னொளிவொளிர்மெய் தத்துவமா யுள்ளத்த
டானு வறிவா வவிர்சொருபன்—யானார்
என வினவிற் சும்மா விருந்திடுநீ நானே
யெனவிளங்கித் தோன்று மிறை.

712. அறிவொளியா வுள்ள வனந்த சிவத்தை
நிறைவெளியாக் காண்சொருப நிலையை—பிறிவற [வென்
னுள்ளத்தே கூட்டி யுதவியவென் றண்டவன்பேய்
தெள்ளத் தெளிந்த சிவம்.

713. எமதுக்க மான விறவிபற வெம்மை
யமுதுக் கமுதமா வாண்டோன்—அமைதிக்
கருத்தான சாந்திக் கடலாக வுள்ளத்
துருத்தத்தோ ருண்மை யொளி.

714. ஒப்பப்பல் லாரோ டுடன்கூடி யோமென்று
முப்பத்து மூவர்வாழ் முன்றிலின்ப—மப்ப
தியேனுக்குச் செய்த திருவருளான் மிக்க
தயாளுவெனக் கென்றுண் டவன்.

715. அடியே னொருவனையே யன்றுமற் றென்போற்
படியிற்பல் லாயிரவர் தம்மை—அடியுறநன்
காண்டது லெங்கோ னகில வுயிர்களும்போற்
றுண்டவனைத் தானொளிர்கின் றான்.

716. அகவிருளைப் போக்கித் தருளியவென் னாண்டான்
மிகவிதயத் தேவீற் றிருந்து—பகர்வருமோர்
செம்மொழியா மோனத் திருவாயை யெங்குமுறைந்
தன்மயமா வாளுகின் றான்.

717. அருட்கதிர் வீசி யகத்தே மிகுத்த
மருட்கா ரிருளறவே மாற்றி—அருக்கனைக்
கற்பனை மோகங் கலக்க மலக்கமற
வற்பனை மென்னையாண் டான்.

718. ஆக்கமா மிக்க வனந்தசிவ சத்திவெள்ளத்
தேக்கமா மெய்ஞ்ஞான திட்டியால்—நீக்கிவர் பே
ரின்பமெழ நோக்கி யிதயத் தொளிர்சொரூப
வன்புமலை யென்னாண் டவன்.

719. ஆண்டவனைத் தன்னை யடைந்துவெனக் கன்னியமா
வேண்டுவதொன் றற்ற விழுப்பொருளாய்த்—தூண்டு
சோதியா மோனத் துரிய சொரூபானு [பரஞ்
பூதியாப் பொங்கிநின் றான்

720. தானேதா னாகத் தழைத்தவருட் கைவல்ய
வானேற மோன வழிகாட்டி—தானேநா
னாகத் தழைத்த வருட்சிற் பரவெளிமெய்
யாகத் துலங்காண் டவன்.

குறிப்பு —பரவெளியே தன்னுண்மையுருவாகத்
துலங்குகின்ற ஆண்டவன் என்க.

721. ரூபமாக வுள்ள சொருபசற் போத
விபவமிக் கான்ற விசுத்தன்—அபயமா
மோனவருட் பார்வையொளி மூன்றுலகும் வீசுகுரு
வானபர னென்னாண் டவன்.

722. பரமாக வுள்ளவருட் பார்வையா லென்னை
யுரமாக வாண்ட வுடையான்—நரயாகத்
தோன்றினன் சொந்த சொரூபமாந் தேவதையே
மூன்றுமொன் றான முதல்.

723. பாரண்டிவெள்ள மான பரஞ்சோதி மெய்யமையார்க்
கீண்டியுள்ளத் தெய்துறுப்பே ரின்பவெள்ளம்—
[வேண்டியவள்ளி
நான்பருகித் தேக்கெறிக்க நல்ல சிவானுபவத்
தேன்பெருக்கு மென்னுண் டவன்.

724. மாத்தம்ப மானவருள் வண்டதத்தா னாயிருக்
காத்தமா நின்ற வடிகளே—மூத்து
முடியாது முற்ற முழுமுதலாந் தானை
வடிவோமை யாண்ட வரசு.

725. அருபசொருப னல்ல னதிசயிக்கத் தக்கவருட்
சிற்பரமா வோங்கு சிவசொருபன்—கற்பனைசிர்
மோனநோக் காலடியேன் மூலப்பாழ் மோசித்த
ஞானகுரு நாத னறி.

726. உறவுதுற வொன்று முறுக்கே வலமெய்
யறிவொளியா நின்ற வதீதன்—பிறிவுபடா
தெல்லாவற் றோடு மியைந்து மியையாதுஞ்
செல்லாநிற் கின்ற சிவன்.

727. அடர்முப் புடியு மறவே விழுங்கிச்
சுடருமே கான்ம சொரூபன—படரு
முனைப்பா மகங்கார மோகமென் றெண்ணுந்
தனைப்பற்றுச் சிற்பரன் றான்.

728. அளியார்ந்த கண்ணு லமுதஞ் சுரக்கு
மொளியார்ந்த வுள்ள முடையான்—வெளியார்ந்த
ஞான விபூதி நலஞ்சே ருபசாந்தித்
தேனு வமைந்த சிவன்.

729. ஆவிக்கோ ராவியா வாண்ட குருரமணன்
சேவிக்கத் தக்க சிவசொருபன்—பாவிக்கத்
தித்திக்கும் பாதச் செழுமலர்த்தே னுண்டுதொண்
எத்திக்கும் போற்று மிறை. [டர்

730. தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமாய் நானெனும்
[பொய்க்
கள்ளமறக் காணுங் கனசொருபன்—உள்ளத்
தொளிசே ருணர்வா லுடன்படுமெய் யன்பர்
களிகூர் மதுரக் கனி.

731. தனிக்கே வலமாத் தழைத்த சொரூபம்
எனக்கா வவதரித்த வீசன்—நினைக்க
மனத்துக் கதீதமா மாட்சியா லென்னுள்
முனைத்தொளிர் சற் போத முனி.

732. படுமாய மோகவெம் பாசக் கலக்கங்
கெடுமா றெளிர்சொருபக் கேள்வன்—தடுமாறும்
புத்தி மயக்கப் புலவகந்தை மங்கவொளிர்
சித்திவடி வான சிவன்.

733. உள்ளத்தி னுள்ளே யுளதான வொன்பொருளைக்
கள்ளத்தாற் சோர்ந்து கலங்குங்கால்—தெள்ளத்
தெளிவாத் திகழ்ந்தொளிரத் தேற்றிக் கொடுத்த
வளியாற் பரம னவன்.

734. தடங்கடலா நின்றவருட் சச்சிதா னந்தன்
அடங்கா ங்க நன்மை யளிப்போன்—மடங்கெட நின்
றோங்கும் பரவெளியா முண்மைஞா னுறுபவப்
பாங்கர்க் களிக்கும் பரன்.

735. கடந்தமெய்ஞ் ஞானங் கருத்துட் சுடரப்
படர்ந்த சொரூபவருட் பார்ப்பான்—மடந்தருமென்
பொல்லா வகந்தைப் புலப்பங் கெடுத்தசிவ
நல்லா னருட்சீர் நடன்.

**சிவநல்லான்** — நல்லசிவன்

736. கண்ணுனா மோனவருட் கைவல்யச் செம்பொருளை
உண்ணு ரமுத வொளிப்பிழம்பா—உண்ணுநி
மன்ப ரகத்தா டகமகமென் றற்புதப்பே
ரின்பநடஞ் செய்யு மிறை.

குறிப்பு: — ஒளிப்பிழம்பாக இன்பநடஞ் செய்யும் எனக்கூட்டுக.

737. உலகி லுயர்ந்தோர்க் குதாரணமா யோங்கும்
அலகில் பெருமைசா லண்ணல்—குலவு
சிவலோக மாகவென் சிந்தை யெனக்கோ
ரவலோ கனமா னவன்.

738. நிரஞ்சனமா மோன நிறைவாய்ச் செறிவாம்
பரஞ்சுடரா வுள்ள பகவன்—தெரிஞ்சுந்
தெரியாதும் பேதையேன் செய்தபிழை பேணாப்
பெரியான் கருணைப் பிரான்.

739. அவனென் றிவனென் றுவனென் றவனைக்
கவர்படநீ யெண்ணிக் கலங்கேல்—அவனோ
டிவனுவன் மற் றெல்லா வெவர்களுந்தா னேக
வவிரொளியா முண்மை யவன்.

740. மோக விலாசத்தே மூழ்கிநான் மாய்கிலேனு
மேக சொரூப மிலக்கியே—தேகமகம்
புத்தி யொழிந்துசற் போதவடி வாவெனக்
கத்தனையு மானு னவன்.

741. அல்லா டகந்தை யடையேனென் ஆசையைக்
கல்லாத மோகக் கடியனேன்—பொல்லா
விருளுக் கிடையா திதயவொளி யானென்
அருளுக் குடையவம் மான்.

742. அறிவுக் கறிவா வகமகமென் றென்பாற்
பிறிவற் றுளிர்சொருபப் பெம்மான்—செறிவுற்
றடங்கினு ருள்ளத் தகப்பேயைச் சாடி
நடங்குயிற்று ஞானப் பரன்.

743. எம்மா னொருவனே யென்று மிரண்டல்லான்
சும்மா வொளிர்சிற் சொரூபத்தான்—செம்மனத்தா
லெவ்வெவ ரெப்படி யெண்ணினு ரப்படியே
யவ்வவர் காணுமம் மான்.

744. அஞ்சலென்னும் மோன வருட்பார்வை யாலெனக்குள்
வஞ்ச மயக்கமற வாழ்சொருபன்—தஞ்சமெனப்
புக்கார் சொரூபவருட் பூரணத்தில் வேறறக்காண்
மிக்கான் பரவெளியெம் மான்.

745. அருட்கோல யானவென் னுண்டான் பலவா
மிருக்கோல மிட்டேத் திறைவன்—மருட்கோரந்
தேரவொண்ணுன் சுத்தவருட் சித்த விருத்தியூ
டாரமுத மாவொளிரம் மான்.

746. உற்று ருளத்தூ டொளிர்சொருப மாட்சியாற்
கற்றுர் களிக்குங் கனரமணன்—வற்றுப்
பெருவாரி யானவருட் டெம்மானென் னுள்ளத்
தொருவாத வுண்மை யுயிர்.

747. புன்மயல்சேர் பொய்யகந்தை பொய்யாக் கழியவகத்
தென்மயமாப் பொங்கு மியல்பினுன்—தன்மயமாப்
பேணற் குரியான் பிரம்ம சொரூபமா
மாணப் பெரியவம் மான்.

748. பெருமைசேர் சுத்தவருட் பெம்மா னடியேற்
கருமைசேர் வாழ்முதலா மண்ணல்—இருமைசேர்
புன்மயக்கக் கற்பனையைப் போக்குசிவக் கேவல
தன்மையக்க மாகவொளிர் தான். [மெய்த்

கற்பனையைப் போக்கும் அக்கமாக வொளிர்கின்ற மெய்த்தன்மையான தான் எனக்கூட்டுக. அக்கம்-அக்ஷம், கண்.

749. மருமக் கருவாக மன்னுயிர்கட் குள்ளான்
பெருமைக் களவிலாப் பெம்மான்—இருமைக்
கலக்கமற வென்சொருபக் கண்ணுன வுண்மை
துலக்கியசற் போதச் சுடர்.

750. விருப்பொடுஞ் சேர்வோர் விகற்பமற நெஞ்சத்
தருட்டெருஞ் சோதியா மம்மான்—கருப்படர்
[பொய்ம்
மோகக் கலக்கமற மோன முகம்புரிந்தாங்
கேக சொரூபமா னன்.

751. தானாக வென்னைத் தலையளித்த வள்ளலோரே
தானாக வெல்லாந் தழைத்தொளிர்வோன்—வானாக
மன்னு டரார்பரமா பாட்சிசேர் *தாளெனக்குப்
பொன்னுலக வாழ்வாம் புமான்.

* தாள் - ஆகு பெயரால் அடியுறை வாழ்வு

752. பேச்சழூச் சற்ற பிரம்ம சொரூபவருட்
பேச்சிலே வல்ல பெருஞ்சதுரன்—மாச்சரிய
வாதக் கொடும்புலிகள் வாயடங்கச் சூர்மவுன
போதத் திறல்சேர் புமான்.

753. அருட்பே ரமுதவெளி யான சொரூபப்
பொருப்பா விளங்கும் புராணன்—உருப்பே
ரிலாத வுணர்வொளியா வென்னிதயத் தாடு
குலாவுசுப ஞான குரு.

754. அருட்போ தனையா லகிலங் கவர்ந்தாங்
கருட்பூ ரணமா வமைந்தான்—அருட்பார்வை
யாலென் னகர்தை யருட்சிற் பரவெளியாங்
கோலங்கண் டோங்குங் குரு.

755. அன்புமய மான வறிவூற வென்னகத்து
டின்பவடி வாக வெழுந்தருளி—அன்பரின
வண்டிசையா நின்ற மலர்ப்பதத்தா லாண்டருந
எண்டிசையா நின்ற விறை.

756. அனாதிமுறை யான வருட்கிழமை மாறாத்
தனாதியல்பா வுள்ள தயாளு—எனாதியா
னென்னும்புன் மையை லிகந்தொழிய வென்னுளத்து
மன்னுங் குருமா மணி.

757. மாணுபி மான மயக்கமற வென்னகத்து
நாணு வொளிர்சொருப ஞானகுரு—வாணுக
மன்னுந்தன் மாட்டகில வாழ்வாம் பதங்களுமோ
ரன்னியமல் லாதொளிரம் மான்.

758. அருளா லடியே னகவிருளைப் போக்கித்
தெருள்வாழ் வளித்தபெருந் தேவன்—இருள்வா
முலகின்மெய் யன்பருயிர்க் குண்மை யொளியாகக்
குலவுமெய்ஞ் ஞான குரு.

759. ஊழி பெயரினுந்தன் னுண்மையிற்சற் றும்பெயரா
ஆழியா மோன *மளப்பறியான்—சூழுலகத்
தோற்றமுற்றுந் தன்சிற் சொருப விலாசமாப்
போற்றுங் குருபுங் கவன்.

* அளப்பறியான் - அளந்தறியப்படாதவன்.

760. ஒருகுணமு மில்லா வுழையேற் கருள்கூர்
வரகுணனுந் தெய்வவருள் வள்ளல்—குருமணியாங்
கோமா னடியேன் குலதெய்வம் மன்னுயிர்க்குச்
சேமநிதி யான சிவம்.

761. அருட்பத்தி யானஞா னுனுபவ சித்தி
கருப்பத்தி லுள்ளங் கலந்தோன்—சரிப்பற்றுத்
தன்னியல்பா மோனத் தவத்தா லருட்குருவாய்
மன்னுயிரை யாண்டபெரு மான்.

762. உள்ளபொரு ளான வுணர்வொளியா மூத்தையகக்
கள்ளமறக் காணுங் கனசொருபன்—வெள்ளவருட்
பார்வையா லென்னுட் பரமோப சாந்திதரு
கூர்மையா னென்சற் குரு.

763. தொக்க சொருபவருட் சோதியா வென்னுளத்திற்
பொய்க்கலக்கம் போக்கியசற் போதகுரு—மிக்க
சிறுபிரா யத்தே முதுக்குறைந்த செல்வன்
மறுவிலா ஞான மணி.

764. ஞானக் கனவான நம்பன் குருரமணன்
மோனவொளி சான்றமுழு மூதறிஞன்—ஊனக்
கறையான மோகவகங் காரமதி யொன்றே
திறையாக்த் தான்கவர் வோன்.

765. தனித்த பழமுதலாத் தான்றோன்றி யுள்ளத்
தினித்தெனக்கு நின்ற விறைவன்—மனித்த
வுருக்கொண்டு தோன்றி யுலககுரு வாகக்
கருக்கொன்ற ஞானக் கதிர்.

766 பரந்தனக்கொன் றில்லான் பரார்பரமா மோனஞ்
சுரந்தெனக்கு நின்ற சொரூபன்—விருந்தெனக்
கொண்
டாடிக் களிக்கமெய் யன்பர்கண் ணுங்கருத்துங்
கூடிக் கலந்த குரு.

767. மோனஞா பூதியா மூண்ட சமாதியொளி
வானு வளர்சொருப மாட்சியான்—ஊனு
வுருத்தெழுந்த மோக வுயிர்ப்பா மகந்தைக்
குருத்தரிந்து காக்குங் குரு.

768. பரமான மோனவருட் பார்வையென் னுள்ளத்
துரமாக வுய்த்த வுதாரி—திரமாக
நெஞ்சிற் கிளர்சொருப நேயானு பூதியொளி
செஞ்செவே சூழ்தே சிகன்.

769. வாழக் கிடைத்தவருள் வாரியா வென்னகஞ்சேர்ந்
தூழைக் கெடுத்த வுபகாரி—பாழற்
றொழியக் கிளர்சொருப வொட்பஞ்சே ருண்மை
விழியளித்த மெய்வித் தகன்.

770. அருளொழுகு கண்ணு லமுதமழை பெய்து
மருளுலகை வாழ்விக்க வந்தோன்—இருளகல
மெய்தெளிந்த வித்தகர்தம் மெய்யுணர்வா மின்ப
பெய்தளைந்த தெய்வப் பிரான். [வருள்

771. அலகில் சொரூபமா வான்றபரஞ் சோதி
இலகுமொளி யந்த ரியாமி—உலகுக்
கொருமுதலா முண்மை யுபயந்தீர் மோனப்
பெருமிதமெய்ஞ் ஞானப் பிரான்.

772. அளத்தற் கரியவரு ளாழிப் பிரானென்
னுளத்துக் கொளியா முடையான்—தினைத்தற்
கரிய சொரூப வுணர்ச்சியா லென்னிற்
பிரியா ரமணப் பிரான்.

773. எற்றென் றியாரு மியம்பவொண்ணு மோனவருள்
வெற்றியா லோங்கு விழுப்பதத்தான்—சற்றும்
மறக்கவோ வன்றித் துறக்கவோ மாட்டாப்
பிறக்கமா முண்மைப் பிரான்.

774. படிமே லருட்குருவாம் பற்றுக்கோ டாக
முடிமே லடிசூட்டி முன்னே—அடியேற்
கொரானிபற வுள்ளத் தொளிர்சொருப மோனப்
பிரானே யெனக்குப் பிரான்.

775. எச்சார்பு மின்றிமற் றெல்லவைக்குந் தானேயோ
ரச்சாக வென்னுயிரை யாண்டபிரான்—விச்சாக
மற்றொன்று மின்றி மகத்தா விளைவுசெய்யக்
கற்றோன் கனசிற் பரன்.

776. என்னிலே யென்று மிரண்டற்ற வுண்மையாத்
துன்னுமே கான்ம சொரூபகுரு—வன்ன
வறிவொளியா நின்ற வருட்பிரான் மோனச்
செறிவுளியல் சுத்த சிவன்.

777. அச்சத்தா லேங்கி யழுங்கா தபயவருட்
சச்சித்தா வென்னிதயஞ் சார்ந்தபிரான்—விச்சைத்
துரியவெளி யான சொரூமாய்ப் பேதம்
பிரியவொளிர் மோனப் பிரான்.

778. அம்பரமா வென்னுயிரை யாண்டபிரா னென்னு [ளத்திற்
செம்பரமா நின்ற சிவபிரான்—எம்பரமென்
றென்றுமின்றி யெல்லா முடையானுந் தன்பரமா
வென்றுகொண்ட மோனப் பிரான்.

779. மோனப் பிரானை மூர்த்திகுரு நாதனன்றி
ஏனைப் பிரான்களைக் கென்செய்தார்—வானப்
பிரான்களெல்லா மேனைப் பிறர்களுக்கே யாகப்
பிரானெனக்குத் தானே பிரான்.

780. தானே பிரானுத் தழைத்தென் னுளத்தூடு
நானவனே யானவொளி நல்கினன்—மோனஞா
னனுபவத் தாலே யகமகிமென் றன்புபட்டு
வானகமா மன்னினேன் வாழ்வு.

781. வாழ்வே சிவமாக மன்னியது வையகத்துத்
தாழ்வான நானெனும்பொய்த் தன்மைகெட்டே—
பாழ்வளர்சிந்
தாகுலங்க ளான வனர்த்தவகப் பேயாட்டந்
தீர்கடவுட் பார்வை செழித்து.

782. செழித்தோங் கனுபூதித் தேற்றமா மோனம்
பழுத்தே னிறைவன் பதத்தே—பழுத்தசிவ
போதமா னந்தவருட் பூரணத்திற் கற்பனை
பேதங்க ளெல்லாம் பிரிந்து.

783. பிரிந்ததாற் பேதம் பிரம்மய மாக
விரிந்தது காட்சி விநோதப்—சுரிந்த
வவத்தை யனைத்து மதீதமாத் துன்று
சிவத்துரிய மாகத் தெளிந்து.

784. தெளிந்தநிலை தானே சிவசொருபக் காட்சி
விளைந்த வருள்ஞான வெற்றி—அளைந்த
தருமார்த்த காமமோட் சங்களெல்லா மொன்றும்
பரமார்த்த வுண்மைப் பதம்.

785. பதவொளியிற் சேர்ந்தேன் பதைப்பற் றொழிந்து
புதுவதுபோ லென்னைப் புணர்ந்தேன்—மதிகலங்கு
சொப்பனத்தி னின்றுசிவ சூரியனென் னுட்கிளர
மெய்ப்பதமாந் தன்னில் விழித்து.

786. விழித்ததா லுற்றவென் மெய்ந்நிலையில் ஞான
வொழுக்க மியல் பாகவுளத் தூறச்—செழித்தலுற்றேன்
சித்தோப சாந்தி சிவோகமெனச் சேர்ந்தொளிரத்
தத்தோ மசிப்பொருளாத் தான்.

787. தானான தன்மயமே தஞ்சமாச் சார்ந்தார்க்கு
மோனானு பூதிவளர் முத்திதரும்—ஆனதாற்
செம்பரமா நின்ற சிவத்திலே தன்னையிழந்
தம்பரமா நிற்ற லறிவு.

788. ஆதி பகவ னடியேனை யாண்டபரஞ்
சோதியா மோன சொரூபவெளி—நேதியா
லுற்று றுறுதிசே ரொட்பவருட் கைவல்யம்
பெற்றுறா நோக்கும் பிரான்.

789. தோக்கபல் வேறு சுபங்களுக்குந் தானேயோர்
புக்கிலாப் பொங்குசிவ பூரணத்தான்—மிக்க
பரந்தாம மாகப் பரந்தொளிர்சச் சித்தாய்
பெருந்தா னுடைய பிரான்.

790. தொன்மைசேர் சற்குருவாந் தோன்றல் பரப்
[பிரம்மத்
தன்மையா லெங்குந் தழைத்தபிரான்—தன்மெய்
யுருவன்றி மற்றோருரு வறியா தென்னைப்
பெருவென்றி கொண்ட பிரான்.

791. நயப்பா டுடையகுண நாகரிகன் ஞாலம்
வியப்பாக நோக்கலுற்ற மிக்கோன்—இயற்பார்வைக்
குட்பட்ட யாவ ருளமுங் குதூகலங்கூர்
பெட்புற்ற விந்தைப் பிரான்.

792. தானே தனக்குக் குருவாகத் தன்சொருப
ஞானனு பூதிநிலை நண்ணினேன்—வானாக
முற்ற வனைத்தெழுந்த மோனனு பூதியொளிப்
பெற்றிசே ருண்மைப் பிரான்.

793. பிரானெனைத் தன் மோனவருட் பெய்கழற்கே முற்ற
வொராவொ ருசொல் லாலே யுடையான்—பராமுகமே
யில்லா னெனதுளத்தூ டேகான்மா வாகவொளிர்
நல்லா னிரண்டற்ற நான்.

794. மலர்தலை ஞாலத்து மண்டுமயற் கங்குல்
புலர்தலுறக் காணும் புலரி—அலர்தலுறச்
சித்த மகண்டவருட் சிற்பரமா மோனத்தென்
பெத்தமறக் கண்ட பிரான்.

795. முற்றுங் கடந்தமுழு மூதறிஞன் சுட்டறிவு
சற்றுந்தன் னுண்மையிலே சாராதோன்—
[வெற்றறிவாந்
தன்னிலே யாவுமொரு தன்மயமாத் தாமடங்கப்
பின்னரியே நின்ற பிரான்.

796. நானவாஞ் சத்திக்கு நாயகமாய்ப் பல்லுலகுந்
தானாக வாட்சி தழைத்தருள்வோன் — தானமெய்த்
தன்மையுணர் வாலே சதாகதியாந் தன்சொருப
நன்மையெனக் கானநல் லான்.

797. அருட்குன்ற மான வருணா சலமா
யிருக்கின்ற வெந்தை ரமணன்—மருட்கா
ரவிச்சையற வென்பா லகமகமாய்ப் பொங்கு
சுவச்சமாம் போதச் சுடர்.

798. செத்தபிணம் போலத் தெழித்தே யுடலுயிரைச்
சித்தமூ லத்தே செறித்துணர்வை—வத்துவா
வெஞ்சவது யாதென் றிதயத்தே மோனவருள்
விஞ்சையா லொன்றினன் மெய்.

799. அவ்வா றுசாவி யடைந்தது தன் னுண்மைநிலை
செவ்வை யரைமாத் திரையளவே—அவ்வதூஉம்
வாலப் பருவம் வயது பதினாறு
சாலச் சதிராளன் றான்.

800. அறிவு நிரம்பா வகவைக்கண் முற்றச்
செறிவான் முதுக்குறைந்த செல்வன்—நிறைவுசால்
சாந்திதரு மோனகுரு தக்ஷிணா மூர்த்தியாக்
காந்திதரு ஞானக் கனல்.

801. நானேர் குருவறியான் றன்னையே சற்குருவா
வேனேர் கொளவங் கிலகினான்—வானேர்க்
கரிதாக நின்ற வமுத சொருபத்
துரியானு பூதி சொரிந்து.

802. வெள்ளவொளி சான்றமுழு வெண்மதிபோல் [வீற்றிருந்தான்
ஒள்ளியவா மெண்ணி லுடுகணம்போல்—உள்ளத்து
மேகக்க ஞான விசாரங்காத் தோம்பொளிசால்
சாதுக்கள் சூழலிடைத் தான்.

803. அற்புதமெய்ஞ் ஞான வருட்பரனெங் கோரமணன்
சிற்பரமாஞ் சுத்த சிவப்பழமாய்—அற்பனேன்
சிந்தனையுட் பேரின்பத் தேனூறி வாள்விழியாற்
பந்தனைசெற் றுண்டான் பதத்து.

804. ஊன்றுகோ லான வுறுதியா வென்னுயிரை
யேன்றுகொண் டாண்ட விறைரமணன்—ஆன்றகுரு
பத்திவடி வாகப் பழக்கமனந் தேர்சொருப
சித்திவடி வான சிவன்.

805. குருசொருப மான குலாரமணன் மோனப்
பரசிவமா நீடும் பகவன்—பரகுமவர்க்
கன்புமய மான வருட்கடலாய் மூடமனத்
துன்பமறக் காயுஞ் சுடர்.

806. அடியோங் களையாண்ட வண்ணலான் காவிக்
கொடியோர்க்கு முன்றிற் கடவுள்—படியோங்கு
சோணா சலத்தே சொரூபவொளி யாலுலகைச்
சேணாக் கியரமணன் றேர்.

807. தரும சொரூபவருட் சக்கர வர்த்தி
ஒருமையுணர் வாலே யுயிர்க்குப்—பரம
கதியருள்வண் ணோக்காற் கருணா விலாச
நிதிரமண மூர்த்தி நிலத்து.

808. தனுபூதி யாகத் தழைப்பதா முண்மை
யனுபூதி யாகவெனக் கானேன்—மனோதீ
வந்தார் தமக்கு வரங்குறைவின் றீகவருள்
சிந்தா மணிரமணன் றேர்.

809. பருட்பதியென் னுஞ்சிற் பராசத்தி தன்பால்
விருட்பதிகங் கொண்ட விநோதன்—பருப்பதியைத்
தன்னுருவ மாகத் தனிற்காந்து மாரமணன்
பின்னமற நின்றபெம் மான்.

810. மனித்தவுருப் போர்த்துசிவ மாதேவன் சிந்தைக்
கினித்தவியல் சான்றநல் லீசன்—முனைத்த
வகப்பே யகன்றமெய் யன்பரைத்தா னாக
வுகப்போன் குருரமண னேர்.

811. முன்னைக்கு முன்னையாய்ப் பின்னைக்கும் [பின்னையாய்
முன்னடுபின் னற்ற முழுமுதலோன்—என்னைத்
துரிய சொரூபவருட் சோதியா வாண்ட
பெரிய ரமணப் பிரான்.

812. மேயகனு மோக விபரீதப் புன்கலக்கம்
போயகலச் சித்தம் புலர்தலுற—நாயகமெய்ஞ்
ஞானரவி யாக நடக்குங் குருரமண
வானவனென் சிந்தா மணி.

813. யாவுமாத் தானே யிருந்தொளிர்மெய்க் கண்ணுக
மேவுமா னந்த விழுப்பொருளான்—மேவும்பல்
வேறுகதி தோற்றும் வியன்பா மறவிழுங்கும்
வீறுகதி ரான்வேங் கடன்.

## 147. ஆண்டான் அமர்விடம்

814. ஞானப் பிழம்பான நம்பன் சடவுடல்
மானவகங் கார மனத்துருன்—நானற்
றறிவாய் நிரம்பி யமைந்த வகத்தே
செறிவாக நிற்குந் திகழ்ந்து.

815. திருத்தமா மோனத் திறத்தாற் றெளிந்த
கருத்திலே யுள்ளான் கடவுள்—விருத்தி
யொடுங்கலுற்ற சாந்திசே ருள்ளத்தே ஞான
நடங்குயிற்றும் பூரணமெய்ந் நான்.

816. மோன நிலைக்கண்ணே மூண்டொளிர்சாந் தானுபவ
மான சொருபவரு ளாட்சியால்—ஊன
முயல்சே ரகந்தை முளைப்பற்ற வுள்ளத்
தியல்பாக நிற்கு மிறை.

817. மீதூர் புகழால் விளங்குந் திருவருணை
மூதூர் மேன் மேலுமிசை மூண்டொளிர—மாதூர
மானதுங்க வீடென் னகமேயாக் காட்டினேன்
தானமர்ந்த தந்தத் தலம்.

குறிப்பு :—மாதூர மானதுங்க வீடு — அதிதூரமாகக் கருதப் படுகின்ற பெருஞ்சிறப்பான முத்தி; என்னகமேயா — என்சொருபமேயாக; மூதூர் இசைமூண்டொளிரத் தானமர்ந்தது எனவியையும்.

## 148. ஆண்டவன் அவதாரம்

818. படியிலா மோனப் பரசிவமாய் வேத
முடியிலே நின்றகுரு மூர்த்தி—அடியார்
கதியிலா ராகக் கலங்காது ஞான
நிதியாக நின்று னிலத்து.

819. துங்கதனுத் திங்கள் சுபமாம் புனர்வசுநாள்
பொங்கியெழு மாதவர்தம் புண்ணியத்தால்—பங்கமற
வன்பரைமீக் காக்க வவதரித்தா ணண்டவன்பே
ரின்பவொளி யெங்கு மெறித்து.

### 149. ஆண்டவன் பரம்

820. குடிகளுக்கு வாழ்வுகை கூடும் படிக்குப்
படியளக்க லாண்டவன் பாரம்—குடியிளைக்கக்
காணு னருட்பிரான் காவற் பதத்திலுற்ருல்
வாணுள் வளப்பமுடைத் தாம்.

### 150. ஆண்டவன் கொலுமாட்சி

821. அந்திபகல் பற்பல் லடிய ரிடைவிடா
தெந்தநே ரத்துந் திரண்டெழுவர்—வந்தடைவோர்க்
கென்றுங் கொலுவீற் றிருந்தருள்செய் பான்மையால்
என்றுந் தனக்கோய் விலன்.

### 151. ஆண்டவன் சொரூபம்

822. அழகிதா மோன வரங்கிலே யாடுங்
குழகனுங் கூத்தனெடு கூத்தும்—அழகிதாக்
காண்பானு மொன்ருக் கலந்தவருட் காட்சியே
மாண்பான வாண்டான் வடிவு.

823. சொற்பரமன் ருண்டான் சொரூபம் முழுமோனச்
சிற்பரமாப் பொங்குந் திறந்தவெளி—கற்பனைசேர்
சித்தக் கலக்கந் தெளிந்தசாந் தானுபவ
முத்தியுரு வான முதல்.

824. துச்ச வகந்தைமனச் சுட்டறுத் தாண்டபரான்
சொச்சமாத் துன்று சுயசொருபம்—மிச்சைப்
பழியார்ந்த வூனப் பசுபாச மோகப்
பிழைதீர்ந்த ஞானப் பிழம்பு.

825. பரவெளியா வுள்ளவருட் பார்ப்பான் சொரூபம்
உரவொளியா மோன வுணர்வாற்—கரவுமனச்
சிந்தை கழன்றெழியச் சிற்றம் பலவுருவில்
விந்தையொளி வீசிற் றுளத்து.

826. வெளியன்றி யில்லை விளங்கு மவன்மெய்
ஒளியன்றி யில்லை யுருவம் - களியொன்று
மோனமன்றி யில்லை முகப்பொலிவு கைவல்யத்
தானமன்றி யில்லைதடந் தாள்.

## 152. அந்தர்யாமித்வம்

(கொச்சகக் கலிப்பா)

827. தெய்வந் திறமாந் திருவருளே பொய்ம்மையினின்
றுய்வதற் கான வுபாய வுணர்வொளியாப்
* பெய்வித் தகத்திற் பிறங்குவதென் றென்றுமுள்ள
மெய்வத்து வான விசுத்தப் பரசிவமே.

* பெய்வித்தல் :—பிறவினைப் பொருள் குறியாது பெய்தல் என்னும் அம்மட்டாக நின்றது.

## 153. ஆண்டவன் அத்துவிதத்தன்மை

(வெண்பா)

28. ஒருதன் மயமாக வுள்ளா னுடையான்
கருதலுறின் வேருக் கறிவான்—கருதும்
மனைதயமோர்ந் துள்ளே மதிசாந்த மாயின்
இனைதயமா நிற்பா னிறை.

829. தன்னிழுப்பால் யாவரே தானேதா னுவார்மற்
றன்னவரா வென்றி யயலவரால்—தன்னியலித்
தன்மையதென் றுய்ந்தறியச் சற்றுமொணா
தன்மைசேர் கேவலன் றன். [வத்துவிதத்

## 154. ஆண்டான் அத்துவிதத்தன்மை சாற்றல்

(குறள்)

830. மனத்தைக் கடந் பெரு மாண்பால் இனைத்தென்
றியம்பவொணா தீச னியல்பு.

831. கனத்துப் புரவாங் கடவுளியல் வாழ்வு
மனத்தைக் கடந்ததன் மாண்பு.

(கொச்சகக் கலிப்பா)

832. வண்ணமற்ற சுத்தவருள் வண்ணப் பிராணமனத்
தெண்ணமற்ற நிட்டையா லெண்ணிலன்றிக்
[கட்புலமா
வெண்ணியாங் கீச னெதிர்ப்படினு மவ்வெதிர்ப்பா
டெண்ணுமனக் கற்பனையே; ஈச னிரண்டலனே.

## 155. ஆண்டவன் இயல்பு

(வெண்பா)

833. அருக்கனே போல வருட்கதிர் பாய்ச்சுங்
குருக்களே ஞான குருக்கள்—வெருக்கொளுவுங்
கற்பனு மோகமறக் காணுங் குருரமணச்
சிற்பரனு நின்றான் சிவன்.

834. அவரா விவரா வுவரா வலான்மற்
றெவரா வெவர்தா மெனினும்— அவிரவ்
வவரவரேல் லாமறிவூ டாய்ந்தறியுங் காலோர்
சிவரமணச் சிற்சொருபந் தேர்.

835. அற்புமய மாமெய் யறிஞகாத் தின்பமயக்
கற்புமய மான கருத்தினன்—சொற்பரவு
பேச்சுக்குச் சேணாய்ப் பிறங்குவான் யானெனும்
மூச்சுக்கும் மூலமாய் முன்பு. [பொய்ம்

836. அடியார்க்கு நல்ல வமுத சொரூபன்
கொடியார்க்கு நஞ்சிற் கொடியான்—முடியார்க்குங்
கங்கையான் வானோர் கடவுளான் சீரமணன்
தங்கையா னன்பர் தமக்கு.

## 156 ஆண்டவன் ஓலக்கம்

837. ஓலக்கஞ் சேவித் துளங்கிளரப் பெற்றவெனக்
கேலக் கிடைத்ததுபே ரின்பநிலே—சாலக்
கிருதார்த்த னாகக் கெழுமலுறு மெய்யன்
பரிதாத் திளைத்தே னகத்து.

838. குறைவில்பே ரின்ப நிறைவான முத்தித்
தறைபிலவேந் தாவொளிர்குன் றுளே—உறையுளாத்
தங்கியே மெய்ஞ்ஞான சாதனையூ டாழ்ந்தோங்கு
சங்கஞ்சூழ் சற்குரு தான்.

## 157. ஆண்டவன் அருள்

839. உத்தமசற் பத்த ருடையா னருளைமுழுச்
சித்தமுறச் சேர்த லெதன்பொருட்டோ—சுத்த
வருட்பதத்தை யன்றி யயற்பதத்தைச் சேரா
திருப்பதற்கே யீச னருள்.

840. வெட்கிநா னென்னுமயல் வினைகங் காரமதி
யுட்க வுளத்தூ டொளிர்வதாம்—புட்கலமாத்
தூண்டுமெய்ஞ் ஞான சொரூப விலாசத்தா
லாண்டா னருட்செங் கதிர்

841. வாரங் கிளரவென்றும் வைகு சொரூபசுகம்
பேரவொழிந் தாவரணப் பேதைமையால்—கூருமகங்
காரமுனைப் பாலே கதிகலங்கி மாழ்துமுயிர்க்
காரமுதாம் பெம்மா னருள்.

842. ஆட்சியா லென்னையகந் தார விழுங்கியுயிர்க்
காட்சியறத் தன்பாற் கரந்ததால்—மாட்சிசேர்
சிற்பரமா நின்ற சிவத்தொளியென் ஜீவியத்தைத்
தப்பலுற்ற கூற்றமே தான்.

843. ஆயலுற்று வில்லையென்ப ரான்மோ ரகங்காரப்
பேயகற்றித் தன்சொருபப் பேறளிக்கும்—மாய
விருளகல வுள்ளத் தெறிக்கலுற்ற வாண்டா
னருள்வலியா லாகா தது.

குறிப்பு:—அருள் வலியாலாகாதது இல்லையென்பர் என இயையும்.

844. தன்னருளால் யாவுந் தழைத்தியல்வ தன்றியுயிர்க்
கின்னொருவர் யாரே யியற்றவுளார்—மன்னு
மியற்பரமே பற்றி யியல்வதன்றிச் சிந்தை
யயற்படலேன் றற்சேர்ந் தவர்க்கு.

845. ஆனந்த மான வருட்பரசாந் தானுபவ
ஞானந் தருரமண நாதனருள்—வானங்
கிளர விளங்குசிவக் கேவலசற் போகத்
தெளிவுருவாந் தெய்வத் திறம்.

846. உணர்வுத் திறத்தா லுறும்பரம சாந்திப்
புணர்வே சொரூபானு பூதி - அணவற்ற
சாந்தி விலாச * சதாசகஜ நிஷ்டையுயிர்க்
காந்திறனே யாண்டா னருள்.

*** சதாசகஜ நிஷ்டை — சகஜமான சதா நிஷ்டை.**

847. ஆன்ம சொரூபசிவம் பாத்திரமாத் தன்சொருப
வான்கருணைக் காரை வரிக்குமோ—ஊன
முடைய பகிர்முகநோக் குன்முகமா * மன்னோர்க்
கடையப் படுகின் றது.

*** அன்னோர்க்கு - அன்னோரால், வேற்றுமை மயக்கம்**

**குறிப்பு :- 1. என்னை ஏது மறிந்திலன்; 2. ஈசன் என்னை அறிந்தது (தனித்திருக்குறுந்தொகை) என்னும் அப்பர் தேவாரக் கருத்து ஈண்டு சிந்திக்கத் தக்கது.**

## 158. ஆண்டவன் அருள்மாட்சி

848. வீட்டுலக மாட்சி விளங்கு மனுபூதி
கூட்டுசிவ ஞான குருநாதன்—மூட்டுபர
ஞானுக் கினிக்கூனை நானெனும்புன் மையயல்
வானுக் கிளரும் வடிவு

## 159. ஆண்டவன் அருளும் அறிவுநெறி

849. ஆரா வமுத வருட்கடலா வென்னிதயம்
பேரா தினிதுறையும் பேராளன் - வாரா
வரத்தாக வந்து மனங்கொள்ளை கொண்ட
பரத்தா னறிவே பரம்.

## 160. ஆண்டவன் குணாதிசயம்

850. உற்றார்க் குதவு முதாரத்தான் சிக்கலறக்
கற்றான் மடமிலான் காணென்பர்—சற்றே
மடமுளான் மன்ற வரிசை தெரியாக்
கொடைமடம் போலுங் குணம்.

851. வள்ளலென்றெல் லோரும் வழுத்தலால் ஆண்டவனை
யுள்ளலாப் நானு முவந்தடைந்தேனே—வள்ளலான்
கள்ளமாச் சூறையிட்டான் கண்காண வென்னையே
வள்ளலான் வள்ளன்மை நன்று.

852. சத்தியா நின்றான் சதாசிவமா நின்றான்முற்
றொத்தியலா நின்றா னுபயமின்றி—நித்தசுத்த
புத்தமுத்த மானவருட் பூரணசுத் தாத்துவித
வத்துவா வாழ்கே வலன்.

853. சிந்தைக் கினியான் செவிக்கினியான் வாய்க்
[கினியான்
புந்திக் கினிய புலத்தினான்—எந்தையான்
தந்தைக்குந் தந்தைமூ தாதைக்குந் தாதையா
முந்தையான் மூர்த்தி குரு.

## 161 ஆண்டவன் சின்முத்திரை

854. நினைக்த மனத்தை நினைப்பெழா வாறு
முனைப்பின்மூ லத்தே முடக்கும்—தனித்த
பரமார்த்த வுண்மைப் பதங்காட்டி யாண்ட
ருமூர்த்தி மோனக் குறி.

855. பரத்தின் குறிப்புப் படிந்த வகத்திற்
கரத்தமாக் கைவல்யங் காணும்—பரத்தின்
சொருபமே யாகச் சுடருமற் றெல்லாம்
பொருவயலொன் றில்லை புலத்து.

856. மாலுறவாஞ் சித்த மலஞ்சேர் முனைப்படங்கக்
கோலவருட் பெம்மான் குறிநோக்கி—வாலறிவா
மோனங் கருத்திலே மூண்டால் விசுத்தவருள்
வானங்க மாகும் மனம்.

## 162. ஆண்டவன் சந்நிதி மாட்சி

857. ஊனமறு ஞான வொளிவீசு சிற்பரமா
மோனகுரு மூர்த்திதிரு முன்னிலையை—வானவருங்
கட்புலனு காது கரந்த வுருவராய்ப்
பெட்புறவாற் பேணுகின் றூர்.

858. கோயிலின் வாயில் குறுகினல் வேகமுனைப்
போயவே சாந்தி யுளம்பொங்கும்—ஞாயிறுபோ
லாண்டவன் பாதவொளி யார்தலா லற்புதவாழ்
வீண்டலுறு மம்மா னெதிர்.

859. போராசை வாரியாம் பெம்மான் றனைத்தவிர
வோராசை யின்றியுளத் தோட்டினுன்—ஆரா
வமுத சொரூப வருட்பார்வை யாளன்
சமுகமே சாந்தப் பதம்.

860. கைவல் லியபதங் காட்டிக் கொடுத்தவருட்
சைவன் குருரமணன் சந்நிதிவாய்ச்—தெய்வப்
பரவொளியாய் வுற்றுற் பரவைசூழ் ஞாலம்
பரவெளியாப் பார்க்கப் படும்.

861. மதியினுற் சற்றும் மதித்தறிய மாட்டாக்
கதிகாட்டி யானவருட் கண்ணுன்—எதிரில்
கலையிலக்க வொண்ணுக் கடவுள் சொரூபம்
மலையிலக்கா வாரும் மனத்து.

## 163. ஆண்டவன் மாட்சி

862. வெறும்புலவ னல்லன் விசுத்தமெய்ஞ் ஞான
நறும்புலவன் சற்குரு நாதன்—குறும்புசால்
வீணகந்தை கொண்ட வெறும்புலவர் நெஞ்சமுட்கக்
காணுறுமெய்ஞ் ஞானக் கனல்.

863. மானவரென் றென்றும் வழிபடுவார் வந்துவந்து
வானவரும் போற்றி வணங்குவார்—ஞான
குருநாதன் மோனக் குடைக்கீ ழுலகாள்
பெருநா யகமாம் பிரான்.

864. தானெயற்றும் பற்றுத் தனிமுதலா யென்னுளத்தை
ஞானவெற்றி கொண்டநடு நாயகமாய்—ஏனவற்றுக்
கெல்லாமோ ரந்த ரியாமியா நின்றியக்கும்
வல்லாள னெம்பெரு மான்.

865. தான்மேரு வாவனைத்துந் தாங்கு சதாசிவஞா
ஞன்மானு பூதிக் கணிமகுடம்—மேன்மேற்
பலிக்க வியற்றுதவப் *பாரா சரர்தங்
குலக்கொழுந்தா மென்சற் குரு.

* பராசரர் பாராசரர் எனநீட்டல் விகாரம்.

866. ஞானப்பெற் றெடுத்தவருட் சத்தியாந் தாய்க்குத்
தனிப்பெருமை யோங்கத் தலத்தே—முனைப்பற்ற
மோனத் தவத்திறலின் முத்திரைபோற் கோயிலெழு
வாஞெத்த மாட்சிமிக் கான்.

867. எம்பிரான் றன்பெருமை யாருரைக்க வொண்
[ணுமோ
உம்பரார் கண்டுணர வொண்ணுதேல்—தம்பிரா
ஞவனென் னம்மா னகில வுலகுக்கும்
பாவனைக்கு முற்றப் பரன்.

868. அண்ட முகட்டை யளாவியனைத் தூடுருவி
விண்டு கடந்து வெறுவெளியாய்—உண்டெனுமவ்
வுண்மையள வான வொளிப்பிழம்பா மோனவருள்
வண்மையாற் றுன்கே வலன்.

869. அகண்டமா மோன வருட்குகையி லுள்ளான்
அகண்டவெளி யானவென் றுண்டான்—அகண்
வான்ற சொரூப வருள்விருத்தி யாலவனே [டமா
யான்றே ரனுபவிக்கின் றூர்.

870. அடிப்படையா மோன வருட்பதத்தா டென்னை
மடுப்புடையான் கைவல்ய மன்னன்—படிப்படியாப்
பல்வேறு மார்க்கம் படைத்துடையான் மன்னு
தொல்வேத நாயகமாந் தூண். [யிர்க்குத்

871. செல்வச் சிவமாச் செழித்த சிவானுபவக்
கல்விக் கரையாங் கணபதத்தான்—மல்ல
லருள்வெளியாத் துன்று மதிட்டான வுண்மைப்
பொருள்விளக்காம் புந்திப் புலத்து.

87'. ஒருசிவமா மோன வொளிப்பிழம்பா வுள்ளத்
தரசுரிமை யேற்றவென் ஞண்டான்—பரசொருபக்
காட்சிசே ரின்பவருட் காவலா லாட்சிசெயும்
மாட்சி மதித்தற் கரிது.

873. எள்ளத் தனையு மெதிராவா ரின்றாகக்
கள்ளத் தனத்திற் கனசதுரன்—உள்ளித்
தொழுதா ருளம்பிறிது சுட்டவொட்டான் சிந்தை
முழுதுமுற் றூட்டாந் தனக்கு.

874. அண்ணலருட் கீர்த்தி யளப்பரிது மண்ணுளோர்
விண்ணுளோ ராலும் வியப்புடைத்து—கண்ண
[கன்மா
ஞாலம்பே ரின்பவருள் ஞானவெள்ளக் காடாகக்
கோலங்கண் டான்சற் குரு.

875. அத்துவித மான வபரிமிதத் தன்மையான்
புத்திக் கதீதசற் போதமயன்—கர்த்தன்
றனக்கே யறியத் தரமாம் பெருமை
தனக்கேயு மன்று தரம்.

876. எத்திக்கும் போற்று மிறைமைசான் றேங்குபர
வித்தைக் கருட்குருவா மெய்ரமணன்—முத்தி
நிறைவான மோன நிலையான வுண்மை
யறிவாற்றல் யார்க்கு மரிது.

877. சொலவிழைவுண் டென்னினுமென் சொல்லளவிற் [றன்று
குலவுசுப ஞானக் குறியால்—உலகமயல்
வாழ்வுக் கடிமையாய் மாசுபட்ட வென்னையருள்
வாழ்விற் பொருத்தினன் மாண்பு.

குறிப்பு :— குறியால் பொருத்தினன் என இயையும்.

878. செல்வர்பா லன்பு செழிக்கவே பாராட்டப்
பல்லரைய ருள்ளார் பரக்கவே—நல்ல
வடிகளன்றி யென்போ லகதிகளைத் தாங்கி
மிடிகளைய வல்லா ரிலர்.

879. ஆகாய மான வறிவொளியாந் தன்னையயர்த்
தோர்காய மாக வுருத்தவுயிர்—ஏகாதி
மானுபி மான மயக்கமறத் தேற்றலே
தானுன சற்குருதன் சால்பு.

880. முத்தியொளி வீசும் முனிரமணன் மெய்ஞ்ஞான
சித்தியெளி தாகத் திகழ்த்துவோன்—சுத்தவெளி
வாழ்க்கையிலே யென்னை வளர்த்தருள்வோன்
ஊழ்க்கையுரு துய்யு முயிர். [பாலடைந்தால்

881. மந்தா கினியினுந்தான் மன்னுயிர்க்கு நன்னயஞ்
[செய்
சிந்தா மணிரமணன் சீர்திளைக்கில்—வெந்தாடக்
கோடையுறு வாழ்வு குளிர்வுற்றுத் தண்ணிழலாய்
நீடியலு மின்ப நிறைந்து.

## 164. ஆண்டவன் மாட்சி இயல்பு

882. சுத்தவெளி யாகச் சுடரும் பரசொருபன்
முத்தியொளி முற்றிலுஞ்சூழ் முன்றிலான்—சித்த
தன்சொருப மான சகஜ சமாதியன்பர் [மாந்
நெஞ்சிலியல் பா நிகழ்த்து வோன்.

883. சுக்கசச் சித்தாந் தலங்கு சொரூபசிவ
முக்தியொளி வீசு முகத்தினன்—புத்திக்
கமைதிசேர் சுக்குஞா னுபவங் கூட்டு
மமுத சொரூபனென் னம் மான்.

884. சிற்பரமே யான சிவசொருபன் கேவலமெய்த்
தற்பரமே யாகத் தரித்துநின்றே—கற்பகமாத்
தன்னையே தானருளித் தன்னடியர் தானேயா
மன்னியே வாழவைப் போன்.

885. வித்தாரம் பேசுமட வீணரைக்கண் டெள்ளிநகு
சித்தான மோனவருட் செம்பதத்தான் — எத்தாலும்
யானென்னும் மோக வெழுச்சியறச் செத்தார்க்கு
வானன்ன மாட்சியருள் வான்.

886. நூனமற வோங்குமதி நுட்பப் பரவெளிக்கு
மோனமே தன்னருட்சிற் முத்திரையா — நானெனும்
யூனமுனைப் பற்ற வுதாரிகளைப் பாசபந்த [பொய்
வீனமற வுய்ப்பா னிறை.

887. நானென் றெழிலோ நழுவுற்று நல்ல சிவந்
தானென் றடங்கிலோ தன்மயமாய் — ஊனென்
றகந்தை யுணர்வை யறவொழித்து மன்ற
முகந்துகொள்வா னென்றத்தன் மொய்ம்பு.

888. சுகமயமா வுள்ள சொரூப னெனக்குப்
புகலிடமா வுள்ள புராணன் — முகவொளியின்
முத்திப் பரங்காட்டும் மோனப் பரஞ்சோதி
புத்திக்கு மூலப் பொருள்.

889. பாவனை தீதசற் பாவ சுபாவமாஞ்
சீவன்முத் திக்கோர் திலகமாய்ப் — பாவனைமா
மோனவருட் பார்வையான் முத்தியொளி வீசுவான்
தானுயிர்கட் கோர்சற் குரு.

890. சலஞ்சேர்ந்த மாயத் தடுமாற்றந் தீர்மெய்ந்
நலமாக வாய்த்தகுரு நாதன் — புலமாகத்
துன்று மெலாமோர் சொரூபமே யாகவொளிர்
வென்றிசேர் ஞான விளக்கு.

891. சிந்தைதீர் மோனஞ் செழித்தபிரான் சுத்தவருள்
விந்தையாற் கற்பனையை வென்றபிரான் — அந்த
[மில்பே
ரின்பவடி வாக வியல்சொருபப் பேரொளியாற்
றுன்பமய லற்ற பிரான்.

892. மன்றவொன் றாக மருவும் மனுநீதன்
ஒன்றிரண் டென்னுமுரைக் குட்படான்—துன்று
சுட்டுணர்வு தீர்ந்த சொரூபானு பூதிக்கே [மனச்
யெட்டுவதா மண்ண லியல்பு.

893. பெட்புறுதன் மெய்ப்பதமே பேணுவார்க் கத்துவித
நட்புரிமை பாராட்டி நல்குறுவான்—உட்புலத்தா
லொட்பத் திலுமொட்ப மாவொளிரக் காண்டலுறு
நுட்பத் திலுநுட்ப நோக்கு.

894. பார்க்கப் படுபவெலாம் பார்ப்பான் சொரூபமாத்
தேக்கித் திளைப்பான் சிவத்திலே—மோக்கப்
பொருளான மோனவருட் பூரணமாங் காட்சித்
தெருளாள னேர்தே சிகன்.

895. சிவனுருவே தம்முருவாச் செத்தொழிந்தா லன்றி
யவனுருவை யாரு மறியார்—அவனவனஃ
தன்மையா நின்றதோ டற்பமுந்தன் னிற்பிறி
றின்மையுமா நின்றா னிறை. [தொன்

(இன்னிசை வெண்பா)

896. சொல்லாவான் றானே பொருளாவா னுந்தானே
சொல்லும் பொருளுங் கடந்தசுட ருந்தானே
எல்லாமாய் நின்றான்மற் றொன்றுமன் றாகநின்றான்
தொல்லோன் பரஞ்சோதி தான்.

(நேரிசை வெண்பா)

897. முதலாக நின்றதனி மூத்தப்பன் சற்று
மதிராத ஞான வடிகள்—எதிராக
மற்றொன் றிலாதமுழு மாட்சிசே ராட்சியால்
இற்றென் றியலொன் றிலான்.

898. கூர்ந்தவருட் பார்வைக் குறிப்பா லமுதவொளி
யார்ந்தபெரு வாழ்வா வடைந்தபிரான்—பேர்ந் [தொழிய
மானுபி மான மயற்பிறவி நான்றினெமெய்ஞ்
ஞானனு பூதி நதி.

குறிப்பு :— பிறவி - பிறவித்துன்பமான தாபத்திரயத்
துக்கு ஆகுபெயர்.

899. குற்றமறு மெங்கள் குருமூர்த்தி ஞானமலால்
வெற்றுரையொன் றுடா விழுமியோன்—செற்றமறு
சாந்தக் கடலோன் சதாசிவனெங் கோரமணன்
மாந்தருளச் சிந்தா மணி.

900. நினைப்பற்ற மோன நிகழ்ச்சியிலொன் றுக
வெனைப்பற்றி நின்ற விறைவன்—முனைப்புற்றுத்
தன்னையா னென்னைத் தலைப்படுமன் மற்றென்னை
தன்னியநான் போலகல் வான். [யொழிந்

## 165. ஆண்டவன் முகம்

901. ஊக்கமாச் சென்னடியை யுள்ளுறுமெய் யன்பருயிர்க்
காக்கமுற வன்று ரகவிருளை—நீக்குறுமெய்ஞ்
ஞானவொளி வீசி நகுவதுசுத் தானந்த
மோனவருட் பெம்மான் முகம்.

902. ஊன மயக்க மொழிக்குங் குருரமணன்
மோன விலாச முகவொளியால்—வானவருஞ்
சொக்கி வசப்படுவர் துக்கக் கலக்கமறத்
தொக்குமகிழ் வார்மா னிடர்.

903. எண்ணியமெய் யன்பர்க் கெலாநலமும் பொங்க [வருள்
புண்ணியமெய்க் கீர்த்திப் பொலிவுடையோன்— [பண்ணியவென்
புண்ணியங்க ளோருருவாப் புக்கசிவன் புந்திசெய்
கண்ணியன்காண் சேய னலன். [வார்க்

904. காந்தமாத் தன்பாற் கவர்ந்துமெய் யன்பரகத்
தார்ந்த சொரூப வரசளிக்கும்—சாந்தசிவ
ஞானவருட் பார்வை நடங்கிளர்சுத் தானந்த
மோனகுரு மூர்த்தி முகம்.

### 166. ஆண்டவன் பார்வை

905. அழிகின்ற வன்பருயிர்க் காக்கமுறு சாந்தி
பொழிகின்ற வின்பப் புயல்காண்—செழிகின்ற
தீத்திரளே போன்றகொடுந் தீவினையை நீறாக்கிக்
காத்தருளெங் கோரமணன் கண்.

905. காமருதன் னோக்கக் கதிரொளியாற் கட்டுவிட்டுத்
தாமரைமொட் டாஞ்சிச் சடக்கிரந்தி—ஓமெனுஞ்
[செஞ்
சொற்பொருளா மோனத் துரீயவெளி யாமலர்த்துஞ்
சிற்பரமே யாண்டவன்செங் கண்.

907. நானற் றெளிர்சொரூப ஞானமா மோனவருள்
வானப் பதிக்கு வழிகாட்டி—ஊனயனச்
சுட்டறிவாங் கற்பனைசேர் சூனியமாம் பாசமயற்
கட்டறநோக் காண்டவன்செங் கண்.

908. கரவறுபே ரின்பக் கருணைநோக் காலே
யிரவலரைப் பாலிக்கு மெந்தை—பரவொளியான்
மிக்க சதாமுத்தி வித்தை விளங்கலாற்
பொக்க வனர்த்தமறப் போம்.

909. சமுகமுற்ற பல்லுயிர்க்குந் தண்ணிலாப் போல
ரமணீய மான ரமணன்—சுமுகக்
குளிர்ச்சிசேர் பார்வை கொடியமனத் தாபத்
தளர்ச்சியற மாற்றுந் தகைத்து.

910. மருட்பா ழவிச்சையற மன்னுயிர்க்கு ஞான
வருட்பா லனஞ்செய் யடிகள்—அருட்பார்வை
யார்ந்தவகத் தான்மசொரூ பானுபவ ஞானமுண்
பேர்ந்தொழியு மூனப் பிறப்பு. [டாய்ப்

911. சாந்தியுரு வான சதானந்தி சுத்தவருட்
காந்தமா வுள்ளங் கவர்கள்வன் - சாந்தி
விலாசத்தா லென்னை விழுங்கினேன் பார்வை
யிலேசத்தா லெய்தும் பரம்.

912. ஆன்ருேர்க் கமைதி யமைவதா மன்றிமற்றென்
போன்ருேர்க் கலம்பல் புலம்பலே—தோன்றலாந்
தெய்வவருட் செல்வன் சிவரமணன் பார்வையா
லுய்திகண்டு வாழ்ந்தோ முளத்து.

## 167. ஆண்டவன் பார்வையும் பயனும்

913. கண்டன வெல்லாங் கடவுள் வடிவாக
மண்டனஞ்செய் சிற்சொரூப மாட்சியான்—பண்டு
[சிவ
ஞானவருட் பார்வையொளி நண்ணலாற் பொய்
ஊனவசை தீர்ந்த துலகு. [யெனுமவ்

914. செம்பொன் மலையாகச் சேர்ந்தா னடியோமை
யம்பொன் மலையாக வாக்கினன்—நம்பன்
கருணைக்கண் ணேக்கங் கலந்ததால் வாழ்ந்தோம்
மரணக் கலக்கமற மாய்ந்து.

915. தன்மயமெய் யன்பு தழைத்தபிரான் மன்னுயிருக்
கென்மயமா நானென் றிலகியே—கன்மயமாஞ்
சித்தங் கனிந்து சிவானந்தத் தேன்கசிய
வித்தகஞ் செய்தான் விழித்து.

## 168. ஆண்டவன் விருப்பு

916. அருட்பரனு நின்ற வருணசை லேசன்
குருப்பனவ னைகவுருக் கொண்டான்—விருப்பவனுக்
கன்பரது வாழ்வை யவிச்சையறப் பொங்கொளிசேர்
இன்பமய மாக்கலொன் றே.

## 169. ஆண்டவன் திருவடி மாண்பு

917. விரதமெலா மாண்ட விசுத்தர் மனஞ்சேர்
நிரதிசயா னந்த நிமலன்—பரிதியொளி
வீசுமலர்ப் பாதார விந்தத்தைச் சிந்தித்துப்
பாச மறுத்தார் பலர்.

918. குகையூ டொளிருங் குருசிற் பதமென்
சிகைமே லணியாத் திகழுந்—தகையால்
உலகவெம் பாசப் படைகெட் டுடையக்
கலகம் முடிந்தது காண்.

919. துரிசறுமெய்ஞ் ஞான சொரூபநிஷ்ட ருள்ளம்
பரசுகமோ ஹை பவத்தாற்—பரசிவமாப்
பெட்டுவக்கும் மோனப் பெரும்பதமே பாசபந்தக்
கட்டறுக்கு முண்மைக் கழல்.

920. மம்ம ரறுக்கு மருந்தாக வோங்குசிவச்
செம்மலருட் போதத் திருவடியே—எம்மனோர்க்
காதி வியாதி யறவகற்றி யாரமுதச்
சீர்திகழ்பேய் நல்குஞ் சிறந்து.

921. போத வெளியாகப் பொங்கு சொரூபவருட்
பாதவொளி யாலிதயப் பாசமறப்—போதலால்
வேத மவேதமா வெட்குற் றெழுந்ததுஞா
னுதவனுந் தன்மெய் யகத்து.

922. உருகுமெய் யன்பர்க் குவட்டாத் தெவிட்டாப்
பருகுசிவ போகவருட் பாதம்—குருகுலமாந்
தானே சகலகலா சாரமா ஞானவருட்
பானீய மாமெய்ப் பதம்.

923. கடக்கற கரிதான கல்விக் கடலைக்
கடக்கும் புணைதன் கழலே—நடக்குறும்பல்
கல்வியனைத் துந்தன்னிற் கற்பனையாய் மாயவொளிர்
கல்வியுண்மை நெஞ்சிலது காண்.

924. கல்விப் பயனைக் கடைப்பிடிக்கத் தக்கவருட்
செல்வச் சிவரமணன் சிற்பதமே—செல்வப்
பரமனருட் பாதப் பணியிலன்றி யில்லை
கருமமறத் தீர்சற் கதி.

925. கருணை மலிசொருபக் கண்ணுூர் கழலை
பொருநிமிடப் போதுமறந் துய்யேன்—அருண
மலைக்கோ ரணிவிளக்காய் மாவாக் கியத்துக்
கிலக்கியமா மெந்தை பதம்.

926. பொன்னுன மோனவருட் பூமியாந் தன்பதச்சி
ரென்னு லுரைக்க வெளிதன்றே—இன்னு
வகந்தைமுனைப் பான வனர்த்தமறப் பொங்கும்
அகம்பிரம்ம மாமெய் யறிவு.

927. ஊனவாழ் வான வுலோப மயக்கமற
ஞானவா ளோச்சுகுரு நாதனடி—மோனமாப்
பேணுவோ ருள்ளம் பிரம்ம சொருபவொளி
மாணவளர் வாழ்வு பெறும்.

928. கலக்கமற வென்னகத்திற் கண்ணு ரமுதத்
துலக்கமுறு சுத்தவருட் சோதி—அலக்கழியா
திம்பரார் காண வெதிர்ந்தகுரு மூர்த்தியடி
உம்பரார் காணு வொளி.

929. கள்ளமன வாழ்வைக் கடந்தொளிர்சற் போதவருள்
வெள்ளமா மோன வியன்பெருவாழ்—வுள்ளமா
வுள்ளபெரு வள்ளலடி யோகவாழ் வாகவெனக்
குள்ளலற வுள்ள வொளி.

குறிப்பு:— மோனவாழ்வே உள்ளமாகவுள்ள
வள்ளலடியே எனக்குயோக வாழ்வாக
வுள்ளவொளி என்பதாம்.

930. காம விலாசக் கருத்தாடு நீடுபரந்
தாமவொளி சாரந் தழைத்ததென்கோல்—சேமவருள்
செய்யுங் குருரமணன் சேவடியென் சித்தத்து
மையலற நின்றதன் மாண்பு.

931. காழ்த்தவகங் காரக் கருமாயத் தாற்கலங்கி
யூழ்த்தமட வாக்கையே யுள்ளத்தே—பாழ்த்த
திரோதான மோகமறச் சேர்ந்தகுரு பாதம்
சொருபானு பூதிச் சுடர்.

932. அறிகடந்து நின்றவருட் கோலப் பதமேன்
னறிவடர்ந்து நெஞ்சத்தே யாரும்—செறிவடைந்த
மோனத் தகந்தை முனைப்பொடுங்கத் தன்சொருப
வானத் தனைத்தும் மடுத்து.

933. சிவசொருப மோனவருட் சிற்றம் பலமே
சுவசொருப மான சுபோதம்—பவிசுபெற்று
வாழ வெனக்கு வழங்கியவென் ஞண்டவன்றாள்
நீழலே முத்தி நிலை.

குறிப்பு:— சிற்றம்பலம் - தகராகாசம், அதிநுட்பமான
அருட்பர வெளி; ஆன - ஆக விளங்குகின்ற.

934. ஞானமோ னத்து நடுப்படநா யேனுயிர்க்குத்
தானமளித் தாண்ட தயாளுதாள்—ஊனமாங்
கள்ளவகங் காரக் கருத்திலுறு வாதனைசெற்
றுள்ளவொளி யாயிற் றுளத்து.

935. நிறைந்திருக்க வுண்மை நிதியான பாதம்
மறந்தழுங்க ஹான மயக்கம்—சிறந்தபரஞ்
சோதியாம் போத சொரூபவருட் பாதமுயிர்க்
கூதியமா வுள்ள துளத்து.

936. நூலறிவு சென்று நுழையாத சுத்தவாள்
வாலறிவா மோன மலர்ப்பாதம்—பாலறிவா
வெட்குற் றெழிய விகற்பமனப் பேயறிவைத்
தட்குற் றெளிர்சொருபந் தான்.

937. பரமாக வுள்ள பகவன் பதத்தை
யுரமாக வூன்றி வுளத்தே—திரமாமெய்ஞ்
ஞான சொரூபசித்தி நண்ணவூற்று நானெனும்
மானமதி தீரும் மனத்து. [பொய்ம்

938. பலதிறத்த மோகப் பசுபாச மாம்பொய்
யுலகியற்கை சேரா துளத்தே—குலவுதிருப்
பாதவொளி தானே பராற்பரமா மோனவருட்
போதவெளி யாமெய்ப் புலம்.

939. பேசரிய மோனவருட் பெட்பாலே யாண்டஞா
னசிரியன் பாதவொளி யார்ந்தகத்தவ்—வீசனுக்கே
நேசத் தொளிபெருகி நிட்டானு பூதியா
லோர்சத் துவமா முணர்வு.

940. மோனப் பரவையின் மூழ்கித் திளைத்தமெய்ஞ்
ஞானப் பரசொருப நம்பனடி—ஈனப்
பதகனு மென்பாற் பரிந்து சோருப
விதயமே யாயிற் றினிது.

941. விளக்கமா வென்னுள் விளங்குவது மோகக்
களக்கமற வாண்டான் கழலே—உளக்க
ணளக்கரிதா மோன வளக்கராய்ச் சற்றுந்
துளக்கமிலா வுண்மைச் சுடர்.

942. எம்மையுமோ ரின்ப வியற்பரமா வான்றவருட்
செம்மைசேர் சுத்த சிவத்தொளியால்—பொய்ம்மய
வாடுமனத் தாபமற வாழ்வுசிவ மாக்குவது [லால்
நீடுகுரு பாத நிழல்.

943. ஓதப் புரோதமா வுள்ளும் புறமுமியல்
போதவருட் பூரணமாம் பொற்பாதம்—நேதித்
திறத்தாற் பிறவனைத்துந் தீர்ந்தொழியத் தம்முட்
செறித்தா ரவரே சிவம்.

944. கடந்த சிவத்திற் கருத்தூன்ற வென்பாற்
றொடர்ந்துதவு தோன்றாத் துணையாய்—மடந்தரு
[பொய்
யாணவக்கூடத் தோய வருட்பரமெய்ஞ் ஞானவெற்றி
காணவூன்ற தாண்டான் கழல்.

945. ஐயமேற் றுண்ணு மடியே னகங்கிளரப்
பொய்யலா வுண்மைப் பொலிவுடையேன்—செய்ய
போத சொரூபமாப் புந்தியிலே பொங்குசிவ [வருட்
பாதமே யந்தப் பவிசு.

946. புண்ணிய முண்டாம் புகழுண்டாம் போற்றுமுயர்
கண்ணியமா மோனவருட் காட்சியுண்டாம்—விண்
[ணளவப்
பொங்கு மகண்டசிவ போகமுண்டாம் பாசமகற்
றங்கண் ணரசடிதோய் வார்க்கு.

947. மோனத்தா லாதிக்கம் முற்றச் செலுத்துறுமெய்ஞ்
ஞானத் துரியகுரு நாதனடி—ஏனைப்
பதங்களுக் கெல்லாம் பரமாகத் துன்று
சதங்கடவுட் பற்றுந் தரம்.

948. கழியாத வுண்மைக் கடவுட்பே ரின்ப
மொழியாத மோன வுணர்வாய்—உழையே
னகத்திலுற்ற வாண்டா னருட்செம் பதமே
இகத்தெனக்கு வாய்த்த பரம்.

949. கள்ளக் கரவான கற்பனையின் றுகவுருத்
தெள்ளத் தெளிந்த சிவமாக—உள்ளத்
திருப்பறிவா மின்பநிகி யானைதா னென்றேருங்
கருட்பதமே யாபத் தனம்.

950. ஞானவருட் பூரணமா நம்பனருட் செம்பொனடி
வானவருக் கெல்லா மணிமகுடம்—ஞானிகளுக்
குள்ளமுறு மோன வொளிப்பிழம்பா மோனசுகத்
தெள்ளமுத வாழ்க்கைத் திரு.

951. நானித்தந் தன்றிரு நாமம் பிதற்றிமனந்
தேனித் திருக்குந் திருவடிகள்—வானத்
தமுதமழை பெய்தாங் கனுசந்திப் பாருக்
* கமிதசுக வாழ்வா மகத்து.

*அமித சுகம் - அனந்த திருப்தி.

952. நித்தசித்த மாக நிகழ்சொரூபச் சிர்பரத்தோ
டொத்தொழுகு சிந்தை யுபாசனையாச்—சித்த
விருத்தி தெளிந்தால் விளங்குவதா மோனக்
கருத்தே கடவுள் கழல்.

953. பரசொரூப மானவருட் பார்வையா லுண்மை
யரசரிலம் யண்டர்க் களிப்போன்—பரசுகவாழ்
வூற்றுக வுள்ளத் தொளிகிளரப் புக்கபதக்
கோற்றே னெனக்கு விருந்து.

954. பரமான மோனம் பழுத்ததொரு சிந்தை
யுரமான வுண்மை யொளியாற்—சிரமே
லடிசூட்டி யாண்ட வருட்பகவன் பாதக்
குடிவீட்டில் வாழுங் குடி.

955. பாத கதியே பராற்பரமா வாருயிர்க்கு
மேதகுமெய்ஞ் ஞான விசுத்தகதி—பாத
கதியே யதீதவருட் கைவல்ய மாக
யதிகள்காண் மோன கதி.

956. பாதஞ் சினையன்று பாதம் முதலன்று
போதமஃ தேகபரி பூரணமாம்—போதமுனைப்
பற்றறெளிரும் மோனத் தகண்ட வெறுவெளியா
வுற்றறெளிரு முண்மை யது.

957. *குருபதமா வென்னுட் குலவுசுப ஞானப்
பருவதமா மோனவருட் பண்பன்—குருரமணன்
பாதவருட் போதப் பரவைச் சிறுநுரையா
வூர்தலுறத் தேர்ந்தே னுலகு.

* குருபதம் - பெரும்பதம், பிரம்மபதம்.

958. பேதக் கலக்கமறப் பேணுங் குருபாத
போதத் துலக்கமியர் பூரணமாய்—மேதக்க
போனவங் கலத்தலான் மோகமுனைப் போய்ந்துபர
வானங்க மாகும் மனம்.

959. சுஞ்ஞான மோன சொருபானு பூதியன்பர்க்
கிஞ்ஞால வாழ்வு மனிதளிக்கும்—மெய்ஞ்ஞானத்
தெண்ணீரா லென்னுயிரைத் தேற்றித் தெருமரல்
கண்ணீர் துடைத்தான் கழல். [சே.

960. எம்பெருமா னாக வியல்சற் குருரமணன்
செம்பதமே யென்சொருப சித்திமுத்தி—அம்பலூறு
பற்பலவா மேனைப் பதங்களுமச் சிற்பதத்திற்
புற்புதமா மாயைப் புலன்.

961. குலவலுற்ற சுத்தவருட் கோலவொளிப் பாதத்
தலகில்பல் சித்தி யடுக்கும்—குலவுதிருப்
பாதமே யாகப் பயில்சொருப மானவெனக்
காதரமே னுண்டா மவற்று.

962. துண்ணெனவே நோக்கிமனத் துள்ளலறத் துங்க [வருள்
விண்ணுருவா வுள்ளே விளங்குவோன்—எண்ணு
கண்ணுக் கினியவருட் கர்த்தன் கனபதமே [மனக்
நண்ணற் குரிய நலன்.

குறிப்பு :— மனத்துள்ளல் - அடியாரது மனத்துள்ளல்
உள்ளே - அடியரகத்தே

963. துன்றுபரஞ் சோதி சொருபத்தா லென்னிதயக்
குன்றின்மே லிட்ட குலவிளக்காய்—வென்றிசேர்
ஆண்டவன்றீ பாத *வருட்சோலை யேயகிலத்
தீண்டலுறு மிக்க வெழில்.

* அருள் - சொருப சைதன்யம்.

964. தேவர்தஞ் சென்னிமேற் சேர்ந்து விளங்குபெருந்
தேவதையாந் தேறவே தக்கதாம்—சேவடியிற்
கைவல் லியநிலை காட்டிக் கொடுத்தருட்
தெய்வப் பதத்தாளிச் சீர்.

965. நின்று மிருந்துங் கிடந்து நடந்துமிகத்
தொன்றுதொட்ட வன்பர் தொழுவதாம்—என்றுந்
தகவுபெற்று வாழநந் தம்மையுய்யக் கொண்ட
பகவனருட் பார்ப்பான் பதம்.

966. போதக் கமலகத்திற் போற்றுமுயிர் புன்மயல்சேர்
பேதக் கலக்கமறப் பேர்ந்தொழியும்—பாதவருட்
பார்வையா லெல்லாம் பரசொருப மாகவொளி
சேர்வதா முண்மை தெளிந்து.

967. மோன குருமூர்த்தி முப்புடிசேர் மோகமற
ஞானவருட் பார்வைதரு நல்லபதம்—யானெனதற்
றுன்றமைந்த கேள்விசே ரான்மநிட்டை யூடகமா
வூன்றுபரந் தாம வொளி.

968. பரஞ்சோதி யானவருட் பார்ப்பான் பதமே
நிரஞ்சனமா முண்மை நிலையா—இரஞ்சகமா
யென்னிதயத் தூடுமற் றெல்லாச் சுவைபுளிப்ப
மன்னியதா லேகரச மாண்பு.

969. நீதமா மெய்ஞ்ஞான நிஷ்டையெனக் காண்டகு ந
பாதவருட் சீர்மைசேர் பார்வையே—ஏதமில்பே
ரின்பமா மோன வியல்வாழ்க்கை யாகவெனக்
கன்புமயம் பொங்கு மது.

970. நானற் றுளரிர்சொருப நம்ப னடியேனுக்
கானவருள் வாழ்க்கையளித் தாண்டபிரான்—[மோனத்
திருநோக் கழகியான் செம்பதமே நீங்கா
வொருநோக்க மாயிற் றுணர்வு.

971. காற்றஞ்ச மாகக் கலந்தமெய்க் காதலர்க்குக்
கூற்றஞ்செற் றுண்மைக் குலாவருள்வோன்—
[தேற்றஞ்சால்
கண்மணியா வென்னுளத்திற் காட்டியசெம் பொற்
விண்மணியோர் வெற்று நிழல். [கழற்கீழ்

972. தோளா முழுமணியாத் துன்றும் பரஞ்சோதிக்
காளாகப் பெற்ற வடியேற்கு—மீளா
மனேலயமெய்ஞ் ஞான மலர்ப்பதமே யுண்மை
யினேதயமாச் சேரு மிடம்.

குறிப்பு :- மீளா மனேலயம் என்றதால் மனேநாசமே குறிக்கப்பட்டதாம். மெய்ஞ்ஞான மலர்ப்பதம் என்றதனல் அது மேலும் நன்கு விளங்கும். உண்மை......இடம்- பிரஞ்ஞான கனப் பிரம்மசொருபமான முடிந்த புகலிடம்,

973. வெட்குறநா னென்னுள் விளங்கியே தன்மயமாப்
பெட்புறநின் றுண்ட பிரான்பதமே—நட்புறவா
மெய்த்துணையா வென்னுள் விடாப்பிடியாப்
எய்த்துழல்வே னல்ல னிகத்து. [பற்றினேன்

974. வாய்ப்பாக வென்னுயிர்க்கு வற்றுப்பே ரின்பவருட்
காப்பாக வாண்டான் கழலிருக்க—நோய்ப்பால
வந்தணுகச் சற்றும் வகைகயில்லை வாழ்வுசச்
சந்தமுற மன்னுந் தழைத்து.

975. ஆவிக் கருந்துணையா மம்மட்டோ வாண்டபதம்
நாவுக் கருங்கலமா நண்ணியதே—சேவித்
திறைஞ்சி வணங்கி யிசைபாடி யின்பம்
நிறைஞ்சு வழிபடுமென் னெஞ்சு.

976. * உதாரத் தியாகத்தா லோர்த்துணர்வா ருள்ளே
சுதாரசமாப் பொங்கு சொரூபன்—சதாசற்
கதியாக வுள்ளவருட் காந்தன் கழலே
நிதியாக வுள்ளுமென் னெஞ்சு.

* உதாரத்தியாகம் - அகிலத்தியாகம்; அகந்தைத் தியாகம், 'அகந்தையே யாவுமா மாதலால்.'

977. உள்ளக் கருத்தா வொளிர்சொருப மோனவருள்
வெள்ளக் கழலே விழுப்பொருளாய்—நள்ளுலகக்
காட்சிமுற்றுந் தன்பாலே கற்பனையாத் தோற்று
மாட்சி மதித்தற் கரிது. [விக்கும்

குறிப்பு :— சொருபமாகிய கழல் என்க.

978. அறம்பொருளுந் தானேமற் றைம்புலத்தோ டான்ற
நிறங்கிளர்பே ரின்பநிலை வீடும்—பிறங்குசச்சித்
தான சொருபமா வாண்டகுரு பாதமே
தானடியே னுருயிருந் தான்

979. சுத்தசிவ மாகத் தொடர்ந்து விளங்குபர
பத்திசுக வாழ்வருளும் பார்வையான்—மெய்த்தவமா
வென்னுள் விளங்கு மிறைரமணன பாதவொளி
தன்னுள் விளங்கு முலகு.

980. மயக்கறுதி யாக மடிந்திவ் வடியே
னுயிர்க்குறுதி யாக வுளத்தே—நயக்கும்
பிராப்பியமாம் பேறு பிரான்சீ ரமணன்
பராற்பரமாந் தெய்வப் பதம்.

981. புத்திக் கமுதாகப் பொங்கு சொருபவருள்
வித்தைக் கிருக்கையா மிக்கபதப் - வித்தகமா
வெண்ணெயடிக காண்ட விறைரமணன் சேர்ந்
தன்னியராத் தாங்கும் பதம். [தாரைத்

982. மருவலால் வாழ்க்கை மனக்கலக்க மற்றுத்
திருவளர்சாந் தானுபவஞ் சேர்ந்தேன்—குருரமணக்
குஞ்சரமெய்ஞ் ஞானக் குரிசிலருட் பாதவெளி
நெஞ்சகமுற் றெங்கு நிறைந்து.

குறிப்பு :—குரு...... .. **குரிசில் - மெய்ஞ் ஞானக் குஞ்சர மான குருரமணக் குரிசில்; நிறைந்து மருவலால் என இயையும்.**

983. முத்தன் குருரமண மூர்த்தி சிவஞான
சித்தன் முனிகணந்தேர் சிற்சொருபன்—சித்தமல
மற்றொழியக் கண்ட வருட்பரிதி சிற்பதமே
கற்றெழுகு மென்றன் கருத்து.

குறிப்பு :—எனது சித்தமலம்.

984. முத்திசுக வாழ்வு முகப்பவகத் தேசொருப
சித்திதரு மோனவருட் சிற்பரமாய்—எத்திசையும்
போற்றுங் குருரமண புத்தனருட் செய்பதமே
தேற்றுமென் சித்தந் தெளிந்து.

985. மோனக் கலையெனக்கு முற்றப் பயிற்றியமெய்ஞ்
ஞானவருட் சீலகுரு நாதனடி—வானவருங்
காணக் கிடைத்தலரு கைவல்ய மாண்பதமா
மாணவெனக் கென்றுமுள்ள வைப்பு.

## 170. ஆண்டவன் உபதேச மாட்சி

986. குருவணக்க மொன்றே குலவுசிவ போதப்
பெருவணக்க மாகப் பிறங்கும்—குருமணியாய்ப்
பெற்றவருட் போதனையைப் பேரா திதயத்திற்
கற்றெழுகப் பெற்றாற் கருத்து.

987. அந்தவொரு சொல்லா லகந்தைமுனைப் பானமயற்
சிந்தையற நின்றேன் சிவபதத்தே—பந்தமனப்
பான்மையறக் கெட்டுப் பரந்தாம மானவருள்
வான்மயமா நின்றதென் வாழ்வு.

988. நெஞ்சமா முண்மை நிறைவொளியிற் கற்பனைசேர்
வஞ்சமா மோக மனமில்லை—தஞ்சமாஞ்
சீவத் துவமதிபொய்ச் சித்தக் கலக்கமே
நீவத்து வத்துவித னீ.

989. ஊன வகந்தை யுடற்சியற வென்னுளத்தே
மோனவருட் பேரொளியா மூண்டகுரு—தானருள்
போத விலாசப் பொருள்சேர் மொழிகளே [சற்
நீதமுறு வேத நிறைவு.

**வேத நிறைவு - வேத முடிவு, உபநிடதம்.**

990. அளிதருமெய் யன்பா லகில குருவாய்
இளிவரல்சேர் மோகமகற் றெம்மான்—ஒளிசேர்
திருவாய் மொழியைத் தெவிட்டா வமுத
வுருவாவுட் கொள்ளு முலகு.

991. எண்ணங் கடந்த வியல்சே ரனுபூதி
வண்ணமணஞ் சேர்ந்ததிரு வாய்மொழியால்—
[அண்ணலருள்
உண்ணு ரமுத முறத்திளைத்த வண்செவியர்க்
கொண்ணுது மற்றோ ருரை.

992. தனுகரண மோகமற்றுத் தன்னிலையா முண்மை
நனவுணர்வு பற்றி நடக்க—அனுபவமா
வான்றமெய்ஞ் ஞான வருட்பிரான் சொல்லுறுதி
யூன்றுகோ லாகு முயிர்க்கு.

993. புந்தியிலே தன்னிழப்பாற் பொங்குமான் மானுபவ
விந்தைசேர் ஞான விளக்கமே—சிந்தையகத்
தொற்கமுறப் பெற்ற வுழையோர்க் குரம்படவே
சற்குருசெய் சற்போ தனை.

994. ஒன்று படுக்கு முதாரமெய்ஞ் ஞானத்தால்
வென்றணைத்துந் தானே விளங்குவோன்—மன்ற
வுரைக்குமதி நுட்ப வுபதேச மோனக்
கருத்தறிவார் மிக்க சிலர்.

995 நன்றி லடைந்து முகநோக்கித் தன்மொழிக்கு
நன்றுநன்றென் றெந்தொழுக நாத்திகரும்—மன்ற
வுரைக்குங் குருரமண னுள்ளம் பொருந்தத்
தெரிக்கும் பொருளே சிவம்.

**குறிப்பு:- நாத்திகரும் உள்ளம் பொருந்த என வியையும்.**

## 171. ஆண்டான் அடிமை அத்துவிதத்திலில்லை

996. அறிவுருவா லில்லை யடிமைத் திறமவ்
வறிவுருமெய் யொன்று மடைவால்—பொறிபுலன்
சித்தவுரு வானவெறுஞ் சீவபோ தத்தளவே [சேர்
கொத்தடிமை யென்னுங் குணம்

## 172. ஆண்டவன் சேவை

997. ஆண்டவன் சேவையே யாக்கமாத் தேக்கினல்
ஈண்டவருள் பொங்க விதயத்தே—மூண்டகா
ரணவமா மூல வநாதிமல மாசகன்று
காணலாம் போதக் கழல்.

## 173. இறைபணி

998. அம்மானுக் காளா யடித்தொண்டு பட்டவனக்
கம்மா னருளியமெய் யாய்ந்தொழுகாய்—சும்மா
இருந்தலே நானற் றிதயத்தே மாணத்
திருத்துந் திருத்தொண் டெனை.

999. பணிப்புற் றுழல்பாச பந்தவே ரான
வினைப்பற் றெழிய விளங்கும்—முனைப்பற்
றிறைபணி நிற் கின்ற வியல்பா லகத்திற்
குறைவறுசற் போதக் குலா.

1000. பாச வகந்தையறப் பற்றற் றிறைபணிக்கே
நேசமா மோனமுற்று நிற்றலால்—ஈசனியற்
றாட்சிக் கடங்கிலன்றி யின்றா வனந்தசிவ
மாட்சிக்கு மற்றோர் வழி.

1001. அயலான வற்றி லகப்புத்தி நீங்கச்
செயலற் றிறைபணியிற் சேர்தல்—இயல்பான
சுத்த வருட்பரயாத் தன்றாங் குருநரமண
முத்தனுக்காட் செய்யும் முறை.

## 174. இறைலீலை மோட்ச காரணமே

1002. அடாதே யாடுமென் னம்மா னருட்பெருங்கூத்
தூடாடித் தோன்றி யொடுங்குலகு—கூடாத
கூட்டமா மாயையாக் கூடுங்கன் றுண்மையுணர்
நாட்டமுறக் கூட்டு நலன்.

## 175. எல்லாம் சிவன் செயல்

1003. அந்த ரியாமி யருளியக்கத் தாலன்றி
உந்துநினை வுள்ளத் துதியாது—சிந்தையாற்
செய்வினையெல்லா மந்தச் சிவன்செயலே யாகவறிந்
துய்வதே போலு முணர்வு.

## 176. கடவுளியல்

1004. ஆண்டகுரு நாத னருட்போ தனைவாழ்க்கை
காண்டலரு மோனக் கடவுளியல்—பூண்டவருட்
காதலோர் புத்திக் கலக்கமறத் தேர்வகையால்
ஆதரமீக் கூர்ந்தெண்ணி யாங்கு.

## 177. கடவுட் காட்சி

1005. கடவுளைக் கண்டோர் கடவுளே யாவர்
கடவுளின்வே றன்றாந்தக் காட்சி—கடவுளியல்
சுத்தாத் துவித சொருபவருட் காட்சியாற்
செத்தொழிந்த ஜீவத் திறன்.

### 178. ஆட்படுதல்

1006 நானெனும்பொய்த் தன்மைகெட நானுரென் றுயா
கானகுரு வாநன் கவசரித்த—ஞான [முறைக்
வருட்பரஞ்சோ திக்குமுற் றாட்படவே மோனத்
திருப்பதஞ்சா திக்குந் திறம்.

### 179. ஊனுதல்

(குறள்)

1007. ஊனு வியன்ற வுணர்வால் விளங்குமகத்
தேனுன தன்மெய் யியல்.

(வெண்பா)

1008. ஞானப் பிழம்பான நம்ப னருட்பதத்துக்
கூனவகங் கார மூணவாயின்—மோனவருட்
சிற்பரவா னைகச் சிறக்குமுயிர் மோகமனக்
கற்பனையாம் பந்தங் கழன்று.

1009. ஊனவகங் காரமுனைப் போய்ந்தவர்பா லேய்ந்
[தொளிரும்
மோனவடி வான முழுமுதலே—வானவரும்
தேர்ந்தறிய வொண்ணுர் சிவபதத்துக் கூனுக
வார்ந்தொளிர்க நானென் னறிவு.

1010. நல்ல சிவத்துக்கு நல்லுணவாத் துன்றுமனம்
நல்லசிவ பூரணமே நண்ணுமால்—தொல்லைசைவு
பொய்த்தோடப் பொங்குசிவ போதானு பூதியாற்
சித்தோப சாந்தி சிறந்து.

1011. மாணக் கடவதருட் காட்சியாத் தன்னகத்துத்
தூணமாம் போத சொருபமே ஆணவஞ்சேர்
முப்புடியைச் செற்று முனைப்படங்கித் தானுணவா
மப்படியாற் காணு மது.

### 180. ஆன்மாவே ஈசன்

(குறள்)

1012. பாவனு தீதப் பரந்தன் சொருபமென்
ருர்வமா வாராய்ந் தறி.

(வெண்பா)

1013. அறிவாக வுள்ளத் தவிர்தற் பரத்திற்
செறிவான சித்தஞ் சிவமே—நிறைவான
சுத்தமெய்ஞ் ஞான சொரூபச் சுடர்ப்பிழம்பிற்
சித்துருவாச் சித்தங் கெடும்.

1014. அறிவிலே மோக வகந்தைக் கலக்கம்
அறிலவ் வறிவே பரமாம்—அறிவால்
அயற்சுட் டகற்றி யறிவையே யாயின்
மயற்கலக்கம் மாயும் மனத்து.

1015. உன்பனி பாவ வொளியா லகிலமுமோர்
தன்மயமாங் காட்சி தழைத்தமனம்—மன்மவருட்
சிற்றம் பலமாச் செறிந்தசிவக் கேவலமே
மற்றன் றதன்சொருப மாண்பு.

1016. ஏனைப் பதங்க ளெலாந்தன்னிற் கற்பிதமா
மோனப் பதவொளியின் மூழ்குமனம்—நானெனும்
மோக வகந்தை முனைப்பா வுறும்பாச [பொய்ம்
வேகமற்ற சுத்த வெளி.

1017. எண்ணமற்ற மோன வியல்பான சுத்தவருள்
வண்ணமுற்று நின்ற மனத்தெளிவே—நண்ணக்
கடவதாந் தன்சொருபக் கைவல்ய வாழ்வாப்
படர்வதா முத்திப் பதம்.

1018. ஊனக் குறையா முடலகந்தை யற்றுவெறு
ஞானமய மாக நடக்குமனம்—ஊனப்பொய்ந்
நாமவுருக் கற்பனைசேர் நாட்டமற நட்டமாய்ச்
சேமஞ்சே ருண்மைச் சிவம்.

1019. உட்டுறவா லுள்ளத் தொடுங்கியே நிட்டுரச்
சுட்டறிவாற் சிந்தை சுழலாது—நிட்டையாற்
றொந்தமற்ற சொந்த சொரூபவருட் கேவலமே
பந்தமற்ற வுண்மைப் பரம்.

1020. உகந்தசிவ பத்தி யுபாசனையா லுள்ளே
முகந்தசிவ யோக முனைப்பால்—அகந்தையறப்
புங்கமா வுள்ளொளிர்சற் போத சொரூபமே
பங்கமிலா மோனப் பரம்.

1021. ஈன வுடல்வடிவே யானென் றவமரஃசேர்
தீன வகந்தையறச் சிற்பரத்தே—மோன
வமைதிசே ரன்மை யறிவொளியாந் *தானே
யிமையாத நாட்டத் திறை.

* தான் – ஆன்மா.

1022. மெய்த்துரிய மான விளக்கமே வென்றிசே
ரத்துவித மான வருட்பரமாம்—சித்தமனந்
துன்றுமொரு *ஜீவன் சொரூபமே சிற்பரமாந்
துன்றுசிவ மாகத் துணி.

* ஜீவன் சொரூபம் - ஜீவனுடைய சொரூபம்.

1023. சுகந்ததும்பு சுத்தப் பிரம்மமாஞ் சீவன்
அகங்கலங்கி நானென் றழுங்கல்—ஜகந்தனையாள்
சக்கர வர்த்திமிகத் தாழ்ந்த வடிமையாப்
பொய்க்கனவிற் புக்கழுங்கல் போனம்.

1024. சுகத்தான மான சொரூபப் பதமே
மகத்தான தன்னகத்து மாட்சி—இகத்தாளுஞ்
செய்யக் கடவனலன் ஜீவன் சிவசொருபம்
மெய்கண்டார் கண்ட விதம்.

1025. கடவுட் பதத்திற் கரைந்த மனத்திற்
சுடர்வுற் றுளிர்தன் சொரூபம்—கடவுட்
பரமன்றி யில்லை பசுத்துவஞ்சே ரூனை
வுருமன்ற வின்று முளத்து.

1026. ஒவியமா வுள்ள வுலகுக்கோர் பேருயிராய்ச்
சீர்வியமா மந்தச் சிவனுருவே—ஆவியாய்
இந்தவுட லுக்குநா னென்னுமபி மானியாம்
விந்தைசேர் ஜீவனது மெய்.

1027. உருவமா மோகவுயி ரோர்த்தா லதீதத்
துரியமா மேக சொரூபம்—பெருமைசால்
சச்சித்தா வொன்றுபரந் தாமமா மவ்வகத்தில்
எச்சமொன்று மென்று மிலே.

1028. எந்த வறிவொளியா முண்மையைச் சார்ந்துமற்
றிந்தவுல கெல்லா மிலங்குபவோ—அந்த
* வெறுவெளி யான விசுத்தமே ஜீவன்
மறுவிலா வுண்மை வடிவு

* விசுத்தமான வெறு வெளி எனக் கூட்டுக.

1029. ஆவலித்துச் சிந்தை யமுங்கா துளத்துயிரை
நேர்வலித்துச் சற்று நிஜங்காண்மின்—ஜீவன்
கடைக்குல மல்லன் கடவுள் சொரூபத்
திடைக்குலவு கின்ற தியல்.

## 181. ஆத்ம ஸ்வராஜ்யம்

1030. ஆவலித்துச் சிந்தை யமுங்கு மகந்தைமயற்
போர்வையகத் தான்மாவாப் பொங்குவதாய்ச்—
சீவனுக்குச்
சாட்சியா நின்றவருட் சைதன்யப் பார்வைகூ
ராட்சியே யுண்மை யரசு.

## 182. சற்குரு

(குறள்)

1031. அருட்பரமே நம்முண்மை யாக விளங்கத்
தெரிப்பவனே மெய்த்தே சிகன்.

குறிப்பு:—விளங்கத் தெரித்தல் - அனுபவமாக
வுணர்த்தல்.

1032. குருபதே சத்தின் குறிக்கோளாக் கொள்க
சொரூபவுணர் வோவாத் தொடர்பு.

1033. குருவா யிலங்குசிவக் கோயிலமெய்ஞ் ஞானப்
பொருளேகாண் பொன்றுப் பொருள்.

1034. அமுதமா மோன வருட்சீ ரொளிசால்
சமுகங் குருசந் நிதி.

1035. * அதிர்ப்பற வாண்டா னருளியசற் போத
மதர்ப்பினில் வாழும் மனம்.

* அதிர்ப்பு - அதிர்ச்சி.

1036. * விருபவெளி யான விழியா விளங்கு
சொருபகுரு பாதந் துணை.

* விருபவெளி - துரீயவெளி.

1037. தொந்தமனக் கற்பனையின் சூதைக் கெடுத்
சந்தகுரு பாதஞ் சரண். [தொளிர்சச்

(வெண்பா)

1038. மாயிரு ஞாலத்தே மன்னுயிர்கள் வாழச்செஞ்
ஞாயிறுதா னெழுந்த ஞானகுரு—பாயிருள்செற்
றின்பவொளி வீசி யிதயப் பரஞ்சோதித்
தம்பமாத் தாங்குகின் றான்.

## 183. குரு மாட்சி

1039. பக்குவகா லத்திற் பரமேச் சுரனருளால்
மிக்கு வழங்குவான் மெய்ஞ்ஞானப்—பக்குவமிக்
காக்கியுஞ்சித் தத்தை யருட்சத்தி பாதமுறத்
தாக்கியளிப் பான்சற் குரு.

1040. குருசரண மன்றியருள் கூட்டுவிக்க நாட்டத்
தொருசரண மில்லை யுலகில்—பரசொருபம்
கண்காண வந்தவருட் காட்சிகாண் காலூன்றி
மண்காண நின்றகுரு மாண்பு.

## 184. குருஞான மாட்சி

1041. சுத்தசிவா னந்தச் சுடர்விளக்க மானவருட்
சித்த விருத்தியே ஜீவனமாய்—நித்தசித்த
புத்திமுத்தி காட்டிப் பொலிவிக்கும் போதகுரு
வித்தகத்துக் கில்லை விலை.

## 185. குரு நாம மாட்சி

1042. நமோரம ணாய நமோரம ணாய
நமோரம ணாய நமவென்—நமோகமாச்
சிந்திப் பவர்க்குத் திருவருட்கை வல்லியந்தம்
புந்திப் புலத்தின் பொருள்.

1043. வியக்கத் தகும்பல் விசித்திர சித்தி
நயக்குற் றவர்க்குமிக நல்கும்—மயக்ககற்று
மெய்வித் தகமா விளங்குங் குருரமண
தெய்வத் திருமந் திரம்.

1044. குருமந் திரங்குறிக் கொண்டா லதனிற்
பெருமந் திரம்பிறிதொன் றில்லை—பருவந்து
பாழ்படா வாறு பராற்பரமெய்ஞ் ஞானவொளி
வாழ்வடையக் கூட்டும் மனத்து.

1045. அவிதா விடுமெய் யடியரகத் தார்ந்த
துவிதபய மோடத் துரக்கும்—சவிதாவாய்க்
காரிருள்சேர் பொய்யகந்தைக் கட்டறுக்குங் கண்
பேரருள்சேர் சீரமணன் பேர். [மணியாய்ப்

1046. கமன மனமடங்கக் கட்டிக் கருத்தைச்
சமனமாத் தன்னடியிற் சார்த்தி—ரமணப்
பெயர்மங் களமாகப் பேணுமெய் யன்பர்
துயர்மங்கப் பொங்குஞ் சுகம்.

1047. மோனவொளி வீசும் முகத்தா லெனையாண்ட
ஞானகுரு மூர்த்திதிரு நாமமே—மானவர்க்குப்
புண்ணியத்தால் வாய்த்தவருட் புத்தமுதப் போன
வெண்ணியுயிர் வாழ்க வினிது. [கமா

1048. உரைக்க வுரைக்கவுளத் தோகைமிகப் பொங்கக்
கரைக்கலுற்ற தென்றன் கருத்தை—இரைக்க
விரைக்கவிண் பாழுக் கிறைத்தலா வுண்மை
தெரிக்குங் குருமந் திரம்.

1049. பிறவி மயக்கப் பெருங்கடலைப் பேரு
மறவற் றடிக்கும் வடவை—மறவயற
மாற்றுமெய்ஞ் ஞானவருள் வண்மைத் திருநாமந்
தேற்றுமெனக் கேன்சாத் திரம்.

குறிப்பு :—வடவை என்பது ஆண்டவனுக்கு உவம வாகுபெயர்; வடவையின் திருநாமம் என ஆறும் வேற்றுமைத் தொகை.

1050. வானேற வேணியா வாய்த்த திருநாமந்
தானே யெனக்குச் சதிர்ஞானம்—ஏனையற்
றேனைச் சுவடி யெழுத்தறிவு மற்றதுமற்
றேனையர்க்கே யாக வினிது.

## 186. குரு பூஜை

1051. செய்யு மவர்க்குத் தெளிந்தநா னனுபவ
மெய்யருள்பா லித்து விளங்குமே—வையமறத்
தெற்குமுக மாகத் திருந்தவொளிர் சீரமண
சற்குருதே வாரா தனை.

## 187. குரு பக்தி

1052. பெருமா னடிகளைப் பேணுவார் நெஞ்சிற்
கருமாய மோகங் கழியும்—தெருமரல்சே
ருள்ளத் துயிரைவிளக் குத்தமசற் போதவருள்
வெள்ளமன்றோ வாண்டவன் மெய்.

1053. குருவருளே முற்றக் குறிக்கொண்ட நெஞ்சிற்
பொருவருமெய்ஞ் ஞானவொளி பொங்கும்—
[வெருவரல்சேர்
சிந்தா குலப்படர்போய்ச் சித்தோப சாந்தசுகம்
வந்தாருந் தன்சின் மயத்து.

1054. ஞான குருரமண நம்ப னருட்பதத்தே
ஞானவருட் பத்தி நழுவாதேல்—ஊனமில்லை
யானையாக் கீடமா வெந்தப் பிராணியாத்
தானியல நேர்கினுந் தான்.

## 188. குரு பணி

1055. மெய்வழிகண் டுய்ய விரும்பும் மகிதலத்தீர்
உய்வதற்கு மற்றோ ருபாயமில்லை—மெய்வருந்தத்
தொண்டுசெய்து வாழ்மின் சொரூபவருட் பூரணமா
மண்டுசுக போதகுரு மாட்டு.

## 189. குரு சொரூபத் தியானம்

1056. குருசொருப சிந்தை குறிக்கொண் டொழுகும்
பரிசயமே நாளும் பழகல்—குருசொருப
மானசிவ போத வருட்பரமா முத்திவளர்
மோனநிலை சாரும் முறை.

1057. குருவடிவ மொன்றே குறிக்கொண்டு மற்றோ
ருருவுபெயர் பற்றா துளத்தை—நிருவிடயச்
சீரணவ வைத்தாற் சிறப்பென்னுஞ் செம்பொருளின்
பூரணம்வந் தாங்கே புகும்.

1058 கோசவகங் காரங் தகைந்தொளிர்சற் போதகுரு
தேசுறுசெம் பாதவருட் சிந்தனையாற்—பாச
வெறிமயக்க மற்று விசுத்தமெய்ஞ் ஞான
மறுமலர்ச்சி சேரும் மனத்து.

## 190. குரு பாதம்

1059. பாதமே மிக்கவருட் பற்றுக்கோ டாகமனக்
கேதமகன் றுள்ளங் கிளர்தலால்—சூதகல்சற்
போத சொருபப் பொலிவுசேர் சாந்தியே
மேதகுபே ரின்பவியல் வீடு.

1060. அடியேனுக் காசை யருட்கடலா வாண்ட
உடையான் பதத்தி லுறைதல்—அடியார்க்
கதன்மே லவாவ வகமகிழ்ச்சி பொங்கு
மிதஞ்சே ரிடமொன் றிலை.

## 191. குரு பாத மாட்சி

1061. குருரமணன் பாதங் குறிக்கொண் டொழுகுந்
திருவளர்சற் பத்தித் திறத்தால்—மருவுமுயிர்க்
கெங்குந் திருவருட்பே ரின்பமகிழ் பொங்குசுப
மங்களஞ்சேர் சாந்திபத மாண்பு.

## 192. குரு பத ஞானம்

1062. விருப்புவெறுப் பாதி விபரீதப் பான்மை
குருப்பதமுற் றுர்பாற் குறுகா—உருப்பதா
வோங்குகுரு பாத வுணர்வுசே ருள்ளத்தின்
பாங்குறுமோ பாழ்ங்கற் பனை

## 193. சொரூபம்

(குறள்)

1063. சுத்தவருட் போதத் துரீய சொரூபசிவம்
வித்தைகளுக் கெல்லாமோர் வித்து.

1064. அறிவான வுண்மை *யகமே அனைத்துந்
தறையாகத் தாங்குந் தகைத்து.

* அகம்—சுத்தான்ம சொரூபம்.

1065. சிந்தனை மோகத் தெருமரலைச் செற்றொளிர்சச்
சந்தமே தன் சொருபச் சால்பு.

1066. மாயமனக் கற்பனையை மாற்றினோர் உள்ளத்து
நேய வுணர்வொளிகாண் பார்.

1067. அறிவுருவே யானசுத் தான்ம சொருபத்
தறிவறி யாமை யிலை.

1068. சிந்தையற்ற மோனத் தெளிவா வியல்சொருபம்
பந்தமுத்தி யற்ற பரம்.

1069. உறங்கலற்ற வுண்மை யுணர்வாக வுள்ளம்
பிறங்கல் சுயசொருபப் பெட்பு.

1070. ஒற்கமற வுள்ளத் துணர்வாக வுள்ளபொருள்
சற்கதியாத் தேர்தத் துவம்.

1071. புலங்கடந் தோங்குசிவ போத வொளியே
நலங்களுக்கெல் லாமெய்ந் நலன்.

1072. விடாதவுண்மை தானு விளங்க சொரூபம்
அடாதமட்டும் சாந்தி யரிது.

1073. அடிப்படையா வுள்ள வருட்சிற் பரமே
கடைப்பிடிக்கை கற்ருேர் கடன்.

1074. தாக்கற் ருெளிர்சொருபத் தத்துவமாங் கைவல்ய
நோக்கிற் கரக்கு முலகு.

1075. திறந்தவெளி யாகத் திகழ்சொருப நோக்கில்
வறந்தொழியும் மாய மனம்.

1076. மற்ருென்றை நோக்கி மனங்கலங்கும் மோகவகப்
பற்றற்ற வாழ்வே பவிசு.

1077. புலங்களிலே சித்தத்தைப் போக்கார் சொரூப
நலங்கருது நாட்டத் தவர்.

1078. பரமான வுண்மைப் பதத்திலே நானற்
றுரமாக வூன்றுவர் நல் லோர்.

1079. சுத்தப் பரமே சொருபமா வுற்ருெளிர்மெய்த்
தத்துவமே *யத்துவிதச் சாற்று.

*அத்துவிதச் சாற்று - அத்துவித வேதாந்தஞ் சாற்றும் பொருள்.

1080. ஒன்ருந் துணைத்தா னுணரத் தொடங்கிலவ்
வொன்றிரண்டாப் பொய்க்கு முறழ்ந்து.

1081. தர்க்கஞா னங்களாற் சாதிக்க வேண்டுவதன்
றர்க்கனுந் தன்மெய் யறிவு.

குறிப்பு :—ஏதுக்களாலு மெடுத்தமொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர் விட்டுள னெங்கள்
சோதி—எனனும் சம்பந்தர் தேவாரம் இங்கு
நன்கு ஆராய்ந்தறிதற் குரியது. ஆன்மா
நித்யாப ரோட்சமென்று வேதாந்த சாத்
திரங்கள் சாற்றுவதும் காண்க

1082. அனுபவமா மன்றிமனந் தாய்ந்தறிய வொண்ணாத்
தனியறிவு சுத்தசச் சித்து.

(வெண்பா)

1083. திட்டியைத்தன் பாலே திருப்பிற் றொருபிர்க்கு
வெட்ட வெளி யாக விளங்குமியல்—பட்டிமனச்
சுட்டறிவா முப்புடியின் சொப்பனமாங் கற்பனை
டுட்டிகழு முண்மை யுரு. [கெட்

1084. யான்கண்டு கொண்டவவ் வேகவியல் வாழ்வுசிலர்
வான்கண்டு கொண்டன்ன மாட்சித்தே— [ஊன்கண்ட
பொய்யகந்தைச் சுட்டறிவு போதலன்றித் தன்
மெய்யறிவு வேறன் றறி. [சொருப

1085. புகலாக வுள்ளவருட் போத சொருபம்
பகலாக வென்னுட் படரும்—இகலான
மோக வகந்தைதீர் மோனப் பரவெளிதா
ஞைகவியல் சாந்தி யலர்ந்து.

1086. எங்கு நிறைந்தியல்பே ரின்பருட் செம்பதமே
துங்கமனந் தேறு சுயசொருபம்—மங்குமனப்
பேயகந்தை மாய்ந்தாற் பிறங்கப் பெறுவதன்றித்
தோய்வதன்று சொந்த வுரு.

1087. கலங்குமகங் காரமறக் காணுவது கண்ணைத்
துலங்குறுமெய்ஞ் ஞான சொருபம்—அலங்கலின் [மெய்
கண்டவர்க்கு மோகக் கலக்கமாம் பாம்பில்லை
மண்டுவது தன்சொருப மாண்பு.

1088. கடந்தியல்பே ரின்பமயக் கைவல்ய வாழ்வாத்
தொடர்ந்தியல்சுத் தான்ம சொரூபம்—அடர்ந்தியல்
[சுத்
தாத்துவித பூரணமா வான்றநிஷ்டை யாகவருள்
கூர்த்ததெனைத் தன்மயமாக் கொண்டு.

குறிப்பு:—கூர்ந்தது கூர்த்தது என எதுகை நோக்கி வலித்தல் விகாரம்; கூர்ந்து கொண்ட என விகுதி பிரித்துக் கூட்டுக.

1089. அடிக்கடி நல் லான்றோ ரகத்திலுறு நிஷ்டை
விடுக்கவொணு தென்றுமுள்ள மெய்யே—தடுக்க
[வொணு
தென்றென்று முள்ளத் தியல்பான நிஷ்டையை
மன்றமறைப் பஃதே மனம்.

1090. பாகமிலாத் தன்சொருபம் பண்ணலுறும் பூசனையால்
ஏகமிரண் டாக விகல்பட்டு—மோகமனக்
கற்பனு மாத்திரமாக் காணுங் கனுப்போலத்
தப்புறுமா லுண் மை தவிர்ந்து.

1091. போத சொரூபம் பொருந்தலாற் புத்தியிலே
பேத மயக்கம் பிரிந்தொழியும்—மேதகுசற்
போத சொரூபப் பொலிவாலே தன்மயமாப்
போதரூஉங் காட்சிப் புலம்.

1092. துருகமாக் துன்றுமதி சூக்குமமெய் யான்ற
சொரூபவெளி யாகத் துலங்கும்— சொரூப
வசப்பட்டா லன்றிமனம் வஞ்சப் புலத்தின்
பசப்பிற் படாமை யரிது.

1093. உந்து முனைப்பற் றொழிந்தநிலை கற்பனு
தொந்தமற்ற மோன சுபாவநிலை—பந்தமுத்தி
யெல்லா மகந்தை யுனைப் பெய்தியபின் னன்றிமனம்
புல்லா ததீதப் புலத்து.

1094. அனாதியா வுள்ள வமல சொரூபம்
ஏனாதியா னற்ற வியல்பே—இனைவெம்
பாசபந்த மாகப் படர்வுறுமப் பற்றிரண்டும்
பாசமனப் பொய்க்கற் பனை.

குறிப்பு :—அனாதியே அமலமாக வுள்ள சொரூபம்.

1095. நானு ரெனத்தன்னை நாடின வுள்ளத்தில்
வானாக முற்ற வளைத்தெழுந்து—தானைத்
துலக்கமுறு மோன சொரூபமே சித்தக்
கலக்கமறக் காணுங் கதி.

1096. நிரந்தரமென் னெஞ்சத்து நிஷ்டானு பூதி
சுரந்தொளிர்சற் போத சொரூபம்—அரந்தைசேர்
பேத மயக்கப் பிழைதீ ரனுபவசற்
போத வகச்செம் பொருள்.

1097. நாயகமா வுள்ளவோர் ஞான சொரூபமே
தாயகமாய் முற்றுக்குந் தாரகமாய்—மாயமா
வித்தனுவே நானென் றியல்பொய் யகந்தையற்றால்
அத்தனையுந் தானு மது.

1098. களங்கமாம் பாசங் கழன்றொழியத் தம்முள்
விளங்கு சொரூபவெளியே—வள்ங்குலவு
மோனவருட் கைவல்ய முத்திப் பெரும்பதமாத்
தானவிர்மெய்த் தானமென் பார்.

1099. கற்பான் சொரூபமே கைவல்ய சித்தியாத்
தப்பாப் பரமார்த்த தத்துவமாம்—சொற்பால
தன்று சொரூப மதிஷ்டான மாவகந்தைக்
கென்றுமுள தன்மெய் யியல்.

1100. மூலப் பிழையான மோக வகந்தையே
கால பயத்தாற் கலங்குவது—வாலறிவா
வுள்ளபொரு ளாக வொளிர்சொருபம் காலமறத்
தெள்ளுபர மான சிவம்.

1101. துருகமா மோனந் துலங்கப் பெறுசற்
குருபதே சத்தாற் குலவு—சொருப
வறிவான வுண்மையே யான்றவருட் போகச்
செறிவான சுத்த சிவம்.

1102. துள்ளலருமோன சொருபமே சோபனஞ்சே
ருள்ளமா வுள்ளதன் னுண்மைநிலை—தெள்ளத்
தெளிந்தசிவ மானவருட் சிற்பரமா நீர்மை
யளந்தபர மார்த்த வகம்.

1103. ஒக்க விளங்குவதோ வொட்பவருட் சிற்பரமே
தொக்கபல்விஞ் ஞான சொருபமாய்—மிக்கதனக்
கன்னியமொன் றின்றி யகண்டாத் துவிதமாய்
மன்னியசுத் தான்ம வடிவு

1104. பின்னுமுன்னு மற்றவருட் பேரொளியாங் கேவல
துன்னுமனு தீத சொருபமே—அன்னியமற் [மாத்
றெல்லாமுந் தன்னி லிருந்தொளிர்சச் சிற்பரமாத்
தொல்லறிஞர் போற்றுஞ் சுடர்.

1105. பாழ்வா தனையுறுவெம் பாசமற்று மெய்ஞ்ஞான
வாழ்வா வகத்தில் வளர்சொருபம்—மாழ்குமனக்
காரா வரணைக் கலக்கமறக் காணுமொளிச்
சீரா ரருட்சிற் பரம்.

1106. உபாதி யகந்தைமுனைப் பற்றெழுந்த வுண்மை
சுபோதமாத் தூன்று சொருபம்—அபாரவருட்
சிற்சத்தி சேர்ந்த சிவமேதா னாகவொளிர்
சொச்சத் துரீய வெளி.

1107. பொருளான வுண்மை புணர்ந்தவகம் போத
வருள்வெளியே யாக வளாவும்—இருள்சே
ருலக மயக்க வுணர்வாம் பிழையற்
றிலகும் சொருப வியல்.

1108. குணமுங் குறியுங் குலவுசிவ போதத்
தணவுந் திறத்தன வல்ல—புணரும்
மனேமையமாஞ் சீவ மயக்கமே யன்றி
யனுமயமாந் தன்மெய் யல

1109. தனது சொருபத் தடுமாற்றஞ் சேர்ந்த
மனோமயமாஞ் சீவ மதிக்கே—இனத
வரோபசமு சாரதுக்க மன்றினா னன்ம
சொருபத்துக் கில்லை துணி.

குறிப்பு :—மனோமயம் - விஞ்ஞான மயத்துக்கும் உப
லக்ஷணம்; அரோபம் - ஆரோபத்தின்
குறுக்கல்.

1110. உள்ளக் கருவாக வுள்ள சொருபமே
கள்ளமறக் காணக் கடவதாம்—வெள்ளப்பே
ரின்பவொளி யாக வியல்வெளியா மங்கில்லை
துன்பவிருள் சூழ்ந்த கனு.

1111. சிந்தைமூ லத்திற் செறிந்தொளிர்நிச் சிந்தையாற்
சிந்தனை செய்து சிவோகமெனப்—புந்தியாற்
போற்றுநிஷ் டானுபவ போத சொருபமே
தேற்றலுறத் தக்க சிவம்.

குறிப்பு :—சிந்தனை செய்தல் - நினையாது நினைத்தல்.
தேற்றல் - அறிந்தடைதல்

1112. மயக்கத்தி லாழ்ந்து மனங்கலங்கி மட்கு
முயிர்க்குறுதி யாக *வுணர்வோர்—நயக்க
மிகநல்ல நல்ல விகுத்த சொருபப்
புகலல்ல தில்லை பொருள்.

*உணர்வோர் - விவேகிகள்.

1113. மத்தவகங் கார மனப்பதைப்பற் றோய்ந்தவுயிர்
சுத்தசிவ மாகச் சுடர்தலால்—தத்தம்
சொருபத்தை யன்றித் துருவிப் பெறமற்
றொருவத்து வில்லை யுணர்.

## 194. சொருப அறிவு

1114. மூலமாப் பொங்கும் முழுமுதலாந் தன்சொருப
வாலறிவே வாழ்க்கை வரம்பாகும்—வாலறிவே
பேதமற்ற சுத்தப் பிரம்மானு பூதிவளர்
நீதமா முண்மை நிறைவு.

1115. புத்தியு டாழ்ந்தடைசற் போதமாந் தன்சொருப
வித்தையே மெய்ஞ்ஞான வித்தையன்றி—மத்தமனக்
கற்பனையாம் பேதக் கறைசேர் பிறவனைத்தும்
சொப்பனமா மாயைத் துயக்கு.

1116. நானற் றொளிர்சொருப ஞானமே சுத்தபர
மோனத் துரியபத முந்தியாய்—வானொக்கக்
கட்டுப்பா டற்றவருட் கைவல் லியமாக
முட்டுப்பா டற்றொளிரு மொய்ம்பு.

1117. ஆனந்த மான வருள்வடிவச் சிற்பரமா
மோனந் தருசொருப மூதறிவு—நானுடலென்
றுந்து மகந்தை யுணர்வொழிவா லுட்டறிவாந்
தொந்தபந்த மற்றுந் தொலைவு

1118. உத்தமசற் போத வுணர்ச்சிமிக் கூர்சொருப
வித்தகமா முத்திக்கு வித்தாகும்—சுத்தவருட்
சைதன் னியமான சாட்சியால் வீழ்ச்சியாம்
பொய்துன்று மாயைப் புலம்.

1119. இகந்தொழிந்து தன்னைமற் றீன வுடலை
முகந்துநா னென்னு முனைப்பால்—அகந்தை
வெறிகொண் டவரை விழுங்கு மிறப்புக்
கறிவன்றி யில்லை யரண்.

1120. இங்கங் கெனுமெல்லை யெங்கும் பரந்தொன்றாந்
தங்கு சொருபத்தைத் தன்னகத்தே—துங்கவருட்
சோதியாம் போதத் துணையா லறிந்தவுயிர்
பீதியில்கம் பீரம் பெறும்.

## 195 சொரூப உணர்வு

1121. ஒப்பிலியுந் தன்னி லுயர்ந்ததுமற் றின்மை
பிரம்ம சொரூபப் பிரஞ்ஞை—இரம்மியமா
மந்தவருட் பான்மை யகத்திற் பொருந்தலாற்
றெந்தமறப் பேருந் தொலைந்து.

1122. கட்டற் றொளிர்சொருபக் கைவல்யக் காட்சியே
மட்டற்ற சாந்திசேர் மௌனபதம்—துட்டமனப்
பட்டியகங் காரமறப் பட்டென்று வெட்டுசிவப்
பட்டயவெங் கூர்வாட் படை.

1123. நீந்த லரிதாக நீடு மநாதியா
மாந்தருக்குண் டான மயற்பிறவி—சாந்தப்
பிரம்ம சொரூபப் பிரஞ்ஞையா லன்றி
யொரிம்மியு மோயா துளத்து.

## 196. சொரூப ஒளி

1124. மூலவருட் சோதி முகம்பொலியக் கண்டவரே
காலபயப் பீடையறக் காண்குறுவார்—மூலவருட்
சோதியே தென்னிற் *சுடரொளியாந் தன்சொருப
நீதிசே ருண்மை நிலை.

* சுடரொளியாந்தன் சொருபம் - ஒளிகளுக்கெல்லா மொளியான சுத்த சைதன்ய சொரூபம்; அதற் குதாரணமாக 'ஒளியுனக்கேது' என்னும் பகவான் பாட்டை ஆராய்ந்து காண்க.

1125. அற்றமற நோக்கி யறிந்தா லகத்தூடு
மற்றோ ரொளியில்லை மன்னுயிர்க்கு—வெற்ற
வெளியாக வுள்ள விசுத்த சொரூப
வொளிதானே யுண்மை யொளி.

## 197. சொரூப கங்கை

1126. அருட்பர மானஞா னனந்த கங்கை
சுரப்பது மோன சொரூபம்—மருட்புலமே
சுட்டுமுனைப் பற்ற சொரூபவருட் காட்சிசேர்
நிட்டையுறப் பாயு நிறைந்து

## 198. சொரூபக் காட்சி

1127. காணுமதெல் லாஞ்சிற் கனசொருபக் காட்சியாப்
பூணுமனங் காணப் புலனில்லை—தாணுவாத்
துன்றுபரஞ் சோதி சொரூப விலாசமாய்
மன்றவெலா மோர்தன் மயம்.

1128. காண்பா னதுசொருபக் காட்சியே கற்பனைதீர்
மாண்பான ஞான மகத்துவங்காண்—விண்பாவ
வில்லங்க மான வினைப்பாசச் சுட்டறிவை
யுல்லங் கனஞ்செய் யுணர்வு.

1129. சுத்தவகத் நாடே சுடர்சொருபக் காட்சியாற்
பொய்த்தொழியக் கள்ளமனப் புன்கலக்கம்— [சித்தநிலைத்
தத்தகநிற் கின்றஞா னுபவத் தாலகந்தை
செத்தொழியத் துன்றுஞ் சிவம்.

1130. விளங்கும் பரத்தில் வியாமோகச் சிந்தக்
களங்கமறக் காண்சொருபக் காட்சி—வளங்குலவு
வித்தகமா மோன விழுப்பதத்தில் வீதலே
சித்தமலஞ் சேர்ந்த செருக்கு.

1131. மாயப் புணர்ப்பான வஞ்சப் புலவாழ்வில்
வாயைப் பிளக்கு மயக்கமறத்—தோயக்
கடவதாந் தன்சொருபக் காட்சியே யுண்மைக்
கடவுட் பரமாங் கதி.

1132. பீதிசேர் பேதமனப் பேதைமைமுற் றக்கெடுக்கும்
சோதிசேர் ஞான சொருபமெனக்—காதியா
நின்றதன்மெய்க் காட்சியந்த நேயமொடு ஞாதுருவை
யொன்றுபட வாக்கிற் றுளத்து.

1133. துலக்க முறு முண்மைத் துரிய வடிவே
கலக்க மலக்கமற்ற காட்சி—இலக்கமுறு
மவ்வியலே முற்ற வதீதமாந் தன்சொருபச்
செவ்வி நிருவிகற்பச் சீர்.

1134. மெய்ஞ்ஞானக் கண்ணு விளங்கு சொருபணைமற்
றெஞ்ஞானத் தான்மற் றெவர்காண்பார்— [மெய்ஞ்ஞானக்
காட்சியகங் காரக் கருத்தற் றெளிர்சொருப
மாட்சியா மௌன மயம்.

## 203. சொரூப தத்துவம்

1141. மிகத்தெளிவா மோன வெறுவெளியாஞ் சீர்மை
அகத்தியல்பென் றுய்வ ரறிந்தோர்—அகத்துறவா
வுள்ளுவர் சான்றோ ருடலையே பற்றுமகக்
கள்ளமற வாழுங் கருத்து.

அகத்தியல்பு - சொரூபவியல்பு, உடலையே பற்று மகக் கள்ளம் - உடலையே சொரூபமாகப் பற்றும் அகந்தை மயக்கம்.

1142. பற்பலவா ழப்புமயும் பாகமிலா முற்றமுழுச்
சிற்பரமா மோனச் சிவசொருபம்—தற்பரமா
மந்தப் பதமே யகில வுயிர்த்தொகைக்கும்
சொந்தசொரு பத்தத் துவம்.

1143. ஆன்ம சொரூப வருட்பர லிங்கமே
தான்மகிழ்ந்து பூசிக்கத் தக்கதாம்—ஊன்மயல்சேர்
கள்ள வகந்தைக் கலக்கமறத் தானதுவா
வுள்ளவுணர் வேபூ சனை.

1144. உள்ளே வெளியா வொளிர்சொருப மோனவருள்
வெள்ளமே வாழ்வா விளங்கலாற்—கள்ளமனத்
தாபக் கலக்கச் சதிசேர்சிந் தாகுலந்தீர்
சோபனமா மெய்த்தத் துவம்.

1145. ஆனி யிலாத வதிட்டான வுண்மையா
நானியல் கின்றமெய்ஞ் ஞானமே—ஊன
மயல்வாழ் வுருவா(ம்) மரணப் பிழைதீர்
சுயமெய் யமுதத் துவம்.

1146. தன்னையே பற்றித் ததாகார நிஷ்டையொளி
மன்னியே நிற்கு மனங்காண—அன்னியமா
வொன்றுமே யில்லை யுபாதித் தொடர்பற்று
மன்ற விருப்பதுதன் மாண்பு.

## 204. சொரூபப் பார்வை

1147. ஆன்ம சொரூப வருட்சிற் பரவெளியாத்
தான்மருவு பார்வையே தத்துவமாம்—ஊன
முனைப்பற் றொளிர்சொருப மோனவியல் வாழ்வே
நினைப்பற்ற வுண்மை நிலை.

## 205. சொரூப நிலை

1148. ஊனமில்வாழ் வாகவொளி ருண்மைநிலை யுள்ள [லறத்
தானதுவா மோனந் தழைந்திருந்தல்—வானமாப்
பொங்கு மகண்டபரி பூரணமாஞ் சிற்பரமே
சங்கையிலாத் தன்சொருபந் தான்.

## 206. சொரூப மாட்சி

1149. அதன்பெருமை யாரே யறிந்துரைக்க வல்லார்!
அதன்சொருப மான வருளால்—அதுவகமேன்
றென்று வியைந்த வுளத்தா டனுபவமா
நின்றொளிர்சற் போத நிலை.

1150. ஊக்கு(ம்) முனைப்பற் றொழியவருட் கேவலமாத்
தாக்குமதி சாந்தசிவத் தன்மையால்—யார்க்கும்
இனைத்தென் றியம்ப வியலா தியல்பா
மனத்தா டொளிர்சொருப் வாழ்வு.

குறிப்பு :—வாழ்வு இயம்ப இயலாது என முடிக்க.

## 207 சொரூபானுபவம்

1151. மோனந் திளைத்தலே முத்திப் பரசொரு
பானந்த மான வனுபவத்துள்—நானென்ற
மோகமுனைப் பாலே முயங்கும்பல் பேதசுக
போகங்க ளெல்லாம் * புகும்.

* புகுதல் - அகப்படுதல், உள்ளடங்கல்.

1152. புத்தியா லாய்ந்து பொருந்துசொரு பானுபவத்
தத்தியா சஞ்சே ரனர்த்தமறும்—மித்தையாச்
சேர்ந்தவகங் காரமயற் சிச்சடம்பே தித்தலால்
ஆர்ந்தவருட் சிற்பரமா வார்.

1153. சுவத்தமா வுள்ள சொருபானு பூதி
அவத்தைகளுக் கெல்லா மதீதம்—சிவத்திற்
கரைந்த மனத்திற் கலாதீத மாகப்
பரந்த சொருபம் பரம்.

1154. தானே சிவமாகத் தங்குதடை யற்றவருள்
வானு வளர்சொருப வைபவத்தில்—ஏனே
மயல்சே ரகந்தை மனமாதி யூன
வியல்கெட் டொழியு முளத்து.

1155. சுஜாதமாத் தன்சொருப சோதனையிற் றுன்று
நிஜானுபவ முண்மை நிறைவாம்—அஜாதமா
மான்ம சொரூபமே யான்ற வனுபவமாத்
தான்மருவத் தக்கது காண்.

1156. சித்தக் கலக்கமாஞ் சிவபோ தப்பதைப்பற்
றெத்தொழுகும் மோன வுணர்வொளியாற்—புத்த
பேரின்ப மாகப் பிறங்குசொரு பானுபவத் [முதப்
தோர்துன்ப மில்லை யுயிர்க்கு.

1157. உன்னலரி தாக வொளிசொரு பானுபவத்
தென்னதியா னென்ன வெதுவுமில்லை—தன்னதியல்
எல்லாமா யல்லதுமா யின்பவருட் கேவலமாய்ப்
புல்லுவதாம் போதப் பொருள்.

## 208. சொரூப அடைவு

1158. பொய்யா மகந்தையறப் போக்கலே பொங்குசிவ
மெய்யான தன்சொருபம் மேவலென்பர்—மெய்யாக
வுள்ளதனைத் தோன்ற தொளித்துக் கலங்குவது
கள்ளவகங் காரக் கருத்து.

1159. பற்றிறைப் பற்றுவது பாழ்ங்கலக்கம் பற்றுநசை
யெற்றினுற் சேர்வதுபே ரின்பமயம்—வெற்றிசே
ரின்பமய மாக விரண்டற்ற தன்னுருவே
யன்புமய மான வடைவு.

1160. வித்தகமா மோனம் விளைந்தா லொருவற்குப்
புத்தகஞா னத்தாற் பொருளில்லை—மெய்த்தகவா
மோனுனு பூதி முழுமுதலாந் தற்பரமே
தானை தன்சொருபச் சார்பு.

1161. பரமான வுண்மைநிலை பற்றல் சொரூபத்
திரவுணர்வா மோனநிலை சேர்தல்—பிரமாதக்
கள்ளமன மன்றியில்லாக் கற்பனைபோற் செம்
வுள்ளதன்றி யில்லை யுணர்வு. [பொருளா

1162. மனந்தன் சொரூபம் மடுத்தாங்கே பேத
வினங்களாங் கற்பனை பேரும்—அனந்த
சுகமான சாந்தி சுரக்குஞ் செழும்பொன்
மகமேரு வாகும் மனம்.

1163. நினைப்பு மறப்பு நிகழ்ச்சியோ டொன்றும்
முனைப்பா மகந்தை முடங்க—நனிப்புற்
றதன்பிறப்பெங் கென்றுய்ந் தறிந்தடங்கி லுள்ளத்
ததனிறப்பா லாந்தன் னடைவு.

**குறிப்பு :—நினைப்பு மறப்புக்களின் நிகழ்ச்சி.**

1164. மருட்பா ழகந்தைமனம் மாய்தலே சுத்த
வருட்பூ ரணத்தை யடைதல்—விருப்பூ
ரருட்பூ ரணமேசுத் தான்ம சொரூபம்
செருப்பூசல் சித்தச் செயல்.

1165. ஓரப் படாத வொருமைசே ருள்ளுணர்வாந்
தேரத் திகழ்சொருப சித்தியே—சாரக்
கடவதா முண்மைக் கடவுட்கை வல்யம்
படர்விவித சித்திமயற் பால்.

1166. சொப்பனம்போ லந்தரமாத் தோன்றி மறையுமனக்
கற்பனையே யாகக் கழன்றொழிக—தற்பரமாய்த்
தான்மனோ தீதமாத் தங்கும் பிரம்மசொரூ
பான்மலா பத்துக் கயல்.

1167. ஒன்றான வுண்மையே யுள்ளந் தொறுமுணர்வாத்
தோன்றுதொட் டுள்ள சொரூபமாம்—மன்றநேர்
நித்தசித்த மாக நிகழ்வதனைத் துன்றுவது
சித்த மயக்கந் தெளிவு.

1168. சார்ந்தொளிரப் பெற்றுலே தன்சொருபஞ் சித்தத்திற்
பேர்ந்தொழியும் மோகவகப் பேயாட்டம்—ஆர்ந்
மோனனு பூதி முகந்து தெளிந்தவருள் [தபர
வானு வழங்கும் மனம்.

1169. தன்னிழப்பா மோனத் ததாகார நிஷ்டையால்
அன்னியமொன் றின்றி யகண்டமா—மன்னியசிற்
பார சொருபப் பரவெளியாந் தன்னியலைச்
சோலே முத்திச் சிறப்பு.

## 209. சொரூப வாழ்வு

1170. மத்தவகங் கார மணக்கலக்க மற்றியல்சச்
சித்தகமா நீடுந் திறத்தாலே—சுத்த
வறிவான வாழ்வே யருட்பெருவாழ் வாக
நிறைவுறும்பே ரின்ப நிலை.

குறிப்பு :—சித்தே அகமாக நீடுந் திறத்தால் என
ஏகாரம் பிரித்துக் கூட்டுக.

1171. திரோதமகல் சுத்தவருட் சிற்பரமாய்ச் சுட்டத்
துரிகமாய்த் தான்றனைத் துன்றும்—சொருப
வியல்வாழ்வி லன்றிமனம் யானெனதென் றேங்கும்
மயல்வாழ்வி லில்லை மகிழ்.

1172. சொத்தாக வுள்ள சொரூபவருட் காட்சியால்
ஒத்தா ரிலாத வொருமையிலே—முத்தாபம்
பொய்த்தோடப் பொங்குபரி பூரணசாந் தானுபவ
சுத்தோக வாழ்வே சுகம்.

1173. தள்ளவோ கொள்ளவோ சற்றும் படாதவருள்
வெள்ளமா மோன வெளியாக—உள்ளத்
தொளிர்சொருப வாழ்வே யுபசாந்த முத்தித்
தெளிவியல்பே ரின்பத் திறன்.

## 210. சொரூப விழிப்பு

1174. ஆன்ற சொரூபஞா னனுபவ மாட்சியிலே
ரூன்றலூற்ற வுண்மை யுரவோர்க்குத்—தோன்று
சுவர்க்க நரக சுகதுக்க மெல்லாம்
அவக்கனு மோக மறி.

## 211. அந்தமிலாக் கண்

1175. ஏதமுறும் பேத விகல்சே ரகர்தைமதிக்
கேதமகல் சுத்தவருட் கேவலமாய்ப்—போத
சொரூபவொளி சேர்ந்த தூரியமா யோன
விரூபவெளி தானே விழி.

## 212. அத்துவிதம்

(கொச்சகக் கலிப்பா)

1176. அருட்சிற் பரத்தை யறிந்தவறி வந்த
வருட்சிற் பரவெளியோ டைக்கியமா மன்றி
அருட்சிற் பரத்தின்வே றுகவொண் ணு தென்ருல்
அருட்சிற் பரத்தியல்சுத் தாத்துவித மன்றே.

1177. உணரப் படாததொன் றுண்டென்னில் அஃதவ்
வுணர்வுருவே யாவொளிர்தன் னத்துவித வுண்மை;
புணர்துவித மோகப் புலப்பாட் *டறிவா
வணவுவதெல் லாமசத்தாம் என்பரறிந் தோரே.

*அறிவு-அறிபடு பொருள்.

1178. மயற்படுதே கோகம் மதியாலே யன்றி
யயற்படயா தொன்றுமே யில்லை; அதீத
வியற்பரமா வுள்ளத் திலகறிவு தானே
வியப்புறுமா தோன்று விகற்ப மெலாமே.

1179. துன்ருது மற்ருேர தொடர்புதன் போதத்தில்
வென்ரு லியன்ருெளிரும் வித்தகமெய்த் தத்துவச் [சீர்;
ஒன்ருன தன்சொருப வுண்மையில்வே ருென்று [மின்மை
நன்ரு விளங்கிலன்றி ஞானந் தெளிந்ததன்றே.

1180. வேற்றுமை யில்லா வெளியான தன்னுண்மை
தோற்றுமோ தன்னிற் றுவிதம்போல்? யானெனும்
மூற்றை யகந்தை யொடுங்கவுற்ரு லுள்ளத்தில் [பா
வேற்றுமையின் ருக விளங்குமது தான்ருனே.

## 213. அத்துவிதப் பூரணம்

(வெண்பா)

1181. சதிராகத் தன்சொருபந் தான்விளங்கும் மற்றென்
றெதிராகச் சுட்டுமுனைப் பிற்றல்—அதிராப்
பொதுவெளியாந் தன்சொருபப் பூரணசற் போதத்
திதமகமென் றில்லை யிரண்டு.

1182. உள்ளதே தானு வொளிர்சலா லெல்லாமே
தெள்ளிதாத் தன்மயமாத் தேறலாற்—கள்ளமனக்
கட்டற் றெளிர்சொருபக் காட்சியிலே தன்னை
பெட்டொழுக வில்லை பிறிது. [யன்றிப்

## 214. ஏகமேவ அத்வதீயம்

1183. எல்லாமா வுள்ளதுமற் றேக சோரூபமே
நல்லா ரறிவரந்த ஞானவுண்மை—பொல்லாத
சித்தக் கலக்கமறிற் சேர்ந்தொளிருஞ் சிற்பரமா
வத்துவிதக் காட்சி யகத்து.

1184. வேற்றுப் பரிசில்லா மெய்ப்பொருளாந் தன்
[சொருபத்
தேற்றத்துக் கான திறந்தானும்—போற்றுவதோ
ரேகசச் சித்தா மிவனே யெனிற்பிறரா
லாகக் கடவதுதான் யாது.

## 215. சக்தன் ஒன்றே

1185. சத்தித் துணையாலே சாரக் கடவதொரு
சத்தனுந் தன்சொருபத் தற்பரமே—உய்த்தறியிற்
சத்தியொடு சத்த னருளும் பொருளுமா
வொத்தியல்ப வொன்று வுளத்து.

1186. அனைத்துவித மான வனைத்துமே யன்றித்
தனித்த பராற்பரமுந் தானே—மனைத்தே
துனவேது மற்றோர் துணிபுமெய்ஞ் ஞான
வனுபூதி யுண்மை யது.

## 216. துவிதம் பொய்

1187. இரண்டுபடற் கேதுநா னென்றெழுயோ ரெண்ணம
மருண்டவகங் காரமனம் மாயத்—தெருண்டவியற்
சித்தோப சாந்தித் தெளிவான கேவலத்து
டெத்தாலே யாருக் கிரண்டு.

## 217. அத்துவிதத்தில் அச்சமின்மை

1188. ஆதிதெய்வச் சிற்சொருப வத்துவிதத் தன்மையாற்
பீதியெய்தச் சற்றும் பிறிதில்லை—பீதியெய்தக்
காரணமா மோகவகங் காரமறக் கைவல்யப்
பூரணமாம் போதப் புலம்.

## 218. அரண்

1189. ஊன்றுமதிஷ் டான வுறுதியா முண்மையுயிர்க்
கான்றோர் பலர்பா லறிந்திடினும்—தோன்றாத்
துணையான மோன சொருபமே வாழ்வுக்
கணையான ஞான வரண்.

குறிப்பு:—உயிருக் குறுதியாக வூன்றுகின்ற அதிஷ்
டான வுண்மை என்க.

## 219. புகல்

(குறள்)

1190. தற்பரமா வுள்ளசிவ தத்துவஞா னனுபவப்
பொற்பதமே யுண்மைப் புகல்.

1191. சரணாக வுள்ளவருட் சைதன் னியமே
அரணாக வார்ந்த தகத்து.

(வெண்பா)

1192. ஆண்டவன்பா லன்றியுயிர்க் காதார வாழ்வுமற்
றியாண்டுமே காண்டலரி தென்பரால்-ஆண்டவனே
தாரகமாப் பற்றிச் சரண்புக் கவனடியில்
வாரமிகப் பூண்க மகிழ்ந்து.

1193. அனந்த சிவபதத்தை யாய்ந்தாய்ந்து நீள
நினைந்து நினைந்துருகி நெஞ்சில்—தணைந்தவருள்
வேட்கைசேர் மெய்யன்பர் வேணவாப் பூர்த்தி
பூட்கையான் பாதம் புகல். [செயும்

1194. துன்பமெனுஞ் சொல்லே தொழுவார் மறந்தொழியத்
தன்பார்வை பாலிக்குந் தண்ணளியால்—அன்பால்
வழிபடுவார்க் கின்பவருள் வாழ்வான சாந்தி
பொழிவுடையான் பாதம் புகல்.

தன்பார்வை – சிவஞானம்.

1195. பூரண சித்தப் புமானுங் குருரமணன்
பாரமெய்ஞ் ஞானவருட் பாதநிழல்—சாரலுறில்
சித்தக் கலக்கமாச் சேர்பிறவித் துன்பவெயில்
பொய்த்தொழியும் புத்திப் புலத்து.

1196. அவச்செயலா நீங்க வகந்தைசேர் கர்த்தத்
துவச்செயலை முற்றத் துறந்து—சிவச்செம்
பொருளே பொருளாகப் போற்றுவார்க் கான்ற
வருளே தவறு வரண்.

1197. அகத்தகமாத் தூன்று மறிவாய வுண்மை
மகத்தான தன்சொருப மாட்சி—தகத்தேர்ந்
ததன்மயமா நிற்குநிட் டானுபவ வாழ்வே
புதன்மருவு முண்மைப் புகல்

220 சதம்

1198. ஆன்ம சொருப வறிவுத் தெளிவாகத்
தான்மருவு சாந்தி சதமன்றி—ஊன
மலேவுசேர் மோக மனமையமா மற்றெந்
நிலையிலுமே யில்லை நிலை.

1199. ஆன்ம சொருபமா வாண்டவன்பாற் பேரின்பத்
தேன்மருவு சாந்தி திளைத்தலால்—ஊன்மயல்சேர்
புன்கலக்க மானமணப் புர்திக் கிலேசமறத்
தங்குமியல் வாழ்வே சதம்.

## 221. துணை

1200. அன்புபா ராட்டு மகங்குளிரத் தண்ணருட்பே
ரின்பநீ ராட்டு மியற்கையால்—துன்பமனத்
தாடமகன் றன்றோர் சதாபத்தி யாற்பரவு
சோபனமாம் பாதந் துணை.

1201. தானேதா னைபர தத்துவத்தைத் தன்னின்மற்
றேனோ ரறியவொண் ணு வேகனாய்—நானனென்
றுன்றசிவ மாக வகத்துட் சுடர்தருமெய்த்
தோன்றலருட் பாதந் துணை.

## 222. சரண்

1202. என்னு மனத்தா லியங்குநான் யாரேயென்
றெண்ணுணுகித் தன்னை யுசாவுணர்வால்—எண்ணி
[யெண்ணி
நெக்குருகு வார்க்கு நிலைவிளக்கா நெஞ்சிலொளிர்
சற்குருதன் பாதம் சரண்.

1203. கருவா தனையுழக்கக் காரணமாய் நானென்
றுருவா மயல்சே ருயிர்க்குக்—குருரமணன்
பூரணசற் போதப் பொலிவுசால் பொற்கழலே
தாரகமா முண்மைச் சரண்.

1204 கற்றமுற்றுங் கல்லாமை யாகக் கழியமனம்
பற்றுமுற்றும் விட்டுப் பரமாகச்—சுற்றுமுற்றும்
மோக்கத் தொளிசூழ மோனவருட் கேவலமாத்
தாக்கற் றொளிர்தாள் சரண்.

1205. ஜீவநதி யான சிவானந்த வெள்ளத்தே
ஜீவனது தாபத் திறந்தணியப்—பாவனமெய்ஞ்
ஞானநீ ராட்டி நலங்கிளரக் கூட்டலுறுந்
தானலா தில்லை சரண்.

1206. நெஞ்சமொன்றித் தன்னை நினைந்து சதாகதியாத்
தஞ்சமுற்று ருள்ளந் தளராது—தன்சொரூபப்
பூரணஞா னனுபவம் பொங்கலுறத் தங்குசிவ
தாரகமாம் பாதஞ் சரண்.

1207. மயக்கமாம் பாச வலைப்பட்டு வாடு
முயிர்க்குய்தி யாக வுளத்தே—வியக்குஞ்
சரணு கதியாத் தழைத்தவருட் சேமச்
சரணா விந்தஞ் சரண்.

1208. அற்றமா மோக வகந்தைமனச் சேட்டையறக்
கற்றொழுகு மாற்றாற் கருத்தன்பால்—முற்ற
விணக்கமுற்று வுன்னிஷ்ட மென்னிஷ்ட மென்றே
யுணக்கலற்று வாழு முயிர்.

## 223. சரணுகதி

1209. நிரந்தர மாக நிகழுந் தியான
துரந்தரர் சுட்டறிவு கெட்டோர்—இரந்திரந்து
யாசிக்கத் தன்னி னிரண்டாவ தொன்றறியார்
ஈசற்குத் தம்மையிழந் தார்.

## 224. அன்பு

(குறள்)

1210. அன்புசெய்யச் செய்யவகத் தாரா வமுதமா
வின்பமெழப் பொங்கு மிறை.

1211. இன்புணர்ச்சி சற்று மியல்வரிது சுத்தமெய்
யன்புணர்ச்சி யற்ற வகத்து.

(வெண்பா)

1212. சிவமயமா முற்றத் தெளிந்தமெய் யன்பே
தவமயமா நீடுநிஜ சாந்தி—பவமரண
மோகக் கலக்கமறு முத்திப் பரவெளியே
யாகக் கிளருமவ் வன்பு.

1213. நினைப்பற் றொளிர்சொருப நேயமே சற்றும்
முனைப்பற்ற சுத்தபர மோனம்—வினைப்பற்று
முற்றுமறக் கெட்டு முழுமுதலே தானுகப்
பற்றற் றொளிர்சொருபப் பற்று.

1214. மிக்க வெளிதா விளங்குமுயிர்க் கின்பநிலை
தொக்கமெய் யன்பு துலங்கலுறின்—மிக்க
வருட்கடலாம் பாதத் தகங்குழையிற் காணும்
அருக்கனொளி போலமெய் யன்பு.

1215. புனைத்த வகந்தையா மோகமுதல் கெட்டுத்
தினைத்தலுறு சாந்தித் திறத்தால்-உளத்திற்
கெழுமலுறு மன்புக் கிளர்வளவே மோன
முழுமுதலை யெண்ணும் முறை

1216. மெய்யன் பருட்பதத்து மேவினு ருள்ளத்து
மெய்யின்ப ஞானவொளி வீசுமால்—உய்ய
நெருப்பிலுற்ற வெண்ணெயா நெஞ்சுருகும்
யருட்பதத்து மெய்யன் பறி. [பான்மை

1217. அன்பு விளைந்தா லருள்விளைந்து மெய்ஞ்ஞான
வின்பம் விளையு மிதயத்தே—இன்பதுன்பச்
சிந்தையறத் தீர்ந்தே சிவமயமா மோனநிலை
வந்தெய்து மன்பர் மனத்து.

1218. அன்பிலை தன்னை யறக்கரைத்த வாருயிர்பே
ரின்பமயமாக வியல்வதால்—அன்பே
சிவசொருப மானவருட் சிற்பரமாத் தேறல்
சிவசமய மாட்சித் திறன்.

1219. அன்புருவா வுள்ளத் தருள்விளங்கப் பெற்றுலே
துன்பமில்பே ரின்பந் துலங்குமென்பர்—நம்ப
னருளுந் தமதுமெய் யன்புமொன்றே யாகத்
தெருளுறச்சித் தந்தெளிந் தோர்.

1220. அன்புவண்ணந் தானே யருள்வண்ண மாகவெனக்
கின்பவண்ணம் பொங்கு மிதயத்தே—தன்பதத்து
வண்ணமா மோனம் மகத்தா முபசாந்த
வண்ணமா வெங்கும் மலர்ந்து.

1221. அன்புமய மாக வணைந்தசிவன் மோனப்பே
ரின்பமய மாகு மிதயத்தே—துன்றுமெய்
யின்பமோ டன்பென் றிரண்டுமே யொன்றை
றென்றும் பிரியா வினை. [விட்டொன்

## 225. ஆராதனை

(குறள்)

1222. செறிவிற் பிறந்த சிவானந்த மோன
வறிவேநல் லாரா தனை.

1223. ஆரா தனையா வகந்துலங்கிற் றண்டவன்பாற்
பேராத வார்வப் பெருக்கு.

## 226 துதித்தல்

(வெண்பா)

1224. சாந்தி யுணர்வே சதாகால பூஜையா
வாய்ந்தொளிரு முண்மை வழிபாடு—தேர்ந்தவருட்
பத்தியா மோனப் பதத்திற் கிளர்ந்தவொளித்
துத்தியமோர் தெய்விகமெய்த் தொண்டு.

## 227. பிரார்த்தனை

1225. வியத்தற் கரிய விடமச் செயலிற்
பயிற்சிமிக வுள்ள பரமா—மயர்த்தனத்திற்
கட்டுண் டழுங்கிக் கலங்குமுயிர்க் குன்கருணை
சட்டென் றருளாய் சரண்.

1226. வஞ்சவே தாள வசப்பட்ட வென்னுயிரைச்
செஞ்செவே யாண்டவருட் சீமானே—நெஞ்சிலே
அந்தவே தாள வகந்தையினி யெக்காலும்
வந்தடையா தாங்கேநீ வாழ்.

1227. பொருளாக வுள்ளபரி பூரணமா முன்னை
மருளனே னெங்ஙன் மடுப்பேன்—இருள்சேர்
அகந்தைவடி வானவென் றுணைவம்போய் நீயாத்
திகழ்ந்திடவென் னுள்ளே திகழ்.

1228. நின்னருளை யன்றியென் னெஞ்சிற் பிறிதொன்றை
மன்னுபொரு ளாக மதிக்கிலேன்—துன்னலருஞ்
சிற்பரமா நின்றன் சிவசொருபத் தென்னெஞ்சு
தற்பரமா நிற்க வருள்.

1229. உயிர்த்தலைவ னான வொருத்தனை முன்னை
யயர்த்த வுடலகந்தை யாலே—வியர்த்து
விதந்துநான் பற்பல விடயமாச் சோர்ந்தேன்
அதெந்துவென் றன்பா லருள்.

1230. பாவநா சஞ்செய் பரமா குருரமண
தேவநா னேநமற்ற தீனனேன்—ஆர்வமாப்
பொன்னடியே யுண்மைப் புகலாகப் பற்றினேன்
உன்னருள்வாழ் வன்பா லுதவு.

1231. பித்தனே போலப் பிறரை மயக்கலுற்ற
வெத்தனே நானே ரெளியனேன்—அத்தனை
முன்னை யடைக்கலமா வுற்றேன் சொருபவொளி
யென்னுள் வழங்கா யினிது

1232. கள்ள நா னென்றென் கருத்தே யெனைக்கடியும்
எள்ளிநீ யென்னை யிகழாதே—தெள்ளியமெய்ஞ்
ஞானவ நள் வள்ளியாய் நாயமே னுன்சொருப
ஞானவருள் வாழ்க்கைபெற நல்கு.

1233. அருட்பதத்துக் கேநா னடிமைகண்டாய் மாய
மருட்பழிசேர் பொய்யகந்தை மாற்றாய்—பொருட்
[புகழ்சே
ராண்டவா நின்சொருப மாமெய் யறிவொளியைத்
தூண்டவா வென்பாற் றொடர்ந்து.

1234. உள்ளவறி வாகவுளத் துள்ளவா நின்சொருப
வெள்ளவொளி யாக வெளிப்படாய்—கள்ளமறு
நின்சொருபக் காட்சி நிரம்பவொரு தன்மயமா
நெஞ்சிலுற நின்றாள் சரண்.

1235. வஞ்சப் புலக்கலக்க வாழ்வின்கண் ணான்மயங்கித்
துஞ்சிற் பரங்கருணைத் தோன்றலே—விஞ்சையருட்
புண்ணியஞ்சேர் நின்மெய்ப் புகழ்க்குக் களங்க
நுண்ணியாய் நுன்னருட் கண்ணேக்கு. [மன்றே

1236. மெய்ஞ்ஞானத் திட்பமற வீணனே ணவத்தாற்
பொய்ஞ்ஞால வாழ்விற் புலம்புற்றேன்—மெய்ஞ்ஞான
விண்ணவா நின்னடியை மேவினேன் வான்கரு
கண்ணு லெணையருளிக் காண். [ணைக்

1237. கோல மணியே குருமணியே சாந்தகுண
சீல மணியே சிவமணியே—வாலறிவின்
விண்மணியே நின்றிருமுன் மேவினே னுன்னரு
கண்மணியே மோகமறக் காண். [ளாற்

1238. உன்ன ருளை யல்லாலுறு துணைமற் றில்லையெனக்
கின்னருள்பா லித்தசி ரெம்பெருமான்—வன்னவருட்
கண்ணு ரமுதக் களிபெருக்கி ஞானவருள்
விண்ணு விளங்காய் விரிந்து.

1239. குருமணியா வென்னைக் குறிக்கொண்ட கோலத்
திருமணியே தெய்வச் சிவமே—பரமெனயான்
உன்பதமே பற்றி யொழுகலுற்றே னுருயிர்க்கு
நின்பதமே கண்டாய் நிலை.

1240. அழிம்பனு மென்னை யருட்குருவாத் தோன்றித்
தொழும்பனு வாண்ட சொருபன்—செழும்பதமே
யாவிக் கமுதமா வல்லும் பகலுநான்
சேவிக்க வேண்டும் தினம்.

1241. மலையான நின்பதத்து மாட்சியில்லே ரூன்றும்
நிலையான நிட்டையே யல்லாற்—றலைவா
உலையா வுதார முடையாய்நான் வேண்டேன்
கலையார வாரக் கடை.

1242. தொழுகுலமாச் சார்ந்தசிறுத் தொண்டனேன்
யழகலவே சற்று மகற்றல்—கழிவுசெய் [றன்னை
தென்னைக் கலங்கவிடா தேமப் பொருர்பதந்து
நன்னயமெய்ஞ் ஞானநிலை நல்கு.

1243. ஒன்றுமெண் ணாத வுரஞ்சான்ற சாந்தியே
என்றுமென் வேணவா வெம்பெருமான்—குன்றம்
[போற்
பொங்கெழில்சே ரந்தவருட் போகமகத் தெய்திடிற்
எங்கெழிலென் ஞாயி றெனக்கு. [பின்

1244. முத்தி கிடக்கநின் மோனவருட் சீபாத
பத்தியென் னுள்ளம் பழுத்தொளிர்க—சித்தியா
வேண்டலது வன்றிமனம் மெய்ம்மறந்து வேண
பூண்டநா னல்லேன் புறத்து. [வாப்

1245. ஆண்டகுரு வான வருட்பே ரடிகளுக்குப்
பூண்ட வடிமைத் திறம்பொங்க—மாண்டமனப்
பான்மையாம் பத்தி பயின்றெழுகுஞ் சன்மமே
நான்மெய்யா வேண்டு நலன்.

1246. அன்பா லடியேனை யாண்டா யடிநாயேன்
வன்பாறை யான மனங்கசிந்தே—இன்பாக
வம்புவி லாலிபோ லன்பாஞ் சிவபதத்தவ்
வன்புமய மாக வருள்.

1247. அறியாதே னல்லே னறிந்தேனு மல்லேன்
செறியாத புன்மனத்துத் தீயேன்—குறியாக
நின்னையே நம்பினேன் ஞேயமளித் துன்னருளால்
என்னைநின் றுட்கீ ழிருத்து.

1248. கண்ணப்ப ரன்பிற் கலப்பிப்பா யென்னினல்லால்
விண்ணப்பம் மெய்யப்பற் கென்கடவேன்—
[வண்ணப்
பரமேச் சுரரமணன் பார்படர்மெய்ப் பத்தி
வரமேநான் வேண்டு வது.

1249. நெஞ்சங் குளிர்சந் நிதிப்பெருமை நித்தநித்தம்
கொஞ்சுங் குலாவொளிரக் கூடுவதாய்த்—தஞ்சமுற்ற
அன்ப ரவாவு மகில நலங்களும்பெற்
றின்புறநான் காண்க வினிது.

1250. பொய்யாப் புகழ்ச்சிசேர் புத்தன் குருரமணன்
மெய்யாம் பதசொரூப விஞ்சையொளி—மைகூ
ரவிச்சை யிருள்செற் றடிய ரகத்தே
சுவச்சமாச் சூழ்க சுபம்.

1251. ஊழைக் கடந்தொளிர்பே ரும்பரான் காரிருளாம்
பாழைக் கடந்த பரஞ்சோதி—வாழைக்
குலம்போலப் பாதக் குடியோமை ஞான
நலம்பெறவே யாழவைப் பான்

1252. அருந்தக் கிடையா வமுதமே யாகப்
பொருந்துந் தியானனு பூதி—திருந்தவே
யுள்ளத்து நாயேற் குவட்டா வருள்விருந்தா
வள்ளற் பிரான்வழங்கு வான்.

1253. ஆண்டா னடியேற் களித்தசிவ ஞானசித்தி
ஈண்டமெய் யன்ப ரெலோரகத்தும்—மூண்டெழ
[மெய்
யார்வமோ டண்ண லருட்பதத்தை வாழ்த்துவேன்
கூர்வதோர் வேணவாக் கொண்டு.

1254. எந்தை ரமணகுரு தந்தை யருணகிரி
விந்தையா முந்தையுள வேற்றுமைபோய்ச்—
[சிந்தைதீர்
என்றன் சொரூபத் திரண்டறவோன் றாயினர்
நின்றொளிர்க வந்த நிலை.

1255. அருள்வைப்பா மோன வகத்தே சிவச்செம்
பொருள்விளங்கத் தேற்றிய சற்போதன்—உருள்
[பெருந்தேர்க்
கச்சாணி போல வடியேன் பெருவாழ்வுக்
கச்சாக நின்றொளிர் வான்.

1256. அறிவு தடுமாறி யைம்புலப்போய் வாழ்வூ
டுறுதிகெட்ட மூட வுயிர்க்குத்—துறவுக்
கெடுத்துக்காட் டான விறைரமணன் சீலம்
மடுத்துக்காப் பாக மனத்து.

## 228. பக்தி—பரபக்தி

(குறள்)

1257. சித்தங் கசிந்து சிவத்தை நினைந்துருகிற்
புத்தமுதாஞ் சிந்தைப் புலம்.

(வெண்பா)

1258. சுத்தவறி வாகத் துலங்கு சொரூபவியற்
பத்தியே நல்ல பரபத்தி—பத்திரசத்
தீம்பாகாத் தித்திக்குஞ் சித்தோப சாந்தவுணர்
வோம்பா யதன்மெய் யுரு.

1259. எண்ணலு மெண்ண மிறந்தொழிவ தன்றிமனத்
தண்ணலருந் தன்மை யளப்பரிதால்—நண்ணுசிவ
ஞானவடி வான பரபத்தி நானெனுமவ்
வூனவுணர் வோய்த வுளத்து.

1260. சித்தத் தொளிபெருகச் சிற்பரத்தைப் பேணலுறும்
பத்தித் தவமே பரமென்பர்—வித்தகமாச்
சித்தத்தே மோனவருட் சிற்பரவாழ் வெய்திவுடன்
முத்தித் துலக்க முறும்.

1261. அறிவு தெளிந்தமெய் யன்புணர்ச்சி ஞான
நிறைவாம் பரபத்தி நீர்மை—அறிவுருவா
முண்மைபற்றி யன்றி யுபாதிபற்றி யன்றந்தத்
திண்மைசேர் பத்தித் திறன்.

1262. ஆண்ட பராற்பரமா மண்ண லருட்பதத்திற்
பூண்டபர பத்திப் பொலிவேகாண்—ஈண்டத்
திளைக்குமெய்ஞ் ஞான சிவானந்த வாழ்வா
முளைக்குமோ னனு பவம்.

1263. உத்தமசற் பத்தி யுணர்வுத் தெளிவான
சுத்தவருட் பார்வைத் துலக்கமே—சித்த
விருத்தியற்ற மோன விளக்கமா மெய்யன்
பருத்தியுற்ற சாந்தி யளைவு.

1264. உணர்ச்சித் தெளிவிலே யூடுருவும் மோனப்
புணர்ச்சியே சுத்தவருட் போகம்—புணர்ச்சிசேர்
சுத்தத் துரிய சொருபானு பூதியுணர்
வுத்தமசற் பத்தி யுறவு.

1265. ஆண்டா னருட்செயலை யாய்ந்தாய்ந் தகங்குழைந்து
பூண்டார்வ வெள்ளமெழப் பொங்குமால்—ஈண்டா
[நின்
றுள்ளமெழப் பொங்கு முணர்வே யுவாமதிபோ
லுள்ளக் கலைப்பொழிக்குங் காண்.

1266. ஆண்டா னருட்பதத்தா டார்வங் கிளர்பத்தி
பூண்டா லொளிவளரும் புந்தியிலே—மூண்ட
வொளியாமவ் வுண்மை யகிலமுமே சுத்த
வெளியாகப் போர்த்து விடும்.

1267. ஆண்டவன்பே ராசை யமுதப் பெருங்கடலாய்
ஈண்டூறப் பெற்ற விதயத்தே—தூண்டுசுடர்
வெள்ளமா மோன வெளியன்றி மற்றனைத்துங்
கள்ளமா மாயுங் கரந்து.

1268. ஊன மயக்கா லுபாதியே நானெனும்பொய்த்
தீன வகந்தையறத் தீர்தலாய்—ஞான
வருட்பரமே டேனு மகத்திலே யாசை
யுருப்பரிதாய் மோனமுண் டாம்.

1269. பத்தி யுணர்ச்சி பழுத்தவுளத் தற்புதசிற்
சத்தியொளி துங்க சமாதியருள்—சுத்த
சிவஞான மோனத் திறத்தா லவத்த
வஞால மோக மறும்.

1270. புத்தக ஞானம் பொருளன்று போதவருட்
சித்தகமே சித்தித் திறனுண்மை—வித்தகசற்
பத்தியுறச் சிந்தை பயிற்றிலருட் சித்தகமா
வொத்தியலு மொன்று வொளிர்ந்து.

1271. முத்தி நெறிக்கண் முளைகின்ற பக்குவர்க்குப்
பத்திமுறை யாற்றப் பயனளிக்கும்—சத்தியருட்
பார்வையான் மோகப் பசுபாசச் சேட்டையற
வூர்வதா முண்மை யொளி.

1272. பக்தியிலே வாழ்க்கை படிந்தால் விசுத்தவருட்
சத்தி நிபாதவொளி சார்தலே—புத்திமிகத்
தெள்ளிதா யுள்ளந் திறந்து சிவானுபவ
மொள்ளிதா யூறும் விதம்.

1273. பத்தி யுணர்ச்சி பழுத்தல் சிவசொருப
சித்தியா மோன சிவானுபவம்—புத்திக்
கலக்க மகன்றவருட் கைவல்ய ஞானத்
துலக்கமார் சாந்தித் துளைவு

1274. கர்த்தனருட் செம்பொற் கழலே கதியாக
நித்தநித்தம் பேணு நியமத்தால்—உத்தமசற்
பத்தியுணர் வுள்ளமுறப் பற்றல் சிவானுபவ
சித்திமுத்தி சேருந் திறன்.

1275. பகவனடிக் கன்பு படைத்தமனம் போத
சுகசொருப வாழ்வு துலங்கும்—ஜகவிடயத்
தூறிக் கிடந்தபா ழூத்தையகப் பற்றுழியத்
தேறித்தன் னுண்மை சிவத்து.

1276. ஆண்டகுரு நாத னருட்பணிக்குத் தேவையா
வேண்டுவதொன் றில்லை விசாரிக்கில்—ஆண்டவன்
சித்த மொருங்கித் திளைக்கும் பரிசுத்த [பாற்
பத்தியொன் றல்லாற் பரிந்து.

குறிப்பு :—பரிந்து திளைக்கும் பத்தி எனக்கூட்டுக.

## 229. ஏகபக்தி

1277. மிகமிக்க சான்றோர் விசைப்பவொரே தெய்வத்
தகமொக்க வாழ்ந்துநிலை யார்ந்தார்—அகமெய்க்
கிளர்ச்சியுற வேண்டிற் கிழமைசே ரொன்றில்
வளர்ச்சியுற வேண்டும் மனம்.

1278. எக்கடவு ளேனுநீ ரேத்தித் தொழுவதுமக்
கக்கடவு ளேமிக் கரும்பரமா—நிர்கமனம்
மற்றவற்றின் *மாற்ற மனப்பான்மை சற்றுமறக்
கற்றெழுகிற் காணுங் கதி.

* மாற்ற மனப்பான்மை - விரோத மனோபாவம்,
வைஷம்ய புத்தி.

1279. சிவத்தையே மிக்கவருட் சீவியமாப் பேணுந்
தவத்திலுயிர்க் கன்பு தழைக்கில்—சுவத்தமா
வுள்ள சொரூபவாழ் வுள்ளுணர்வா லூற்றெடுத்து
வெள்ளமாப் பொங்கும் விசைத்து.

1280. காலதே சாதிமனக் கற்பனைதீர் சிற்பதத்தின்
பாலதே வாழ்க்கையுறும் பாக்கியங்காண்—வாலி
ஏகசிவ பத்தி யிதயமெழல் சுத்தசிவ [தாம்
போகவனு பூதிப் புலன்.

1281. துன்றுபல தெய்வந் தொழூஉ மனத்தோ ரன்னவற்று
ளொன்றிலுந்தம் பத்தி யுரப்படார்—மன்றநுமக்
கிட்டமாய் மிக்க வெதானுமொரே தெய்வத்தோ
டொட்டிலுரஞ் சேரு முணர்வு.

1282. ஒன்றையே யெண்ணு முளத்திலே சுத்தவருள்
வென்றியே யன்றியென்றுந் தோல்வியில்லை—
[என்றியான்
கண்டறிந்த வுண்மைசிவக் காதலர்க்கு நம்பிக்கை
யுண்டுபண்ணு மாக வுளத்து.

## 230. நிரந்தர பக்தி

1283. ஆளுடைய வள்ளலா வாண்டான் குருரமணன்
றாளிடையன் பென்னுளத்தோர் தாரையாய்
[நாளுநறு
நெய்யொழுக்குப் போல நிரந்தரமா நீடலே
உய்திபெறு வாழ்வென் னுயிர்க்கு.

### 231. நேயத்தழுந்தல்

1284. அன்புசிவ மாக வறிந்தொழுகும் மாதவர்பே
ரின்பவருட் செல்வமடைந் திம்மையே—துன்பமயற்
பாசத்தி னீங்கிப் பரபத்தி யிற்கரைந்து
நேசத் தழுந்துவர்தந் நெஞ்சு.

### 232. அன்பால் உருகுதல்

1285. அன்பா லுருகி யலந்துமனங் கண்ணீருங்
கம்பலையு மாகக் கதறினல்—அன்பர்க்
கெளியனு மீச னிதாவென்று தன்மெய்
யொளியினற் காட்டு முரு.

### 233. பக்தியால் விசாரம் எளிது

1286. அழுதழுது நீள வருட்பதத்தை யுள்ளித்
தொழுதெழு நெஞ்சங்கரைந்து தூய்தாய்ப்—பழு
[தறுஞா
ஞன்ம விசார மடைந்துசொரு பானுபவந்
தான்மருவும் மிக்கெளிதிற் றன்.

1287. பத்தியாற் சித்தம் பரிபக் குவமாயின்
வித்தகமெய்ஞ் ஞான விளைவெளிதாய்—நித்தசித்த
மானமோ னங்கூ ரருட்சிற் பரசொருப
வானவொளி சேரும் மனத்து.

### 234. திருவடி

(குறள்)

1288. பெட்டுத் தினைத்தார் பிறவற்றில் வேட்கைதீர்
கட்டிக் கரும்பே கழல்.

1289. கழலிற் பதிந்த கருத்தர் மயக்கச்
சுழலிலொரு காலும் படார்.

(வெண்பா)

1290. ஆண்டவன்பே ரின்ப வருட்சிற் பரநாதன்
மூண்டபரஞ் சோதியா மூத்தப்பன்—காண்டலரும்
போதாந்த மோனப் பொலிவாகப் பொங்குகழல்
வேதாந்த ஞான விளக்கு.

1291. இகத்தாளம் முற்ற விகப்ப வுயிர்க்கு
மகத்தான வாழ்க்கை வழங்கும்—அகத்தே
பவிசார்ந்த மோனப் பரமோப சாந்தித்
தவிசாந் தயாபரன்மெய்த் தாள்.

1292. வளப்பமுற வோம்பும் மகேசனருட் பாதத்
தளப்பரிய சாந்தியே யல்லாற்—களைப்போ
இளைப்போ மனத்துக் கிலாதொழியச் சேர்ந்தார்
திளைப்புறுவர் சாயுச் சியம்.

1293. மொய்ம்புற்ற வாலறிவன் மோனவருட் பாதவொளி
நம்புற்ற செம்மனத்தை நாடுவது—வம்புற்ற
தம்பவழி பாட்டுச் சலவர்தம் பொய்ம்மனத்தை
வம்புறவா நீங்கும் மறுத்து.

## 235. திருவடி தரிசனம்

1294. எண்ணத் தருவதுபே ரின்பமயம் பொங்குசுப
வண்ணப் பதவொளிசேர் வாழ்க்கையே—நண்ணக்
கடவதா மந்தவருட் கைவல்யக் காட்சி
படர்வதே சாந்திப் பதம்.

## 236. திருவடி தியானம்

(குறள்)

1295. ஒன்றுமே யெண்ணா தொழிமனமே; ஒண்ணாதே
லென்று மிறைபதமே யெண்.

1296. பரத்தையே யெண்ணிற் பரவடிவே யாகப்
பரத்துவமே யாரும் மனம்.

(வெண்பா)

1297. பாத மதனிற்சொருபப் பார்வையாம் போதவொளி
வாய்தலின்றி வாய்ப்பரிய மாட்சியால்—சூதகல்கத்
தான்ம சொரூபமா மவ்வருட்செம் பாதமனந்
தான்மறவா தெண்ணத் தகும்.

1298. பாத விலாசமே பத்தருளத் தற்புதசற்
போத வுணர்ச்சியாப் பொங்கலாற்—போத
வுணர்ச்சியைப் பேணியொழுகலே பாதப்
புணர்ச்சியாம் பத்திப் புலன்.

1299. பொருவிலா வத்துவித பூரணமா முண்மைத்
திருவிலே வாழ்வு செழிக்கக்—குருரமணன்
கோலவருட் பாதங் குறிக்கொண் டொழுகலே
சாலவுய ருண்மைத் தவம்.

1300. போதவெளி யானவருட் பூரணத்தில் வாழ்வுறுவார்
பாதவொளி யார்ந்தவருட் பத்திமையோர்—போத
[வத்திற்
போக்காது மிக்கவருட் புந்தியாற் பொற்பதத்து
மாக்காதல் கொள்க மனத்து.

## 237. திருவடி சேவையும் பயனும்

1301. புடையொதுங்கி நின்று பொறுமைசே ரன்பால்
உடையான பதத்துழைத்தால்—மடைதிறந்து
வாறுபோ லாக வருள்சே ரனுபூதிப்
பேறு மிகப்பெருகுந் தான்.

## 238. திருவடி வாழ்வு

1302. தாழ்வில்லை யாகத் தழைத்துச் செழித்தவருள்
வாழ்வுள்ளும் மன்னுயிர்க்கோர் வாய்ப்பாக—வாழ்
கொள்ளையா நீடு கொடுக்குங் குருரமண [வள்ளிக்
வள்ளியான் பாதமுண்டு வாழ்வு.

குறிப்பு :—மன்னுயிர்க் கோர் வாய்ப்பாக வள்ளியான் பாதவாழ்வுண்டு என்க.

1303. சுடர்வுற்ற ஞான சொருபனருட் பாதத்
தொடர்புற்ற வாழ்வே சுகிர்தம்—கடவுட்
பராற்பரமா மந்தப் பகவொளியின் மோக
விராப்பகலாம் பேத மிலே.

## 239. அருள் வாழ்வு

(குறள்)

1304. அருள்வண்ண மான வகத்தே சொருபப்
பொருள்வண்ணம் பொங்கும் பொலிந்து.

1305. திருவருளாற் சித்தந் தெளியிலன்றி யார்க்குந்
தெருமரலிற் றீர்த லரிது.

1306. திவ்வியவாழ் வாகத் திளேக்கத் தருவதருட்
செவ்விசேர் சாந்தித் திறம்.

(வெண்பா)

1307. கரந்தவகங் காரக் கருத்தி லியல்பாப்
பரந்தொளிர்மெய்ஞ் ஞானப் பரத்தே—அரந்தை
[சேர்
சிந்தையகன் றேங்குசிவச் சிற்பரமோ னனுபவச்
சந்தவியல் வாழ்வே சதிர்.

## 240. திருவருள்

1308. உய்திக் குதவுவார் யாருமில்லே யாருயிர்க்குத்
தெய்வத் துணேயே சிறந்ததுணே—தெய்வத்
திருவருளே சேறுந் தியானபரர் சித்தம்
பரவொளியா லொன்றும் பரம்

1309. கொட்புற் றுழலுமனக் கோலா கலவலிமை
தட்குற் றசலமாந் தன்மைபெற—நுட் பவொட்பக்
கேவலமா முண்மைக் கிளர்ச்சியுளங் கூட்டலருட்
சீர்வலிமை தெய்வத் திறன்.

* தட்குற்று - தடுக்கப்பட்டு.

1310. சொந்தமா முத்தி சொரூபத்தே மன்னுயிர்கள்
விந்தையா யோகித்து மேசறலால் — பந்தித்
தெதையா னென்ன வெருங்கலக்கம் போக்கல்
அனாதிமுறை யாமெய் யருள்.

1311. திருவருளாற் சித்தந் தெளிந்தோ ரதன்பின்
வெருவரலாற் சற்றும் விதிரார் — திருவருள்சற்
போதவொளி யாதலாற் புன்மயக்கக் கற்பனைசே
ரேத வியற்கை கெடும்.

1312. புத்திக் கொளிதரூஉம் போதத் திருவருளாற்
சித்தக் கலக்கந் தெளியிலன்றிப் — புத்தகந்தேர்
ஞானப் புலமைகொண்டே நண்ணரிது சுத்தவருள்
வானப் பரமுத்தி வாழ்வு.

1313. பூரணமா முண்மைப் பொருளே சொரூபமா
யாரறிவா ரன்னு ரிதயத்தே — காரணமும்
பொய்த்துவித மோகமனப் புன்கலக்கஞ்
வத்துவித வாழ்வே யருள். [செற்றொளிரவ்

1314. மயலில்லை சற்றும் மனோமயமாஞ் சீவச்
செயலில்லை சித்தஞ் சிவமே — அயலில்லை
முப்புடிகள் யாவுமொரு மோனமயச் சிற்பரமே
அற்புதமா மஃதே யருள்.

## 241. அருட் கேவலம்

1315. கேவலமே நாமாக் கிளர்த லமுத்தமுற்றால்
ஆர்வலர்நா மல்லோ மயல்களிலே — வாழ்வரைப்
பெற்றவருட் பூரணத்தே பேதமில்சுத் தாத்துவிதப்
பெற்றியோம் பிழை யிலோம்.

1316. புத்திக்கு மூலமாம் போத சொரூபவருள்
வித்தகமாங் கேவலமே மெய்யறிவு — புத்தியாற்
கற்கின்ற பற்பல் கலையறிவுந் தன்னறிவிற்
புற்கென் றறிவன்றாய்ப் போம்.

குறிப்பு :— சொரூபமாகிய கேவலம் என இருபெய
ரொட்டுப் பண்புத்தொகை. தன்னறிவு —
சொரூபஞானம்.

## 242. அருட் செல்வம்

1317. புங்கவருட் செல்வப் பொலிவுற்ற புந்தியோர்
மங்குபொருட் செல்வம் மதிப்பரோ—பொங்குசிவ
ஞானவருட் செல்வ நலத்தின் முன் மேதக்க
வானவர்தஞ் செல்வம் *மயல்.

* மயல் - குப்பை, செத்தை

1318. செம்மைசேர் சுத்தவருட் செல்வந் திளைப்பவருக்
கிம்மியிலு மிம்மிமற் றெல்லாமே—பொய்ம்மயல் சேர்
மூவுலக போகமவர் முற்றிலுந்தாம் பெற்றிடினு
மாவலுறார் சிந்தை யவற்று.

1319. அதீதமா மோன ஞானுபவச் செல்வற்
கதினமாய் நானற்ற வாற்றால்—ததீயர்சேர்
வேண்டுதலொன் றில்லா விழுச்செல்வ மானவரு
ளீண்டுவதா யிற்றென் னிடத்து.

## 243. அருட்பதமே எல்லாப் பேறும்

1320. திளைப்புற்று வாழத் திருவருட்செம் பாத
வொளிப்பற் றுளத்துள்ள தோர்ந்தால்—களைப்பற்று
நீடும்பே ரின்ப நிகழ்ச்சிசேர் கைவல்யப்
பீடுபெறு வாழ்க்கை பெரிது

1321. சுவர்க்க நரக சுகதுக்க மெல்லா
மவக்கனவா நீங்க வகத்தே—சிவக்கனலா
நின்றபெருந் தெய்வ நிரதிசயா னந்தவரு
ளொன்றே யுறுமென் னுயிர்க்கு.

1322. அருட்பார மாக வடைந்தவுயிர் முற்ற
மருட்பா ழகந்தையற மாய்ந்து—திருப்பாத
நீழலா முண்மை நிஜானுபவ சாந்தியிலே
வாழலாய் மன்னும் வடிவு.

1323. அருட்பாதம் போல வடியார்க்கு மாறு
விருப்பாக வுள்ளபொரு ளில்லை—அருட்பாத
வுண்மையிலே யெல்லா வுலகசாம் ராச்சியமும்
* எண்மைசேர் கற்பிதமாங் காண்.

*எண்மை - எளிமை, அற்பம், துச்சம்.

1324. அருட்பதவாழ் வொன்றே யறிஞரான் முற்ற
விருப்புற த் தக்க விழுந்—அருட்பதவாழ்
வல்லாத வெள்ளா யறிவொளியாந் தன்சொரூபம்
கல்லாத மோகக் கனு.

1325. அருட்பதமே வாழ்வுக் கறம்பொரு ளின்பம்
விருப்பபுறும் பேரின்ப வீடு—பருப்பதமா
ந்ன்ற வருட்பதமே நில்லா வகிலத்துக்
கென்றென்று முள்ள விருப்பு.

1326. அறிவான மோனமே யன்பாம்பே ரின்பச்
செறிவான சுத்தவருட் செல்வம்—பிறவான
மாயிகமாஞ் செல்வ மயக்கமறத் தீர்சொருப
நாயகமா முண்மை நலன்.

## 244. அருட் பார்வை

(குறள்)

1327. பாரசத்தி யானவருட் பார்வை தெளிந்தால்
ஒராசத்தி யில்லை யுயிர்க்கு.

(வெண்பா)

1328. சுத்தவருட் பார்வைத் துலக்கத்தா லாவரண
மித்தையற வுண்மை விளங்கலாய்: உத்தமசற்
பத்திவடி வாகப் பழுத்தொளிர்மெய்ஞ் ஞானநிஷ்
சித்தியாஞ் சித்தந் தெளிந்து.

1329. ஞான வருட்பார்வை நண்ணினு லுள்ளத்தே
மோன சமாதியொளி மூண்டொளிர—வான
வுருக்கொண்ட தன்சொருப வுண்மையிலே சித்த
வுருக்கெட்டு முத்தி யுறும்.

1330. தனைந்தகா வென்னுந் தனுநில்யா தென்று
விளைந்த விசாரவடி வாகத்—தெளிந்தவருட்
பார்வையாற் காணிற் பசுத்துவமாம் பாசபந்தப்
போர்வை யறக்கிழிந்து போம்.

1331. போதவருட் பார்வை பொருந்தினுற் பூசலிடும்
பேதமதிப் பீழையறப் பேர்ந்தொழியும்—மோதவியற்
சித்தோப சாந்தி செழிக்கச் சிறந்தொளிரும்
முத்தோக மென்னு முணர்வு.

1332. நிட்டையுரு வாக நிறைந்தொளிர்மெய்ஞ் ஞான
சுட்டறிவு மோகந் தொலைத்தலே—முட்டறுசச [திட்டி
சிற்சொருப மான சிவத்திற் சிதாபாசம்
கற்பனையாத் தான்கரக்குங் காண்.

1333. பிழைபடா மோனவருட் பெட்பாலே யன்றி
நுழைவுரு துண்மையுணர் நோக்கம்—உழையராய்
ஆண்டவன்பா லுற்றமெய் யன்பா லருட்பார்வை
பூண்டொழுகல் போதப் புலன்

1334. பேதமனக் கற்பனையிற் பேர்ந்தொழிந்தா லன்றி [யருட்
போதவியற் பார்வை பொருந்தாத—போதவியற்
பார்வைசேர் மோனப் பரசொருப சித்தியகத்
தார்வதே யாண்டா னருள்.

1335. மதித்தலே மாயை மதிக்கு மனத்தைப்
பதத்திற் பதித்தலே பார்வை—பதத்தில்
இயல்பா வகமகமென் றேயொளிர்சற் போதம்
மயல்போக மாற்றும் மனத்து.

1336. நிறைகுண நீதி நிரம்பியசிற் சத்தி
நெறிவழியே யாவு நிகழ்ப—இறையோ
டுறவொன்று நாட்ட முடையார்க் குலகின்
முறையன்றி யில்லை முரண்.

1337. பராபவ மெய்தப் பலவிகற்பம் பாசத்
திரோபவம் போக்குசிவச் செம்மல்—சொருபத்
திருவருட் காட்சி தெளிந்து விளங்கு
நிருவிகற்ப நிஷ்டை நிறைவு.

குறிப்பு :— அருட் காட்சியாவது நிஷ்டை நிறைவு என்பதாம்.

1338. பற்றற் றியல்சொரூபப் பார்வையே பின்னமற
முற்றப் பரந்தமுழு மூதறிவாய்—முற்றத்
திறந்தவெளி யான சிவானுபவக் காட்சி
சிறந்ததியல் பாகத் தெளிந்து.

(கொச்சகக் கலிப்பா)

1339. இல்லாத மோக வியற்கையே யாருயிருக்
கெல்லா வனர்த்தங் களுக்குமோ ரேதுவென்பர்;
தொல்லை யநாதியாத் துன்று மயக்கப்பா
டில்லாதே காண்ப திறைவனருட் பார்வையே.

1340. பரம சிவத்திற் பயின்ற மனத்தோர்
பரம சிவமயமே பார்ப்பா ரெவற்றும்;
பரம சிவமயமாப் பற்றலாற் பார்வை
பரம சிவசொரூபம் பற்றலுற் றூரே.

## 245. அருட்புகழ் பேச ஆர்வம்

(வெண்பா)

1341. குருசொருப மானவருட் கோமானென் னுவி
யரசிருக்கை யாக வமர்ந்தான்—முரசுகொட்டி
யாகநா னெண்ணினே னுண்டா லருட்புகழ்க்கு
மூகனா நிற்கின்றேன் முன்.

1342. மோனமொழி யாலே முனிரமணன் மாட்சிமையை
நானருமை யாக நவில்கின்றேன்—மோன
மொழிப்பயிற்சி யுள்ளோர் முறைப்படநன் றோர்க
செழிப்பமுற வாண்டான் சிறப்பு.

1343. உள்ளங் கிளர்வதெனக் கூறுராச் சென்றுசென்று
வள்ளலருள் பேச வகைவகையாய்த்—தெள்ளிதாச்
சொல்வன்மை யில்லேன் சுவைக்கச் சொல்வறி
ஒல்லுவதொன் றில்லையென்செய் வேன். [யேன்

## 246. அருளாளர் வாழ்வு

1344. அறிவு விளங்கி லதுவேதா னாகி
நிறைவுற்ற மோன நிலையாம்—மறவிசேர்
பேத வகப்பேய் பிரியப் பிறங்கலுறும்
போதவருள் வாழ்க்கைப் பொலிவு.

1345. அருள்விளங்க வூற்ற வகத்திலே மோக
விருள்கலந்த வாசை யிறக்கும்—மருள்கலந்த
வூன வகந்தை யுதிக்க வொண்ணுமையால்
வானகமா வாழும் மனம்.

1346. அருட்சிற் பரத்தி லகந்தைமதி செத்து
மருட்சிப் பகற்றமற மாய்ந்தோர்—பரிட்சித்
தறிய வொண்ணுத வகண்ட சொரூபச்
செறிவான சுத்த சிவம்.

குறிப்பு :—மாய்ந்தோர் சிவம் எனக் கூட்டுக.

1347. அத்தகசிற் கின்ற வகை லகிலமுயோர்
வித்தகசிற் சத்தி விலாசமாம்—சுத்தவருட்
சித்த விருத்தி சிவமயமாத் துன்றுசுப
மெய்த்தவமாய் வாழ்க்கை விருந்து.

1348. அண்டங் கலங்க வதிர்க்குமகங் காரமறக்
கண்டங் கலைந்தவருட் காட்சியோர்—விண்டயங்க
மண்டுங் கனசொருப மாட்சியாற் றேன்றுமனைத்
தண்டங் களுக்கு மரசு

குறிப்பு :—தயங்கல் - விளங்கல்

1349. இருள்சே ருலகியல்பா தேனுந்தா னுக!
அருள்வாழ் வவாவுநல் லான்றோர்க்—கருள்வளஞ்
[சேர்
மோன நிறைவே நிறைவன்றிப் பொன்முதலா
ஏனைநிறை வெல்லா மிளிவு.

## 247. அடியார் மாட்சி

(குறள்)

1350. அரிதென்னும் மோன வருட்சிற் பரவாம்
வெளிதென்பர் ஈசனடி யார்.

1351. இருள்சூ ழுலகத் தெதிர்வுறூர் ஆண்டா
னருளேக் கடையலுற் றூர்.

1352. இன்பவெளி யான விதப் பெரும்பதவாழ்
வன்ப ரடைந்துகப் பார்.

(வெண்பா)

1353. ஆசையறத் தன்னிலைப்பா வாண்டா னருட்பதத்து
நேசமுறப் பெற்றவர்தந் நெஞ்சமே—வாசியறத்
தேற்றமா வோங்கு சிவபோக பூமியாப்
போற்றுவார் நன்புலத் தோர்.

1354. துரிய சொரூபவருட் சோதியா வோங்கும்
பெரியபெருந் தன்மைப் பிரான்பால்—உரியமெய்
யன்பா லடைந்த வடியா ரவிச்சையிருள்
வன்பாழ் கடந்துவாழ் வார்.

1355. அருளே சொரூபமா வாண்டவன்மெய் யன்பர்
இருள்சே ருலகத் தியங்கார்—தெருளாந்
பரசிவமா மோனப் பரந்தாம வாழ்வா
மரகசேர் கிற்பா ரகத்து.

1356. உற்றிடுக துற்றென் றுறுதொழிக பல்கலைதாங்
கற்றிடுக வன்றிக் கலாதொழிக—முற்ற
வருட்பாத்தை நம்பியமெய் யன்பரகத் தின்றே
மருட்புலத்து வாழ்க்கை மயல்.

1357. மருட்கோல வாழ்க்கை வலையினின்றுய் தப்ப
வருட்காவல் வேண்டி யடியார்—அருட்கே
மூடிக்கோ லிருந்தோ றருட்பதமெய் வாழ்வுக்
கடிக்கோலு கின்றா ரறி.

1358. செல்வமே மக்கட்குச் சீர்மை தருவதன்று
செல்வங்கீ ழோர்பாலுஞ் சேர்வதாம்—செல்வப்
பொருளாற் பொலிவுறவப் பூதலத்தோ ராண்டா
னருளாற் பொலிவரடி யார்.

குறிப்பு :—அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்
பொருட் செல்வம் பூரியார் கண்ணு
முள. (திருக்குறள்) என்பதும் காண்க.

1359. என்னுருபிரா மிறைரமணன் மெய்க்கீர்த்தி
பன்னும் பாடிப் பரவுவார்—மன்னு
மனிசரைப் பாடி மயங்கா ரருட்சீர்
நனிசுரப்ப வாழ்வர் நலத்து.

1360. மாயிருஞா லத்தில் வளம்படவந் தாண்டவனுக்
காயிரர்பல் லாயிர(ம்)மெய் யன்படியார்—நாயகனைப்
பற்பலவாற் றாலும் பரவுசற் பத்திமைசேர்
அற்புதர்தாட் காட்படுகின் றேன்.

1361. விருப்பேது மெய்தார் விமயத்தே யாண்டா
னருட்பேறு பெற்ற வடியார்—இருப்பே
யறிவொளியா நீடு மமிர்த சொருப
வெறுவெளியா நிற்கும் விருப்பு.

1362. நாதன் றிருவடியை நம்பினோர் பொய்ம்மயக்கச்
சூதொன்று பாசத் தொடக்குறார்—பேதொன்
றுலகியற்பே ராசையொழிந் துள்ளுணர்வாற் [சேர்வர்
குலவுகுரு மோனக் குறி.

1363. தெய்வமே தேறித் தியானித் திருக்குமன்பர்
வையமே லாசை மயக்கமுறார்—செய்யுங்
கருமம யதுவாக் கடைப்பிடிப்பர் கல்லா
மடமையாத் தீர்வர் பிற.

1364. என்னையே போலிவ் விருநிலத்திற் பற்பலவா
மன்னுயிரை ஞான மரபாகத்—தன்னடிக்குக்
கொண்டவருட் கோமான் குளிர்பாத நீழலில்வாழ்
தொண்டர் களுக்கே சுகம்.

1365. அடியா ரடியே யனவரதங் கூடி
யடைவே பரசுகப்பே ராட்சி—முடியே
புனைந்தரசாய் மூவுலக போகமும்பெற் றாலும்
அனந்தசுகத் திம்மியே யாம்.

1366. மருவு மடியர் மனத்தே யறிதற்
கரிதாகுந் துன்ப மறவே—சொருபமே
யன்புமய மன்றி யயலோர் மயமில்லா
வின்பமய மெந்தை பதம்.

1367. சுத்தசச் சித்தாஞ் சொரூப வருட்பரத்தில்
வித்தகரெல் லோருமொரு மெய்யினரே—நித்தமுத்த
சூரிகளாந் தெய்வச் சுடர்களை நா னெம்பெருமான்
பேரொளியிற் பேணுகின் றேன்.

1368. செய்யவ்வான் றற்றுச் சிவாய நமோ நமவென்
றையமேற் றுன்டுறங்கு மம்பலத்தோர்—தெய்வ
வொளியராப் போற்றற் குரியரன்றிச் சற்று
மெளியரா வெள்ளப் படார்.

1369. அடியடுத்த மெய்யன் படியவர்மேற் சற்றும்
படையெடுத்துச் செல்லப் படாதென்—றிடை
[மறித்துக்
காலன்வெந் தூதுவர்க்குக் கட்டளையிட் டான்கருதிப்
பாலனுக்காத் தான்பட்ட பாடு.

குறிப்பு :—காலன் - யமன்; பாலன் - மார்க்கண்டேயன்

1370. இடைக்குல மேனுங் கடைக்குல மேனு
மடைக்கலமா வுற்ற வடியார்—அடுக்கு
நிலைக்களமாத் தொக்க நிஜான்மவுருத் தேர்ந்து
தலைக்குலமாத் தாந்தமைப் பார்.

1371. அனையினும் மிக்க வருட்குரு நாதன்
தனையே சரணமாச் சார்ந்தார்—வினையை
யடர்க்குந் திறஞ்சா லருட்பாத தூளி
கிடைக்கப் பெறல்பாக் கியம்.

1372. ஆதி வியாதி யகற்றி மகத்துவஞ்சே
ருதிய மெல்லா மொருங்குதவும்—ஓதியர்போற்
றெம்பிரான் பாதத் திசைந்தமெய் யன்பரடிச்
செம்பரா கச்சிற் றனு.

1373. மருள்சே ரகந்தை மனஞ்செத்து மோன
வருளிற் கலந்த வடியார்—பொருளே
வடிவாப் பொருந்தலால் வண்மைமே லீசன்
படிவா வழிபடற்பா லார்.

1374. வேண்டல் வெறுத்தலற்ற வித்தகமெய்ஞ் ஞானநூ
காண்டலரி யானடியார் கண்டடைவார்—ஆண்டா
னருட்சீர்மை யாலவ் வடியரகம் போதப்
பொருட்சீர்மை பொங்கும் பொலிந்து.

குறிப்பு :—அரியானுடைய அடியை யார்கண்டடைவாரோ அவ்வடியார்

1375. அத்துவித மானமெய் யன்புபட்ட நல்லடியார்க்
குத்தமசற் போத முளத்திலெழும்—வித்தகமெய்ஞ்
ஞானவி பூதி நலங்கிளரத் தற்பாமே
தாவி வியல்வர் தழைத்து.

1376. மண்டுபுலங் காணும் மனத்தை மடக்கியகத்
தண்டவொட்டா தண்ணமுமாங் கேயடக்கிக்—[கண்டவனுந்
தன்புலமே நோக்கிச் சதிர்த்தியல்சற் போதவெளி
யன்பர் சொரூப வியல்

1377. பாதவொளி யானவருட் பார்வையாற் கேவலசற்
போத முற்ற மெய்யன்பர் புந்தியே—மேதகுமெய்ஞ்
ஞான விபூதி நலங்கிளர்சுத் தான்மாவுக்
கான பெருங் கோயி லறி.

1378. எந்தை ரமணனரு ளெய்தினோ ரெக்காலுஞ்
சிந்தை கலங்கித் தெருமரார்—சிந்தைக்
கலக்கமெவ் வாறு கலக்குங் கலங்கா
நிலைக்களமா நின்றொளிர்மெய்ந் நெஞ்சு.

1379. அற்றப் படாதசீ ராண்டவன்மெய்ஞ் ஞானவருட்
கொற்றக் குடை நிழலிற் கூடினர்—சற்றும்
மனத்தாப மற்ற மகிழ்ச்சிசேர் சாந்த
கனத்தார் கவலொன் றிலார்.

(கொச்சகக் கலிப்பா)

1380. படிசே ரயல்விடயம் பற்றுமல் ஆண்டா
னடியே பொருளா வறிவால் அகத்தில்
விடியா விருட்பாழ் விடியவுறக் கண்ட
அடியார் பெருமை யளவிடற்பாற் றன்றே.

1381. கண்டாரைக் காணக் கிடைப்பதே பாக்கியமேற்
கண்டாருங் கண்பு கலந்துபல் லாற்றலும்
தொண்டாடிக் கூடித் துணைக்கொண் டொழு
[குரிமை
கொண்டாருக் தண்டாங் குலாமானென்பென் கூறு
[வதே.

1382. உரிதான பக்தி யுணர்வோடு தெய்வப்
பெரியாரைச் சேர்ந்தொழுகும் பெற்றியோர், சாற்றற்
கரிதான வன்னா ரருள்வலத்தாற் றாமும்
பெரியரே யாகப் பெருமிதஞ்சேர் வாரே.

1383. ஏழைத் தொழும்பனே னேமாக்க மூலவகப்
பாழைக் கடிந்து பராக்கறவே யென்னறிவிற்
சூழத் துலங்குபரஞ் சோதியாம் போதசிவத்
தாழப் படிந்த வறிவோ ரமுதர்களே.

1384. பத்திரசற் போதகுரு பாத பராயணராய்
வித்தகமெய்ஞ் ஞான வியன்களிற்று மேட்டிமைசேர்
மத்தகமீ தூரும் மதோன்மத்த மீளிமையோர்
அத்தகவே யெம்மையடிக் காளும் பரமர்களே.

1385. அறிவிற் பிறந்தமெய் யனபாம்பே ரின்ப
நிறைவிலே வாழ்க்கை நிரம்பலுற என்னுட்
பிறிவற் றுளிர்சொரூபப் பெம்மா னருட்சிற்
குறியிலே நிற்போர் குருக்களா வாரே.

1386. தாழ்வே யிலாத சதோதயமெய்ஞ் ஞானவருள்
வாழ்வா வடியோமை வாழவைத்தான் சிற்பதத்தா
டாழ்வா ரறிவே அமுதசொரு பானுபவ
வாழ்வா விளங்குவது மாயக் கலக்கமற்றே.

1387. களங்கப் படாதவருட் கர்த்தனடிக் கொண்டர்
உளங்கவலச் சற்று முறார்துன்பப் பீழை;
விளங்கலாற் றம்முள் விசுத்தசிவத் தன்மை
வளங்குலவப் பொங்குமகிழ் வாழ்வுசேர் வாரே.

1388. சார்ந்தாரே யல்லர்தற் சார்ந்தாரைச் சார்ந்தாரும்
தீர்ந்தார் பசுபாசச் சித்தக் கலக்கமெனில்,
யாந்தே ரிறைவன்பே ரின்பவருட் கணதேக்கம்
ஆர்ந்தா ரடைந்ததற்றா னனுபவஞ் சாற்றரிதே.

## 248. அணுக்கத் தொண்டர் இயல்பு

(வெண்பா)

1389. அணுக்கத்தொண் டாக வமைந்துநான் முற்ற
விணக்கமுற்ற வாற்று லிசைந்தேன்—குணக்குன்று
வாண்டவருட் கோமா னமுதசொரூ பானுபவம்
பூண்டவருட் போதப் பொலிவு.

1390 அணுக்கத்தொண் டாக வடிகளுக்கே யுள்ளத்
திணக்க முற்றே னிந்த வெளியேன்—பிணக்கமோர்
சற்றுமிலேன் சுத்த சதாசார பத்தியன்றி
மற்றுநான் வேண்டேன் மனத்து.

1391. கழலையகத் தோர்தலே கல்வியா வுள்ளத்
தொழுமசிவ யோக வுணர்வால்—தொழலுறு மெய்த்
தொண்டரே நல்லணுக்கத் தொண்ட ரவரடித்
டண்டருமே காதலிக்கின் றார். [தொண்

## 249 அடியேன் உயிர்

1392. அடியே னுயிருக் கடைக்கலமா நாளுங்
கடைபோகக் காக்குங் கதியேற்—றுடையாகத்
தன்னையான் போற்றுந் தகுதி யளித்தவருட்
பொன்னையன் றுளே புகல்.

1393. புகலுற்ற வந்நிலையே பொல்வாத பல்வே
றிகல்கெட் டுடைந்தன வெங்கோ—புகலுற்ற
வாங்கே யிருட்குழா மற்பமுமின் றுகவறாத்
தாங்கெட் டுடைந்தொழிந்தாற் போன்று.

1394. போன்று ரொருவருமின் றுகவொளிர் பூரணத்தால்
ஆன்றோர்கொண் டாடுமெய்ஞ்ஞா னுதித்தன்—
துணையான சொந்த சொரூபமா முற்பட் [தோன்றுத்
டணையாநின் றுனென் னகத்து.

1395. அகத்தே யமர்ந்தா னருட்கொடையா லோங்கும்
மகத்தான சிந்தா மணியாய்—முகத்திலே
சாத்தி விலாசுந் தவழ்முறுவல் சான்றவருட்
காந்தியா லெல்லாங் கவர்ந்து.

1396. எல்லாங் கவர்ந்தா னிரண்டற்ற தன்மயமா
நல்லசிவ ஞானவொளி நல்கினன்—வல்லசுர
மாயப் படையான வாசனைமுற் றுஞ்செற்றான்
நேயத் தழுந்தவென் னெஞ்சு.

1397. அழுந்தலுற் றாலே யகத்தூடு முன்ன
ரிழந்தபழம் பேரரசு நண்ணும்—தொழுந்தகைசே
ரவ்வரசை மீட்டு மடைவதிலே யன்றியுயிர்க்
கெவ்வயறு மாக்க மிலை.

1398. ஆக்கமாத் தக்கதுநா னென்மசொரு பானுபவந்
தேக்கலே தேக்கித் திளைத்தலே—மூர்க்கமாம்
பேதமதி யான பிசாசையழித் தத்துவித
போதமாம் பூரணமே போற்று.

1399. போற்றலோ டெந்தையருட் பூரணத்தே மோனசுகந்
தேற்றலே யன்றிமற்றோர் சிந்தையிலேன்—ஆற்ற
[லுடனுங்
கர்த்தத் துவமதியின் கட்டறுத்துச் சுட்டறுத்த
வத்தனுக்காட் பட்டவடி யேன்.

## 250. சிறியோர்

(குறள்)

1400. அனர்த்தமே யெண்ணியெண்ணி யாவலிப்பர்
மனத்தியல்சற் றெண்ணியறி யார். [எண்ணும்

1401. நள்ளிரவில் வாழ்வு நடாத்துவார் கற்பனையா
உள்ளுணர்வா லுண்மையுண ரார்.

1402. கற்பனையைக் கண்டு கலங்குவார் சிற்சொருபத்
தற்பரமாந் தன்னையறி யார்.

1403. மோனத்தா லன்றி முயங்கவொணாக் கேவலவாழ்
* வூனத்தார்க் கெவ்வா றுறும்.

* ஊனத்தார் - உடல் வடிவாக வுயிர்ப்போர், தேகாத்ம புத்திச் செருக்கர்; காம வெகுளி மயக்கம் என்னும் மூவகைக் குற்றமுளார் எனினுமாம்.

1404. உள்ளத்தை நீத்தார் படருழப்பர், கள்ளமனக்
கற்பனை பேதங் களில்.

1405. கைவல்ய வுண்மையைக் கண்டு கலங்குவார்
மையல்கூ *ரூனமனத் தோர்.

* ஊனமனம்—உடல் வடிவானமனம்; அகந்தை
மதியாற் பரிச்சின்னமான மனமுமாம்.

1406. விஞ்சும் பரமார்த்த மெய்யியற்கை வல்லியங்கண்
டஞ்சுவார் ஆணவத் தோர்.

1407. அவபாக் கியந்தேடி யல்ல லுழப்பர்
சிவபாக் கியந்தேரு தார்.

1408. அகப்பே யறிவா லலேப்புண் டுழல்வர்
சகப்பா ழகத்திற் சடர்.

1409. வஞ்சக் கனவை நனவா மதித்துழல்வர்
தஞ்சக் களிமயக்கத் தார்.

1410. கருத்தற்ற கைவல் லியங்கண்டு மூடர
விருத்தமா வெண்ணி யெதிர்ப் பார்.

1411. ஒளிவெளி யா வுள்ள சொரூபவுண் மை தேகக்
களிவெறியர் தேறகில் லார்.

1412. பின்னியவெம் பாசப் பிழைசேர் பிரமைபே
தன்னியல்கற் றேரான் சதிர்.

1413. சித்தக் கலக்கத் தொருமரலாத் தோன்றுலகப்
பித்தர்க் *கறிவு பிழை.

* அறிவு - அறிவுரை, ஞானுபதேசம்.

(வெண்பா)

1414. உலகப் புலன்களி னூடாடி மோகக்
கலகப்பட் டுக்குக் கழியும்—தலைவன்
கழலே பொருளாகக் காணுதார் புத்தி
நிழலே பொருளா நினைந்து.

1415. அளப்பிலா மாட்சிசே ராண்டான் பதச்சீர்
கிளப்பிறுந் தாந்சேற கில்லார்—தளிர்த்துத்
தழைத்துச் செழிந்தசிவ தன்மயத்தா ளுள்ளம்
பழுத்தபரி பாகமில் லார்

## 251. பெரியோர்—சிறியோர்

1416. விசுத்த வருட்பதத்து வேட்கைகயோர் [illegible]
[illegible] மருட்புல [illegible]—[illegible]
பொய்யாம் புலவி [illegible] வாழ்க்கையோர்
மொய்யிருள் சூழ் மோகத் [illegible].

1417. பழிச்செருக்கு மாள [illegible]
அழச்சிரிக்கச் சற்று மறியார்—[illegible]
ஊற்றுசை யாலே யுடலுலகத் தூடாடும்
மற்றுர் மனமயக்கத் தார்.

1418. அடியே நினைந்துநினைந் [illegible]
செமசே ருடலைந் தெழிந்தே—உடையானுக்
கூணுகைப் பெற்ற வுணர்வா லுபசாந்தி
பேணுநிற் பார்பெரி யோர்.

1419. அருட்பதத்தை நாடு மடியா ருலகைப்
பொருட்படுத்தா துள்ளம் புகுவர் [illegible]ட்படுத்திற்
சாரா தொழிவர் சதாகதியா வுள்ளவருட்
சீரார் சிவச்செம் பதம்

1420. அரணமா வுள்ள வருடபதமே முற்றுஞ்
சரணமா வுள்ளுமனத் தக்கோர்—கரணச்
செயல்கைங் கரியமாத் தேர்வர் சிவத்துக்
கயலின் மடார்தம் மறிவு.

1421. புந்திப் புலத்தைப் பொருத்திப் பரவெளியில்
விந்தைப் படவே விளங்குவோர்—அந்தப்
பரவெளியே தானைப் பழக்[illegible]சித் தத்தாற்
பரவியலே தம்மியலா [illegible]

1422. தேவரின் [illegible] ஞானவருட்
பார்வையாற் [illegible]பார்—ஆர்வமெழப்
பொங்கு மனுபவ[illegible] மருள்வெளியாத்
தங்குசிவக் கேவலத் தா[illegible]

1423. செறிவுறப்பெற் றுள்ளார் சிவத்தே சிவமா
வறிவறியப் பெற்றமெய் யன்பர்—அறிவிற்
பிறவறியப் பெற்றவகப் பேயகந்தை யாளர்
* மறவியிறப் பூடுமரித் தார்.

* மறவியிறப்பு: —பிரமாத ரூபமான மிருத்தியு.

1424. சிவத்திலே தம்முண்மை தேர்ந்தறிந்த ஞானத்
தவத்தினரே சாந்தி தனைப்பார்—அவத்த
வுடம்பையே பற்றியுயிர்க்குமடப் பேயர்
இடும்பையென் றென்று மறார்.

1425. சிவத்திலே தம் முண்மை தேர்ந்தறிந்து வாழ்வோர்
தவத்தியல்சேர் சாந்தி தனைப்பர்—அவத்தைகளின்
மாறிமா றிச்சுழன்று மாழ்குவர்மற் றானுடலூ
றுபடத் தாமுயிர்ப் போர்.

1426. பரசிவமெய்ஞ் ஞானம் படைத்தோ ரகண்டப்
பரசிவவெள் ளத்திற் படிவார்—பரசிவமே
சொந்த சொரூபமாத் தூன்றும்போ தனுபவ
விந்தையோர் தேவரின்மிக் கோர்.

1427. உள்ளவருள் வாழ்வை யுதாசீன பாகவுளத்
தெள்ளிமறந் தேங்குவா ரேழையார்—கள்ளமயற்
காட்சியிலே செல்லுங் கருத்தகறத்ரஞ் சிற்சொருப
மாட்சியில்வாழ் வாரறிஞர் மற்று.

1428 எங்குமுள னை விறைவனே தம்முளத்திற்
றங்கு சொருபமாத் தாமறியார்—பொங்கும்
முழுமுதலா மொன்றி னிரண்டுபடு மோகங்
கெழுமனத்தார் கேதங் கெடார்.

1429. மாயமாத் தோஙற்றி மறைபவற்றைத் தம்மனத்து
நேயமாப் பற்றினேர் நெஞ்சழிவர்—மாயமனத்
தோற்றமறை வற்ற சொருபமே நேயமாப்
போற்றினர் நெஞ்சே பொருள்.

1430. நேசத் தழுந்த நினையாது மோகமனைப்
பாசத் தழுந்தலென்னே பாவமோ—பேசற்
கரிய சொரூபஞா னனுபவ மோனத்
துரிய மதீதமாத் தோய்ந்து

1431. அகந்தை முனைப்பற் றதீதமா மோன
சுகந்திளைப்பக் கல்லார் சுமடர்—அகந்தைதீர்
மோனவருள் வாழ்வின் முழுவின்ப நின்பமே
போனகமா வுண்பர் புதர்

1432. அகண்டமா மோன வருள்விருத்தி ஞானம்
அகண்டமா நீள வகத்தே—அகண்டமா
வாண்டகுரு நாத னருட்பே றமுதமா
மூண்டசுகம் முத்தி சுகம்.

1433. இளிவரல்சேர் கற்பனையூ டேங்குவா ருண்மைத்
தெளிவிலா மூடச் செருக்கர்—வெளியில்
வெறும்போத மாக விளங்குவார் மோன
நறும்புலமை சான்றநல் லோர்.

1434. அருள்வசத்த ராநின் னடியா ருலகத்
திருள்வசத்த ராக விரங்கார்—மருள்வடிவப்
பேயகங் காரம் பிரிதலாற் சிற்பரத்து
நாயகங்காண் ஞாலத் தவர்.

1435. அருட்புலத்து வாழ்க்கை யறிந்தடையப் பெற்றோர்
விருப்புலகப் புன்புலத்து மேவார்—இருப்புணர்வா
மின்பப் பதத்தி லியல்பா மகிழ்தலின்வ
வன்பன்றி யாசை யிலார்.

1436. உலகங் கவர்ச்சி யுடையதாய் மோகித்
தலைமால்சே ரைம்புலத்து பாகர்கள்—கலகலத்துச்
சிந்தா குலத்தாற் சிதறுண்டு மாயையுதை
பந்தாத் தெழிப்படுகின் றார்

1437. மனக்கற் பனையா மறிக்கமே முற்றும்;
மனக்கற் பனைபெரிய மாயம்—எனக்கற்
றுணர்ந்தோ ருடலுலகத் தொட்டார் பரமே
புணர்ந்தொளிரும் புந்திப் புலத்து.

1438. ஒள்ளியமெய்ஞ் ஞான வொழுக்கங் கடைப்பிடித்துத்
தெள்ளியோ ராகத் திகழ்சிலரே—கள்ளமன
மாயக் கிழங்ககழ்ந்து மாசற் றொளிர் சொரூப
நேசத் தழுந்திநிற் பார்.

1439. உறுதிசே ருண்மை யுணர்ந்தோ ரதன் போய்ம்
மறுதலையின் மாயமற வாழ்வர்—மறுதலையின்
மாயமற வாழாரே என்றோர்தம் மெய்யுணர்வு
மாய மயக்கமே காண்.

1440. தேனீக்கள் போலப் பூச் சித்தமுமெய்ஞ் ஞான
[வருள்
வானிறுக்கி வாழ்வ துய மாறவந்தோர்—ஊனோக்கும்
பம்பலங்க ளநுபவம் மேயாகித் தழுங்குவர்
பொய்ம்மயல்சேர் புன்மனத் தோர்.

1441. ஏடனோ டம்பேசி யோந்திலையா ரோமளித்து
மாடகூ டத்தே மயங்குவார்—நீடவே
நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

1442. உள்ளத்து வாழ்வை யுதாசீனம் பண்ணிமனக்
கள்ளத்தி லூற்றுக் கலங்குமுயிர்—தெள்ளத்
தெளிந்த சிவாநுபவ தீர்த்தநீர்த் தேங்கும்
உளைந்துபுலச் சேற்றி லுழன்று.

1443. அறிவுண்மை தேர்ந்தா ரகிலமுந் தேர்ந்தார்
அறிவன்றி யின்றா லகிலம்—அறிவிற்
பிறவறிந்து பிழை யுழக்கின்ற மாக்கள்
அறிவுமடம் பட்டா ரறி.

1444. அறிவா லறிவையே யாய்ந்தறிந்து சுத்த
வறிவாக நின்றுவப்பா ரான்றோர்—அறிவுமனக்
கற்பனையா மைம்புலப்புன் காட்சியா லாவரிப்புண்
டற்ப ரிடர்ப்படு வார்.

1445. உண்மையிய லுள்ளத் துறைக்கோ ருபசாந்த
வண்மைசேர் மெய்ஞ்ஞான வாழ்க்கையோர்—
[நுண்மைசேர்
கூரியநோக் கத்தாற் குலவுகுண சாந்தர்மெய்
யாரியர்மற் றல்லர் பிறர்

1446. இரண்டற்ற வொன்று மியல்பொருப வுண்மை
தெரண்டமனத் தோரே தெளிந்தோர்—மருண்ட
மனமயக்கக் கற்பனையான மாயப் பேதைக்
கனவுகாண் பாரல்லா தார்.

1447. அற்றமறக் காக்கு மறிவிலார் கற்றைநூல்
கற்றறிந்து காணக் கடவிகவன்—குற்றமறக்
காக்கவல்ல வொள்ளியோர் சிந்தித்தே கற்பினுட்பே
ராக்க முறுவரத னால்.

1448. குலவுறுமெய்ஞ் ஞானக் குறிப்புணரா நக்கை
விளைச்சரக்கா விற்பர்சில் வீணர்—மலமறுப்போர்
நட்கத் தகவுயர்மெய்ஞ் ஞானமவ் வாசிகர்பால்
வெட்கத் தகுவ தடைத்து.

1449. அருட்புலவ னமெய் யறிஞன் பிரமாத
மருட்புலவர் போல மயங்கி—இருட்பகைவிட்
டாரோப மான வகிலமனக் கற்பனையிற்
போராடித் தான்புலம் பான்.

## 252. பெரியோர்

(குறள்)

1450. மன்ற வுலகை மனத்தாற் றுறத்தலால்
வென்றவர் மெய்வித் தகர்.

குறிப்பு :—வித்தகர் - சமர்த்தர்.

1451. மனப்பதற்ற மான மயக்கக் கலக்க
வினைப்பயனத் துர்விழித் தோர்.

1452. செத்த வகந்தைபையார் தேறத் தரிசித்தார்
முத்தரவர் யோக முளர்.

1453. அகந்தையைக் கற்றொழிய வான்ம சொரூபம்
அகந்துலங்கப் பெற்றோர் பரர்.

* பரர் - முத்தர்; கடவுளருமாம்.

1454. சிவத்தேதம் முண்மை தெரிந்தோர் சொரூப
விவத்தையில்லே ரூன்றிநிற் பார்.

1455. அறிவான வுண்மையா வார்ந்த வகத்திற்
பிறியா ரகந்தையற் றோர்.

1456. சிவந்தே நினைத்தலுற்ற சித்தத்தோர் மோக
வவத்தையிலா பூங்காற் படார்.

1457. விண்கலங்குற் றாலும் வெறிதேதாங் காணலன்றிக்
கண்கலங்கார் தத்துவங்கண் டார்.

1458. பன்னிலங்க ளுள்ளும் பரமார்ந்த வுள்ளமே
நன்னிலமாத் தேர்வர்நல் லோர்.

1459. அருட்கே வலவாழ் வடைந்தோர் துவித
மருட்கலக்கஞ் சேரார் மனத்து.

1460. ஐயறிவா மோக வலமாலை மெய்யறிவாற்
பொய்த்தொழியக் காண்போர் புதர்.

1461. அவத்தைகளிற் சற்று மலமாரார் சுத்த
சிவமாத் தெளிந்தசித்தத் தோர்.

1462. பொங்குபர போகம் புணர்தலுற்றோர் புற்கெனவே
மங்குபுல வாழ்வையெண் ணார்.

குறிப்பு :—புணர்தலுற்றோர் - அடையத் தொடங்கினோர்
அடைய முயல்வோர்.

1463. ஊன வகந்தை யுணர்வொழிந்த வுள்ளத்தோர்
மோனவெளி யாகமூள் வார்.

1464. சான்ற விளங்கு சதாசிவமெய்த் தன்மையா
லான்றோர் பரசிவமே யாம்.

1465. நேசம் பரத்தே நிகழ்வுற்ற நெஞ்சரே
பாசப் படர்கெடப்பார்ப் பார்

1466. தெளிந்தபர மோனவருட் சிற்பரவாழ் வுள்ளத்
தளைந்தவர்நோக் காரா வமுது.

1467. ஆரா வமுதா வனைக்கவருட் சிற்பரன்மெய்ச்
சீரே மனந்திளைக்கின் றேன்.

1468. திளைக்கத் திளைக்கத் தெவிட்டாப்பே ரின்ப
மளிக்கின்ற தாண்டான் பதம்.

1469. தெய்வந் தெளிந்தோர் சிவானந்த மோனவருட்
சைவவொளி தாம்பரப்பு வார்.

1470. நானற் றெழுந்தமெய்ஞ் ஞானியின்மோ னுறுதவம்
வானத்தின் மாணப் பெரிது.

1471. நீத்தார் பெருமை நினைக்கவொணா மாட்சித்தேல்
வாக்கால் வழுத்த லெவன்.

1472. மாணத் தகுவதொரு மாட்சி உடலவ்வமையிற்
காணப் படுமுத்தர் வாழ்வு

குறிப்பு:—முத்தர் - ஜீவன் முத்தர்; மாட்சி மட்டுமன்றி யாராலும் அறிய வொண்ணாததோர் அதிசயம் என்பதும் உரையிற் கோடலாற் கொள்க.

1473. தண்மைசேர் சாந்தி தழைத்தொளிர்வர் சுத்தவருள்
வண்மையால் வாழுமனத் தோர்.

(வெண்பா)

1474. நித்தியவாழ் வாக நிறைந்த சொரூபவருள்
வித்தகவாழ் வுண்மை விளங்காதார்—மித்தையாத்
தோன்று முலகச் சுழலாம் பிறப்பிறப்பில்
மான்றுமனம் மாழ்குகின் றார்.

1475. உள்ளதொன்றை யன்றி யுறுதிப் பொருளாகக்
கொள்ளக் கடவரோ கூர்மையோர்—வெள்ளக்
கடல்போலக் கொந்தளிக்குங் காசினியில் யாரென்
னடைவுற் றுடைமையடைந் தார்.

1476. மன்னியசற் போதவருள் வாழ்வு மகத்தாகத்
தன்னியல்பா வுள்ளந் தலைப்பட்டோர்—அன்னியமாம்
பொய்த்துவிதத் தாடு பலம்பலவாறர் நானழிந்து
மத்தானைக் கற்பனையாய்ந் தார்.

1477. உள்ளதே தாமா வுணர்வுதெளிந் தான்றமைந்த
வொள்ளியோர் மெய்ஞ்ஞான யோகிகளாய்த்—
[தெள்ளியசற்
போத சொரூபவருட் பூரணமா மோனசுகம்
பேதமறப் பெற்றுவாழ் வார்.

1478. எண்ண மிலாத வியல்பாம்பே ரின்பநிலை
என்னை மெழிற்சே ணிகந்தொழியும்—எண்ண
[வூறுந்
சித்தமறச் செத்துச் சிவமாக நின்றொளிர்வார்
உத்தமசற் போதவர வோர்.

1479. அத்துவித மோன வருட்பதத்தே மாய்வுமுறச்
சித்த விருத்தி செறிந்தவன்பர்—சித்தமலந்
தீரத் தெளிந்து சிவானுபவப் புத்தமுத
மாரப் பெறுவ ரகத்து.

1480. அம்மா னடிசே ரருட்பாக் கியத்தோருக்
கெம்மா வுலக மெதிர்ப்படினும்—அம்மா
வுலகத் துடலோ டொருப்பட் டுழலார்
உலகங் கடந்தவுணர் வோர்.

1481. * ஆவத் தனமான வாண்டா னருட்பதத்தைச்
சேவித் தொழுகுமனச் சீர்மையோர்—ஆவத்
துறுபொழுதுக் காகவென் றுள்ளி யடைத்தாற்
பிறிதுபொருள் பேணார் பிழைத்து.

* ஆவத்தனம் (ஆபத்தனம்) - எய்ப்பில் வைப்பு

1482. அதீனமா மெய்ப்பதத்தா டற்ற வகத்தோர்
ததியராப் போற்றுந் தகைமையோர்—அதேவடிவா
அந்த வருட்பதத்தா டாழ்வோமாத் தம்மோடுமற்
றெந்தமையுங் கூட்டுமியல் போர்.

1483. கூத்தாடு மோகக் குடில வகந்தையற
நீத்தோரே சாந்த நிறைதவத்தோர்—பேயத்தேரைத்
தண்ணீராக் காணுந் தடுமாற்ற வேட்கையற
வுண்ணீர்மை கண்டவுர வோர்.

1484. அகத்தைநா னற்றொழியக் காணி லருட்சீர்
முகந்தொளிரு மன்னர் முகத்தே—சுகந்தத்தும்பப்
பொங்குசிவ ஞானறு பூதிசேர் தம்மியல்பு
மங்கலமா வோங்கும் மலர்ந்து.

1485. மெய்ந்நா னகத்தே விளங்கினு னமயம்
பொய்ந்நா னுருக்கரந்து போகுமால்—பொய்ஞ்ஞால
வாழ்விற் கலங்கு மனந்தெளியத் தன்னையோர்ந்
தாழ்வதகத் தான்றோர்க் கறிவு

1486. நானற் றொழிந்த நடையாளர் சுத்தமனம்
மோனப் பரமா முகந்தொளிரும்—ஊன
வுடலுலகப் பார்வையோ டொட்டிக் கலங்கார்
கடவுளியல் சார்ந்தகருத் தர்.

1487. இடக்கரா மோகச்சிற் றின்பமயல் வேட்கை
கெடக்கிளர்பே ரின்பமயக் கேணி—விடக்குறுபுன்
காயவகங் காரக் களியற் றொளிர்சொருப
நேயமா நிற்பவர்தந் நெஞ்சு.

1488. காண்பார் மயங்கலன்றிக் காட்டலுறுந் தான்
[மயங்கான்
பூண்பணவா மம்மாப் புமத்திறக்கும்—மாண்பாக்கும்
கற்பிதராஞ் சீவர் கலங்கலன்றிச் சித்சொருபத்
தற்பரமாந் தான்கலங் கான்.

1489. அகந்தைமுனைப் பற்றொழிச்சுத் தான்ம சோரூப
முகந்துமகப் பெற்ற முனிவன்—சுகந்ததம்பு
பூரண சுருர்த்தி பொருந்தலாற் றன்னிற்றன்
பூரணவாழ் வுற்ற புமான்.

1490. விளக்கமா மோன விசுத்த சொருபந்
திளைக்குமுப சாந்தவருட் சித்தர்—அளக்கலரு
சிற்பரமே யான திறத்தா லடைந்தார்க்குக்
கற்பகமே யாவர் கனிந்து.

1491. முனைப்பற் றொழிதலான் மோகங்கூர் பேத
நினைப்பற் றொழிந்தவர்தந் நெஞ்சில்—தனைப்பற்
றகண்ட சொருபஞா னனுபவ மோன
சுகந்தலைப்பட் டோங்குந் தொடர்ந்து.

1492. மறவியறக் காண்பார் மனமயக்க மாம்பொய்ப்
பிறவியறக் காணும் பெரியோர்—அறிவுண்மை
கண்டமர்தா லன்றிக் கலங்குமனப் பொய்த்
விண்டொழியா வேறு விதந்து. [தோற்றம்

1493. உடலுலக வாழ்க்கையே யுண்மையெனு மோகக்
கடலிலகப் பட்டுக் கலங்கார்—திடவுணர்வா
மோனந் தெளிதலான் முத்தியே தன்சொருப
மானவருள் வித்தகத் தார்.

1494. எங்கணுமே தானா யிருந்தொளிருந் தன்சொருபப்
பொங்கெழிலிற் சொக்கலுற்ற புந்தியோர்—பங்க
[மிலாத்
துங்கவருட் பார்வைச் சுடரொளியின் கண்ணதே
பொங்குலகக் காட்சிப் புலன்.

1495. எக்காலு முள்ள வியல்பான தன்சொருபம்
மிக்காக வோங்கு வெறுவெளியாய்—தொக்க
வருட்பரமா மஃதே யகமென் றறிந்தார்
மருட்பா ழகங்கடந் தார்.

1496. தன்னியல்பா மோனவருட் சால்பு தலைப்பட்ட
மன்னவர்தம் மாட்சி யளப்பரிதால்—அன்னவர்மெய்
போத சொரூபவருட் பூரணமாந் தற்பரமாச்
சார்தலா லெங்குந் தழைத்து.

குறிப்பு:—அளப்பரிதால் - ஆல் அசை நிலை.

1497. வெளியாக வுள்ளே விளங்கு சொரூபத்
தெளிவான சுத்த சிவத்தில்-விளைவான
சாந்தானு பூதி சகஜவாழ் வாகவகத்
தார்ந்தா ரருட்பெரி யார்.

1498. துடிப்பற்ற வாழ்வே சொரூபானு பூதிக்
கடிப்படையென் றாய்ந்தறிந்த வான்றோர்—கடைப்
மோனத் [illegible] பெருமானுயர் [illegible]
வானத் தவர்காணு வாழ்வு

1499. உள்ள பொருளை யுணர்ந்தார் [illegible]
றெள்ளத் தருவதொன் [illegible]—[illegible]அருட்
பேரின்பச் சிற்பரமாய்ப் பேதக் [illegible]
சேரல் புருவாஞ் சிவம்.

குறிப்பு: அறிந்தார்க்கு எல்லாம் சிவமயம் என்பதாம்

1500. இறைவனருள் வாழ்விற் பேரின்பந் திளைப்பர்
அறிவனுபூதி பெற்ற வகந்தோர்—நிறைவொளிமா
மோனவொளி யுள்ளத்தே முற்றலாற் சிற்பரமே
யானவியல் சார்ந்தா ரவர்.

1501. கற்பனைதீர் மோனவருட் காட்சியாற் கைவல்யச்
சிற்பரமே தாமாச் செழித்தவுற்றோர்—முப்புடியாம்
போர்க்களத்தே சிக்கிப் புலர்புறர் சுட்டுபுல
நோக்கத்தே தேக்கருனித் தோர்.

1502. சித்தமா வுள்ள சிவோகஞா னானுபவப்
புத்தமுத வாழ்க்கைப் பொலிவாலே—இத்தரையிற்
பொங்குவோர் பொன்னுலகப் புத்தே ளிரும்போற்றுந்
துங்க ருயர்பூ சுரர்.

1503. எள்ளத் தனையு மிடரில்லை தன்னுருவா
வுள்ள சிவத்தை யுணர்ந்தார்க்குக்—கள்ளவிழ்பூங்
கற்பகமா மோங்குசிவக் காட்சியே தன்மயமாமெய்
யற்புதவாழ் வாக வகத்து.

குறிப்பு :—சிவக்காட்சியே அற்புதவாழ்வாக அகத்துச்
சிவத்தை யுணர்ந்தார்க்கு எனக் கூட்டுக.

1504. எண்ணாமற் றேயோக வியல்வெளியாஞ் சிற்பரத்து
வண்ணமா மைக்கும் மனத்தவர்க்குப்—பண்ணுஞ்
செயலொன்று மில்லை சிவசொருபந் தானே
மியலன்றே யன்னா ரியல்.

1505. துறவொழுக்கம் பூண்டமனத் தூயோரை நாடி
யறவொழுக்க மெல்லா மடையும்—நிறைவொழுக்க
மானசிவ யோக மடைந்தொளிரிற் சிற்பரத்து
வானரசா வாழ்வா ரவர்.

1506. அறிவை யறிதலா லன்றி யொருவற்
கறிவமைதி சேரா தகத்தே—அறிவமைதி
சேர்ந்தாரே சுத்த சிவானுபவக் கைவல்யம்
ஆர்ந்தா ரகந்தைமுனைப் பற்று.

1507. சிவத்தையே தேறித் திளைக்குமன்பர் மோக
வவத்தையிலே சிந்தை யழுங்கார்-தவத்தியல்சேர்
உண்மைநோக் கத்தா லுலகைக் கடந்தொளிர்
திண்ணியார் சேமமுற் றார். [மெய்த்

1508. பொய்தீர்ந்த காட்சிப் புலவோ ரனுபவத்தாற்
கைதேர்ந்த ஞானக் கனலென்பர்—மைதாழ்ந்
தடங்கிய நாக *மடலைசேர் வெந்தீ
ஒடுங்கிய வுள்ளத் தவர்.

*அடலைசேர் வெந்தீ - நீறு பூத்த நெருப்பு.

1509. உண்மை யிரண்டற் றொளிர்சொருபத் தன்மை
[யால்
உண்மை யுணர்ந்த வுரவோர்க்கு—வண்மைசேர்
மோனந் தெளிவாக மூளு மிதயத்தில்
ஊனமனச் சேட்டை யொழிந்து.

1510. உள்ளம் பழுத்தோ ரொளிசே ருபசாந்தி
வெள்ளம் படிந்து விசுத்தராய்த்—தெள்ளத்
தெளிந்தசிவ சாயுச் சியவுணர்ச்சி யாலே
யளைந்தா ரமுதத் துவம்.

1511. தனிமையாத் தங்குபா தத்துவத்தை நானற்
றினிமையாக் கூடி யிருக்கை—மனமயல்சேர்
சங்கந் தணந்து தனித்தொழுகும் மாதவர்தந்
துங்கமனம் பேணுந் தொழில்.

1512. உள்ளமைதி சான்ற வுணர்வின்ப மில்லாது
தெள்ளமுத முண்டுந் திருப்தியில்லை—தெள்ளிதாய்ச்
சஞ்சலமற் றுன்றமைந்த சந்தோஷ சித்தரது
நெஞ்சம்பே ரின்ப நிலை.

1513. தனைக்கலந்த தெய்வத் ததீயர் சரிதை
நினைக்க நினைக்க வினிக்கும்—மனக்கவலை
கெட்டொழிய மாற்றுங் கிளர்ச்சிசே ருண்மைமகிழ்
வுட்டெளியத் தேக்கு முணர்வு.

1514. அறிவான மோன மடைந்தோ ரதனிற்
பிறவான ஞானமொன்றும் பேணார் அறிவான
சுத்தவருட் கேவலமாத் துன்று சொருபமன்றி
மித்தையென்பர் மற்றுப் பிற.

குறிப்பு :—மித்தை - பொய்த்தோற்றம்.

1515. உலைவிலா வுண்மை யுணர்ச்சிதரு சாந்திக்
கலையிலே யுள்ளங் கலந்தோர்—கலைபிறவற்
றுசையின் மூழ்கா ரமிர்தசொரு பானுபவத்
தேசியன்று வாழ்வர் சிறந்து.

1516. காமினி காஞ்சன மென்பவற்றின் காதலறத்
தாமினிது வாழத் தலைப்பட்டோர்—சேமநிதி
யான சொரூப வமுத சமாதியால்
வானவரின் மிக்குவாழ் வார்.

1517. உடல்களோ வன்றி யுளதாக மற்றொன்று
வேட்கையோ வேட்கையோ தானுமிலை—மட்டும்
உடங்கூர்ந்த யான வுபாதியுணர் வோய்ந்து
கெடலாய்க் கிளர்சொரூபத் தோர்க்கு.

1518. இருவினை யெனமயங்கிச் சிந்தை யிளகார்
ஒருவீறு சான்று வுரவோர்—பெருவீர
திட்டராய்ப் போக நிலையுணர்ந்த ஞானிகளே
பட்டராய்ப் பாசமறுப் பார்.

1519 ஈன்மருளப் பட்டபழி யாக்கையினின் றிப்பொழுதே
யாண்டருளப் பெற்றாரகல்வுற்றார்—பூண்டமருட்
பொல்லாங்கா மூலமயக்கிப் போர்வையாம் பாசமற்று
நல்லாங்கு ஞான நண்ணி னார்.

1520. சற்போத மானவருட் சார்பறிந்து சாட்சியா
வெப்போதுந் தப்பா திருத்தே—நிற்போருக்
கூனவகங் கார வுணர்வுதியாத் தன்னிழப்பால்
ஈனமாஞ் சாக்கா டிலை.

1521. உட்டுளையில் லாத வுகாரப் பரவெளியாச்
சுட்டறிவு கெட்டுத் துலங்குவார்—சுட்டற்
றொளிர்சொரூப மாக வுளத்திலுறை யாண்டான்
உளவறிந்த வுள்ளத் தவர்.

உட்டுளையில்லாத வெளி - பின்னமற்ற பிரம்ம பூரணம்.

1522. நிம்மதிசேர் நிஷ்டைகூர் நெஞ்சா லவிரோத
சம்மதிசேர் சுத்த சமரசத்தோர்—எம்மதமும்
நன்றாக வுண்மை நடுநிலைக்கோர் நாயகமாய்
வென்றார் மயல்வேற் றுமை.

1523. உபாதி யகந்தை யொழிந்தமெய்ஞ் ஞானிக்
கபேதமா வொன்று மகிலம்—அபாரவருட்
சுத்தசச் சிற்பரமாத் துன்றுமதிஷ் டானமாம்
புத்தனுக்கில் *பேதப் புடி.

*பேதப்புடி – திரிபுடிபேதம்.

1524. பெற்றரே பெற்றர் பிறவிப் பெருமபயனைக்
கற்றர் கருதுங் கனமாட்சி—மற்றுர்போல்
அன்னர் மயக்கத் தமிழ்ந்துலகுக் காட்பட்டுத்
துன்னர் பிறவித் துயர்.

## 253. ஞானிகள் மாட்சி

1525. நானற் றெழிந்தமெய்ஞ் ஞானிதன் மோனத்தால்
வானத்தின் மிக்கபெரு மாட்சியான்—வானங்
குலேவுற் றிடினுங் குலவுதிட ஞானி
நிலேயிற் கலங்க லிலன்.

1526 சிவத்திலே சித்தந் திளேத்தலான் ஞானி
யவத்தைையிற்பட் டுள்ள மழுங்கான்—சுவத்தமாத்
துன்று சொருப சுகானுபவத் தாலிதயத்
தென்றுமோ ரிச்சை யிலன்.

1527. சுவச்சமாத் துன்று சொருபானு பூதி
யவிச்சின்ன மாக வடைவால்—அவிச்சைத்
துயிலுணர்ந்த ஞானி துவிதபே தங்கூர்
மயலின் மடுத்த லிலன்.

1528. ஞானி யொருவனே நாதனன்றி யிவ்வுலகுக்
கேனேயோ ரெல்லா மடிமைகளே—ஊன
வுலகமய ராக *வொழிந்தோ ரவனவ்
வுலகங் கடந்த விறை.

*ஒழிந்தோர் - மற்றவர்.

1529. தரும சொருபவருட் சார்புணர்ந்த ஞானி
தரும சொருபமே தானய்க்—கருமக்
கலக்கமற்ற சுத்தவருட் கைவல்ய சித்தித்
துலக்கமுற்று வாழ்வன் சுபத்து.

குறிப்பு :—தருமம் - அகிலமுந் தாங்கும் தயாதரும
தத்துவமான பரம்; சுபம் - சிவம்.

1530. தன்முன் னகிலஞ் சலிப்பதன்றித் தான்சலியாத்
தன்மெய் யறிந்தோன் சதாசிவமே—கன்ம
சரீரிபோற் றன்பிறராற் காணப் படினுந்
துரீய சொரூப னவன்.

1531. துரிய சொரூபவருட் சோதிப் பிழம்பாம்
பெரியபொருள் கைவரத்தாம் பெற்றோர்—தெரியும்
அகிலங் களுக்கு மொருபே ரரசாய்
அகம்பிரம்ம மாகவாழ் வார்.

1532. தெளிவாக வுள்ளந் திறந்தொளிரும் மோன
விளைவால் வெளியான மெய்யர்—பிளவான
பந்தமுத்தி யற்றுப் பராற்பரமா வுள்ளவியல்
விந்தைசேர் கைவல் லியர்.

1533. பரவெளியாந் தன்சொருபப் பண்பா லிருள்சே
ருருவெளியை மிஞ்சி யொளிரும்—கரவுறுவெம்
பாசபந்த மானமருட் பார்வைசேர் பொய்யகந்தை
மாசகன்ற முத்தன் மனம்.

1534. பேதவுல குண்மையாப் பேதுறார் கேவலசற்
போதவுரு வாகப் பொருந்தினோர்—போதவுரு
அத்துவித மான வருட்பரமா நீடலுறு
முத்தியுரு வான முதல்.

1535. பணிசெய் திறைவன் பதத்துக் ககந்தை
யுணவா வொளிர்மெய் யுணர்வோர்—பணிவே
யுருவாக வாழ்வ ரொழிவில்பே ரின்பத்
திருவாக வுள்ளஞ் செழித்து.

1536. திருத்தயா வுண்மை தெளிந்தோ ருலகிற்
கருத்துமாய் சூற்றுக் கலங்கார்—கருத்திற்
பொருத்தமா மோனவருட் பூரணவாழ் வோங்கத்
தரித்தலாற் றம்மிலே தாம்.

1537. பருவரல்சேர் மோகப் பதைப்பற் றெழியத்
திருவருளாற் சித்தந் தெளிந்தோர்—வெருவரலாற்
சிந்தை விதிரார் சிவோகஞா னனுபவ
விந்தைசேர் வீரியமிக் கார்.

15

1538. தெள்ளத் தெளிந்தோர் செழித்தசிவ பூரணத்திற்
கள்ளக் கரவுமனங் காணாராய்—உள்ளத்
தருட்பரமே சான்றா வகந்தைமல மாசற்
றிருப்பரது வன்றே வியல்பு.

1539. தன்மையி னுண்மை தலைப்பட்ட ஞானிக்கு
நன்மையே யன்றியென்றுந் தீமையில்லை—இன்மை
வெய்யமனத் தாப வினைவுக்குக் காரணமாம் [யால்
பொய்யகங் காரப் புணர்ப்பு.

1540. தன்னு ளொடுங்கித் தரித்தசிவ ஞானியர்க்குத்
துன்னுமயற் றெரந்தத் தொடர்ச்சியிலை—அன்னியச்
டர்றபரி பூரணமா யத்துவிதச் சிற்பரத்து [சுட்
நிற்றலா லன்னவர்தந் நெஞ்சு.

1541. புத்திமா னைவருட் போதப் புலவோன்சிச்
சத்தியா னைகந் தரித்தொளிர்வான்—யுத்தியாங்
கற்பனைகள் பொன்றக் கடந்தொளிர்சாந் தானுபவத்
தற்பரமாந் தன்னிலே தான்.

1542. மானாபி மான மயக்கமற்று மற்றனைத்துய்
வானைக முற்ற வளைத்தெழுந்து—தானைச்
சுடர்வதாம் போத சொரூபத்திற் செய்யக்
கடவதொன்று காணா னவன்.

1543 விந்தைசே ரான்ம விசாரத்தால் யானென்று
முந்துமகங் கார முனைப்பறலாற்—சொந்த
வியலடைந்த ஞானிக் கிதுவென்று சுட்ட
வயலகன்று நிற்கு மறிவு.

1544. சிவத்தி லமுழ்ந்தத் திளைத்த மனத்தா
* லவத்தை யகன்ற வதீதர்—சிவத்தியல்சே
ரற்புதஞா னானுபவ மார்ந்தபர மேஷ்டிகள்செஞ்
சொற்பதமே துங்கப் பதம்.

*அவத்தை - ஜாக்ரஸ்வப்நம் முதலான அவஸ்தாபேதம்.

1545. புத்தரருட் பார்வை பொருந்திலன்றி மோனவியற்
சித்த விகாசவொளி சேராது—புத்தர்
பதத்துணையே மிக்கவருட் பற்றுக்கோ டாகச்
சதிர்த்தொழுக வேண்டுந் தகைத்து.

குறிப்பு : புத்தர் - ஞானிகள்; சதிர்த்தல் - தேர்ந்
தறிதல்

## 254. அந்தாதி

### க. உள்ளத்தான்

(கொச்சகக் கலிப்பா)

1546. சுதந்தரவாழ் வாகத் துலங்கு சொருபப்
பதந்தருவா னைவருட் பார்ப்பான் பரிவா
லதெந்துவென் றுள்ளத் தபய மளித்தான்
இதந்தருமெய்ஞ் ஞான வியல்விளக்கத் தாலே.

1547. விளக்க வியல்பான மெய்யன், அகந்தைக்
களக்கமறக் காணுங் கருத்தன், கருத்தா
லளக்க வொண்ணாத வகண்ட சொருபன்
உளக்கணெனக் குள்ளா னுயிர்த்துணையாத் தானே.

### உ. எல்லாம் ஒன்று

1548. எல்லாமொன் றாக வியல்சொருபத் தன்மையுணர்
வல்லாமற் பூரணத்துக் கானவழி வேறில்லை;
சொல்லாமற் சொன்னவொரு சொல்லால், அகந்தை
[மனப்
பொல்லாமை போகவருட் பூரணமெய் பொங்கியதே.

1549. பொங்கப் பொலிவித்தான் புந்தியைத்தன் சேவடியிற்
சிங்கக் குருவேயாச் செம்மாந் திருக்கநான்;
மங்கிக் கழிந்ததுபொய்ம் மாறுபி மானமயற்
பங்கக் கருத்தான பாசப் பசுத்துவமே.

1550. பாசப் பசுவாப் பதைத்தேன் பரசிவத்
தேசப் பிரானருளாற் சித்தமலப் பாழ்கடந்து
நேசப் பரமபத ஞேயந் துலங்கலுற்றேன்;
பேசச்சிந் திக்கப் பெரிதரிதவ் வித்தகமே.

## க. கள்ளக்கலக்கம்

1551. கள்ளக் கலக்கக் களிசே ரகந்தையால்
உள்ளப் படாத வுணர்வுருவா வுள்ளத்துத்
தெள்ளத் தெளிந்த 'சிவோக' சொரூபத்தில்
வெள்ளப் பரமசிவ வேட்கையீ டேறியதே.

1552. ஈடேறப் பெற்றேன் இறைவ னியற்பரமெய்
யூடேயென் னுண்மையுணர்ந் தொன்றலுற்ற மோன
[த்தால்,
வாடேன் வதங்கேன் வறண்டுமனத் தாடத்தால்
வீடேன் பசுபாச மித்தியா சொப்பனத்தே

## உ. சக்ஷுதீக்ஷை

1553. மோனனு பூதி முயங்கினே ருள்ளத்துத்
தானே யனுபூதி சாரமாத் தங்குவோன்
யானென வென்னை யிதயத்து மோனவருள்
வானேதா னுவனைத்தான் வைத்தகண் வாங்காதே.

1554. வாங்காத நோக்கால் மருமமாக் காட்டினன்
பாங்கான சுத்தவருட் பார சொரூபவெளி
ஈங்கா மிதேகாண்பே ரின்பவியற் பூமியென்றேன்
ஆங்கார மோகமுனைப் பற்றொழிந்த வாழத்தே.

குறிப்பு:—என்று ஆழத்தே சொரூபவெளி காட்டினன்
எனவியையும்.

## ங. மண்டு சிவபோதம்

1555. மண்டுசிவ போகம் மனமொருங்கி யுள்ளுணர்வா
லுண்டு திளைக்க வொருப்படார் ஊனுயிராய்
மிண்டுபடு மோக வெறும்பா ழியற்கையோர்
கண்டு களிப்பர் கனவுலகப் புன்புலமே.

1556. புன்புலமே நோக்கிப் பொழுதுதாம் போக்கலன்றி
நன்புலமா வுள்ளசிவ ஞானநாட் டங்கூடார்,
இன்பதுன்ப மாக விருட்படுபாழ்ங் கற்பனையை
நம்பியுண்மை போல நவைப்பட் டியல்வோரே.

1557. நவைப்படுபொய்ப் போக நடலைசேர் வாழ்வைச்
சுவைபடா தேயகற்றிக் கசந்த சுட்டுணர்வற் றோய்ந்து
தவப்படுமெய்ஞ் ஞான சமாதியா லுண்மைச்
சிவப்படுபே ரின்பத் திறந்தேர் கிலாரே.

1558. திறந்தேர் கிலாதே தியங்கி மனத்தா
லுறழ்ந்தே யுயர்ந்தோ ருரையோடு, தாமே
சிறந்தார்போ லெண்ணிச் செருக்கிப் பரத்தை
மறந்தே யொழிந்தார் வருந்தத்தக் காரே.

குறிப்பு :— உரையோடு உறழ்ந்தே எனக் கூட்டுக.

1559. வருந்தலின் றாக மடக்கி மனத்தைப்
பொருந்தக்காண் கற்பிற் புலமல் புலத்தே,
தெரிந்திட வேண்டு சிவானுபவ பூமி
நிரந்தர மாகத்தந் நெஞ்சிற்காண் பாரே.

குறிப்பு :—புலத்தே பொருந்த எனக் கூட்டுக; புலமல் புலம் - சுட்டறிவுக்குப் புலமல்லாத சுத்த வறிவான சொருபம்

1560. காணக் கடவசிவக் கைவல்ய மானவுண்மை
மாணக் கலந்தறிவின் வண்ணமே யாயிருக்கக்
காணக் கலங்கிக் கருத்தழிகை 'நான்'முளைத்து
வீணிற் சுழலுமதே விப்பிரம மாத்திரமே.

1561. விப்பிரமஞ் சென்றறிவின் விடுபடவே தன்சொருபச்
சிற்பரமாந் தற்பரனைச் சேவித் துபாசிக்கை;
கற்பனையின் மூலமாங் காரிருட்பா ழாற்றொழியத்
துப்புரவாந் தனையெய்த் தூரியவொளி யோட்டுறுமே.

குறிப்பு :—உபாசிக்கை விடுபடலேயாம் என்க.

1562. துரியவொளி யுலகங்கிற் சுட்டறிவாம் பொய்ந்நான்
பிரிய விளங்கு பிரம்மமாந் தன்பாற்
சரியவிருட் பாழ்மயக்கக் கற்பனையைக் காணும்
மருவியதின் றாக மனந்தெளியுந் தானே.

1563. தானு வியல்சொருபத் தத்துவமாந் தற்பரவாழ்
வானு தொளிர வருட்பரமே கூட்டிவைக்கும்
மோனானு பூதி முகப்பவுனக் கூட்டுவதால்;
'யா'னென வுன்னை யிறைவனுக்கூ ணைக்குத்தே

குறிப்பு :—ஊட்டுவதால் கூட்டிவைக்கும் எனக் கூட்டுக.

1564. ஊனு வியன்று வுணர்வு பரமேயாய்
வானு னுயிர்க்கு வளம்பெறவே மாட்சிபெறக்
காணாத வுண்மையாங் கேவல் லியங்காணும்
மானு வுலகுஞ்சின் மாத்திரமா மாண்டமே.

## 255. வாழ்த்து

க. பாதம்

(வெண்பா)

1565. யானேயா னாக வியல்வதா மான்மசுகத்
தேனேயான் மாந்தவுளந் தேக்கினேன்—வானேயாக்
கைம்மாறு வேண்டாக் கடப்பாட் டிறைரமணன்
செம்மாண் கழல்வாழ்க சீர்த்து.

1566. பெற்றியால் வாழி பிரம்மமா மெய்ஞ்ஞான
வெற்றிசேர் பார்வை மிகவழங்கிக்—கற்றுச்
சொலியான வென்பொய்த் துவித மயக்கக்
கலிதீர வாண்டான் கழல்.

1567. முனேவா மகந்தை முடங்கலாற் காணு(ம்)
நனவோர் கனவா நழுவத்—தனதியல்பாத்
துன்று சொரூபச் சுடரொளியாம் பாதவருள்
வென்றி விளங்குகமேன் மேல்.

1568. புலப்பின் மயங்கியுழல் போதமுனைப் போய
நிலைப்படுசற் போத நிறைவாய்—உலப்பின்றி
யூழிதோ றூழியுயிர்க் கோம்படையா முண்மையால்
வாழி யடிகளருள் வாழ்வு

(கொச்சகக் கலிப்பா)

1569. தீன மயக்கச் செருக்கரக்காண் கின்றபா
மான்ம சொரூப வவிர்ச்சியால் இம்மையே
தேன்மலிந்த சுத்த சிவங்கே வலவியல்வாழ்
வானபர முத்தியளித் தாண்டவன்றாள் வாழியே.

1570. உள்ளமா வுள்ள சொரூபப் பரவுணர்வைக்
கள்ள வகந்தைமனக் கற்பனை ஞானமா
உள்ளி மயக்க வுலகத துழன்றேமைத்
தெள்ளத் தெருட்டியசச் சிற்பரன்றாள் வாழியே.

1571. அகபர விளங்கவுற்ற வம்மா னடிக்கீ
ழிகமே பரமே யெலாங்கற் பனையா
வகலு விமல்பரமோ னைவபவம் பெற்றேன்;
பகவன் சொரூபப் பதம்வா ழியவே.

1572. மொய்வளர்கா ரணவப்பாழ் மோகத் தழுந்தலாற்
செய்வகையா தொன்றுமே தேர்கிலாப் பேதையேற்
குய்வகையா வுள்ளத் தொளிவளியாப் புக்கபிரான்
மெய்வளர்சீ பாதவருள் விஞ்ஞை விளங்குகவே.

உ. அருள்

(வெண்பா)

1573. ஆண்டவன்றாள் வாழ்க வடியே னுயிர்வாழ்க
ஈண்டவருள் வாழ்க விதயத்தே யீண்டு
நிலவுகமெய்ஞ் ஞான நிறைபத்தி நன்றாக்
குலவுகமெய் யன்பர் குழாம்.

1574. ஆண்டவனுந் தன்மெய் யருணைத் திருப்பதத்தில்
ஈண்டவேனைக் கென்றும்பே ரின்பநிலை—பூண்ட
அருள்விஞ்ஞை வாழி யகத்தா டகமாம்
பொருள்வடிவா மேன்மேற் பொலிந்து.

1575. அவச்செயலா வாணவத்தா லாற்றியன தாமுஞ்
சிவச்செயலே யாவகத்துத் தீர—அவிச்சை
மருள்வற்றச் செற்று மலர்ப்பதத்துக் காண்ட
வருள்வெற்றி வாழ்க வகத்து

1576. வாழி சிவசமயம் வாழி சிவதருமம்
வாழி சிவபத்தி வையகத்தே—வாழியருள
வாழி சிவயோகம் வாழி சிவஞானம்
வாழி சிவானுபவ மாண்பு.

(கொச்சகக் கலிப்பா)

1577. தன்னுள்ளே யானுமற் றென்னுளே தானுமாத்
துன்னுமே கான்ம சொரூப வளங்குலவு
வன்ன வருள்வெளியே வாழ்வாக வென்னகத்து
நன்னெறியல் வித்ததரு நாதனருள் வாழியே.

1578. மண்ணிற் பிறந்து மயக்கமையப்பாழ்ங் கலைகளிற்
கண்கலங்கி மாழ்குங்கால் கண்கலக்கந் தீரவெனக்
குண்மைப் பரம்பொருளா வுள்ளந் தொளிர் சொரூப
வண்மைசேர் வாழ்வளித்த வள்ளலருள் வாழியே.

1579. தொந்தமனக் கர்ம சொட்டனைப்பாழ் தூர்த்
[தொழியப்
புந்தியிற்புக் காண்டருந் புன்மை யென்னகத்திற்
சிந்தையறப் போக்குசிவச் சிற்பரமா ஞானவச்
சந்தவியல் வாழ்வாத் தழைத்தவருள் வாழியே.

1580. இருள்சூழ் முலகத் தெதிர்விகற்ப(ம்) நோக்கி
வெருள்பா ழகந்தைமனோ வேகமற உண்மைக்
கொருள்வாழ்வாத் தன்று சிவக்கே வலச்சீ
ரருள்வாழி வாழி யடியோ மகத்தே

1581. மாயமாத் தோன்று முகிலத்தில் யானெனதென்
றேயமா வாசை யிரண்டுமற்றுத் தன்சொரூப
நேயவுணர் வூற அதிசயவா னந்தவருட்
பாயசமுண் பித்தான் பரங்கருணை வாழியே.

1582. அடியோங் களைத்தன் னறிவொளிசேர் மேலைக்
குடியோங்க ளாகக் குறிக்கொண்ட கோமான்
படியோங்க வந்தவருட் பார்ப்பான் தியாகக்
கொடியோங்கு தெய்வவருட் கோலோங் குகவே.

1589. உள்ளத் தொளிர்சொருப வுண்மையைவஞ் சித்த
கள்ளக் கரவுசேர் காயக் களியனேன் [வகக்
துள்ளித் துடித்துழன்ற துட்டவகப் பேய்மதியின்
கள்ளமறக் கண்டவருட் கண்ணப்பன் வாழியே.

## ௪. வாழி

1590. அற்றப் படாத வருள்விளக்கத் தால்அகந்திற்
பற்றப் படாத பரசொருபம் பற்றியது
மற்றெக் கருத்தும் மடுக்கவொணு மாட்சியாற்
குற்றப் படாநிர்க் குணமவுனம் வாழியே.

1591. ஊன வகந்தையுணார் வுள்ளத் தொழிதலால்
ஏனையுணர் வெல்லா மிகப்ப விமற்பரமாம்
மோன வுணர்வே முழுமுதற்பே ரின்பநிலை
வானவொளி யாகவளர் மௌனவியல் வாழியே

1592. பூரணசற் போதமாப் பொங்கருளின் கூர்மையால்
மாரணமாத் துன்றுயிர மாதங் குடல்பிளக்க
ஓரகமா வுள்ளபர வுண்மை யுணர்ந்துகொண்டேன்
தாரகமா வுள்ள சதாசிவச்சீர் வாழியே.

1593. பாழைக் கடந்த பரஞ்சோதி பாதத்தில்
வாழக் கிடைத்தேன் மவுனு பூதிபெற்றேன்
ஏழைத் தொழும்பனைத்தன் னின்னருளா லின்ப
[வெள்ளத்
தாழப் படிவித்த வாண்டவன்சீர் வாழியே.

1594. என்னுண்மை யாக வெனக்குரிய சிற்பரச்செம்
பொன்னினும்வே றுகப் புலவுலகப் பூண்காணேன்;
மன்னு சொரூபசிவ மாட்சியால் வாழவெனக்
கன்னவியற் காட்சியளித் தாண்டவன்சீர் வாழியே.

1595. கள்ளமார் மோகமனக் கற்பனைமெய் யாக்கலங்கித்
துள்ளி யெழுந்து சுழன்றமடப் பொல்லேனுக்
குள்ளமா வுள்ளதன் னுண்மையென் னுள்ளுணர்
றெள்ள வொளிர்வித்த சிற்பரன்சீர் வாழியே. [விற்

1596. சிற்பரமே தானுத் தெரிய விளங்கலாற்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்யங் கண்டுகொண்
அற்பனே னுக்கவ் வபரிமிதப் பேறளித்த [டேன்;
பொற்புறுசற் போதவருட் புண்ணியன்சீர் வாழியே.

1597. மாருக் கவலையான் மாழ்கலுற்றேற் கான்றவருட்
பேரு வளித்த பிரம்மானு பூதியால்
வேரு ரையும்பணியா விந்தைசேர் சொந்தவியல்
விருப் பளித்தபிரான் வித்தகச்சீர் வாழியே.

1598. கல்லாண்ட நெஞ்சங் கனிந்துருக வுள்ளம்புக்
கல்லாண்ட பாழகப்பே யற்றெழியச் செற்றபிரான்
பல்லாண்டு வாழியெனப் பண்ணுரைந்த செந்தமிழ்ச்
[செஞ்
சொல்லாண்ட பாவாற் றுதித்துமகிழ் கின்றேனே.

1599 தாளே கதியாத் தலைப்பட்ட முற்றவத்தால்
ஆளா வடைந்தே னகத்தே அகந்தைமனக்
கோளாம் பிரமாதக் கூற்றமறக் கூர்ஞான
வாளா லகற்றிளனை வாழவைத்தான் வாழியே.

1600 தானான சிற்சொருப சாட்சாற்கா ரந்துலங்கும்
மோனானு பூதி முகக்கவகத் தான்றவருள்
வானாக வென்னை வளைத்தலுற்ற வாற்றலவ்
வானேயா வென்னுருவை மாற்றினான் வாழியே.

1601 ஆனாத சுத்த வருள்வெளியாத் தானவிர்மெய்ஞ்
ஞானா தவனைவென் னள்ளிதயத் துள்ளியைபால்
யானேர் தகவுபெறத் தன்னோ டிரண்டறுமெய்ஞ்
ஞானானு பூதிநிலை நல்கினான் வாழியே.

1602 ஆன்றபரஞ் சோதி யருள்விளக்கத் தாலகத்தில்
மான்றவகங் கார மயக்கமனக் கற்பனைதீர்
பூன்றவிஞ் ஞானப் புலந்துலங்க வென்னுருவா
வூன்றலுற்ற வொட்பநுட்ப வுண்மையொளி வாழியே.

குறிப்பு :— விளக்கத்தா லகத்தில் விஞ்ஞானப் புலந்
துலங்க எனவியையும்.

1603. காண வொணுதவியற் கைவல்ய மோனநிலை
ஆணவமா மோகமுனைப் பற்ருங் கடைந்ததால்
வேணவா முற்ற விளைந்தவென் னுள்ளுணர்விற்
பூண வியன்றசிவ பூரணந்தான் வாழியே.

1604. மாசடைந்த வூத்தை மனத்தால் விலங்கேபோற்
பாசக் கடலிற் படிந்து கலக்கலுற்ற
நீசனே னுள்ளத்து நீங்காத சுத்தசிவ
நேசமளித் தாண்டவிறை நீடூழி வாழியே.

1605. ஏசப் படாத வியற்சிற் பரவாழ்வாப்
பேசப் பெறுமெய்ப் பெரும்பதமா மோனத்து
நேசமிலாப் பொய்ப்படிற்று நீசவகப் பேயேனைத்
தேசுபெறச் சேர்த்தவருட் சீலகுரு வாழியே.

1606. தன்னையன்றி நானில்லாத் தன்மை தழைத்தலால்
என்னதெல்லாந் தன்னதே யானெனது சற்று
உன்ன வொணுவவ் வுதாரமோ னுனுபவத் [மில்லை;
தென்னை யமிழ்த்தியபே ரின்பவிறை வாழியே.

1607. இம்பரும்ப ராசை யிகந்தொழிய வுள்ளத்திற்
செம்பதவாம் வான சிவானுபவக் காதலொடு
நம்பவுற்ற வன்பரைமெய்ஞ் ஞானு பூதியிற்சேர்த்
தம்பரமே யாக வவிர்சொருபன் வாழியே.

1603. நல்லதொரு சுத்தமெய்ஞ் ஞான சொருபமே
எல்லவருக் கும்பொதுவா வென்றுமுள்ள சொந்த
[மென்று
சொல்லவொணு மோனவருட் சொல்லா லனுபவ
புல்லியே னுள்ளம் புகட்டினுன் வாழியே. [மாப்

1609. ஓமென்று வேத முரைக்குமவ் வுண்மையே
நாமென் றிதயத்து நல்லனு னுனுபவச்
சீர்மன்ற வோர்வித்தான் சிட்டர்சொல் சீரமண
நாமன் றயாபரன்மெய்ஞ் ஞானவித்தை வாழியே.

## 256. முடிவுரை

1610. மரமே யனையஜட மத்தனேன் சுத்தப்
பரமான மோனப் பதத்திலே வாழ
உரமான வுண்மையுணர் வூட்டினுன் பாதஞ்
சிரமே லணிந்து சிறக்கலுற் றேனே.

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து